ஹிதபாஷிணீ வெளியீடு நெ.1

# ஸ்ரீ ருத்ரம் - சமகம்

தமிழில் பதவுரை, கருத்துரை, விளக்கம், ஒவ்வொரு
மந்திரத்திற்கும் ரிஷி, சந்தஸ், தேவதை
தியானம், பயன் ஸ்ரீ ருத்ரைகாதசிநீ
பிரயோகம் முதலியவற்றுடன்



3 ஆம் பதிப்பு

உரைகளை எழுதிப் பிரசுரித்தவர்
“பிரவசன ப்ரவீண” “ஸாரோபன்யாஸசதுர”
“வேத வேதாந்த வித்வத்ரத்னம்”
“கீதாம்ருதவர்ஷீ”
பிருஹ்மஸ்ரீ
**R. முத்துகிருஷ்ண சாஸ்திரிகள்**
(மீமாம்ஸா - ஸாஹித்ய சிரோமணி - விசாரத)

காபிரைட்] 1969 [விலை 2-50

3 ஆம் பதிப்பு - 1969.

நமது தமிழ்நாட்டின் இந்து மத அற நிலைய கமிஷனர் அவர்கள், லைப்ரரிகள் உள்ள தேவஸ்தானங்கள், மற்றுமுள்ள அறநிலையங்கள் இவற்றின் நிர்வாகிகளுக்கு இந்த ஹிதபாஷிணி வெளியீடுகள் பதினென்றையும் வாங்கி லைப்ரரி உபயோகத்துக்கு வைத்துக்கொள்ளும்படி உத்தரவு பிறப்பித்திருக்கின்றுர்கள்.

உத்தரவு எண்.
Ref - No : - K. S. Dis 55413/67.
dated 31-1-68.

பங்கஜம் பிரின்டர்ஸ், புதுக்கோட்டை.

# முகவுரை.

ஸ்ரீ பரமேச்வரனுடைய அருளால் "ஸ்ரீருத்ரம் - சமகம்" இரண்டாம் பதிப்பிற்கு ஆஸ்திகர்களின் ஆதரவு மிக அதிகமாக இருந்தபடியால் மேலும் சில புதிய அம்சங்க ளுடன் இந்த மூன்றும் பதிப்பை வெளியிட முன்வந்துள்ளோம். ஸ்ரீ ருத்ரத்தின் மஹி மையைப்பற்றி "ஸ்ரீருத்ர மஹிமை" என்ற தலைப்பின் கீழ் விரிவாக எழுதியுள் ளோம்.

இதில் அடங்கியுள்ள 169 மந்திரங்களும் ஜபிப்பவர்களுக்குப் பலவித பயன் களை அளிக்கக் கூடியவை. மந்திரங்களின் ரிஷி, சந்தஸ், தேவதை முதலியவற்றை அறிந்து, தியான சுலோகத்தில் குறிப்பிட்ட ஸ்வரூபத்தைத் தியானம் செய்து கொண்டு மந்திரங்களை ஆவிருத்தி செய்தால் நிச்சயமாகப் பயன் சித்திக்கும் என்பது பலருடைய அநுபவத்தில் கண்ட உண்மை. "மஹார்ணவம்" முதலிய நூல்களில் ஸ்ரீ ருத்ரத்தின் பிரயோகம் மிக விரிவாகக் காணப்படுகிறது. அதிலிருந்து சிவ முக்கிய மான அம்சங்களை மட்டும் நமது உரையில் குறிப்பிட்டிருக்கிறோம்.

ஒவ்வொரு மந்திரத்தின் இறுதியிலும் ரிஷி, சந்தஸ், தேவதை, தியானம், ஆவிருத்தியின் சங்கியை, பயன் எல்லாம் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இவை பாரா யணம் செய்கின்றவர்களுக்கு மிக்க உதவியாகவுள்ளன என முன் பதிப்பில் கண்ட படி பாராயணம் செய்து நன்மைகளைப் பெற்ற பலர் நமக்கு எழுதி இருக்கின்றனர்.

ஸ்ரீருத்ர பாராயணத்தால் பிரீதியடைந்த ஸ்ரீபரமேச்வரனிடம் நமக்கு வேண்டிய வற்றையெல்லாம் வேண்டிக் கொள்வதற்கென்றே "சமகம்" ஏற்பட்டிருக்கிறது. ஸ்ரீருத்ர - சமக பாராயணத்தால் சித்திக்கும் பயன்களைவிட வேறு எவ்வித பயனை யும் மனிதன் மனத்திஞல் கூட எண்ணிப் பார்க்க முடியாது. இந்த சமகம் முழுவதும் **"வஸோர்தாரையில்"** விநியோகம் செய்யப்பட்டுள்ளது. ஆதலால் இடை விடாமல் தனம், தான்யம் முதலியவை கிடைத்துக்கொண்டே இருக்கும் என்றும் கூறப்பட்டுள்ளது.

**ஸ்ரீருத்ர பாராயண - ஹோமங்களின் சில முக்கியமான முறைகள்.**

ஸ்ரீருத்ர பாராயண - ஹோமங்களில் பல முறைகள் கூறப்பட்டுள்ளன, அவற் றுள் ஸ்ரீருத்ரம், ருத்ரைகாதசிநீ, மஹாருத்ரம், அதிருத்ரம் என்ற நான்கு முக்கியமான முறைகளைப் பலர் அநுஷ்டித்து வருகின்றனர்.

**ஸ்ரீருத்ரம்** - ஒரு தடவை ருத்ரப்ரச்னத்தில் உள்ள 11 அனுவாகங்களையும் பாராயணம் செய்து சமகத்தில் முதல் அனுவாகத்தைப் பாராயணம் செய்து பிறகு மறுமுறை ருத்ரம் முழுவதும் பாராயணம் செய்யவேண்டும். அதற்குப் பின் சமகத்தில் 2 வது அனுவாகத்தின் பாராயணம், இவ்வாறு 11 தடவை ருத்ர பாராயணமும் சமகத்தில் உள்ள 11 அனுவாகங்களின் ஒரு தடவை பாராயணமும் செய்தால் அது ஸ்ரீருத்ரம் எனப்படும். இதைத்தான். "ஏகாதசருத்ரம்" என்றும் கூறுவர்.

**ஸ்ரீருத்ரைகாதசிநீ** - ஸ்ரீருத்ரத்தின் 11 மடங்கு அதிகம் கொண்டது. அதாவது 121 தடவை ருத்ரயாராயணமும், 11 தடவை சமகபாராயணமும் செய்தால் "ஸ்ரீருத்ரை காதசிநீ" எனப்படும். இது "லகு ருத்ரம்" என்றும் கூறப்பட்டுள்ளது. இதில் பத்தில் ஒரு பங்கு ஹோமம் செய்யவேண்டும்.

**மஹாருத்ரம்** - ஸ்ரீ ருத்ரைக்காதசிநியைப்போல் 11 தடவை அதிகம் பாராயண மும் ஹோமமும் கொண்டது "மஹாருத்ரம்"

**அதிருத்ரம்** - மஹாருத்ரத்தைப்போல் 11 தடவை அதிகம் பாராயணமும், ஹோம மும் அடங்கியது "அதிருத்ரம்" எனப்படும்.

ஒரு தடவை சமகத்துடன் சேர்ந்து ருத்ரத்தைப் பாராயணம் செய்தால் "ருத்ரம்" என்றும் 11 தடவை ருத்ரமும்; ஒவ்வொரு தடவையிலும் சமகத்தில் ஒரு அனுவாகம் வீதம் 11 அனுவாகம் கொண்ட சமகம் 1 தடவையும் பாராயணம் செய்யப்பட்டால் அது **"ருத்ரைகாதசநீ"** என்றும், அதன் 11 மடங்கு அதிகம் **"லகுருத்ரம்"** என்றும், அதன் 11 மடங்கு அதிகம் **"மஹாருத்ரம்"** என்றும், அதன் 11 மடங்கு அதிகம் **"அதிருத்ரம்"** என்றும், பிரித்து 5 விதமாகவும் கூறப்பட்டுள்ளது.

இவற்றுள் தற்காலம் ஸ்ரீருத்ரைகாதசிநீ பல ஆஸ்திகப் பிரமுகர்களால் பல சந்தர்ப்பங்களில் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. பலருடைய வேண்டுகோளுக்கிண ங்கி விரிவான ஸ்ரீருத்ரைகாதசிநீ ப்ரயோகமும் (அனுஷ்டான முறையும்) இத்துடன் சேர்க்கப்பட்டிருக்கிறது. இது பலருக்கு உதவியாக இருக்குமென்று நம்புகிறோம்.

ஸ்மார்த்த பிரயோகங்களை சிறந்த முறையில் செய்து வைக்கும் திறமை வாய்ந்தவரும், தர்ம சாஸ்திரங்கள் கிருஹ்ய ஸூத்ரங்கள் முதலியவற்றில் நல்ல தேர்ச்சி பெற்றவருமான காலஞ்சென்ற தஞ்சாவூர் ஸ்ரீ வி. வைத்தியனாத சாஸ்திரி கள் அவர்கள் பல பிராசீன நூல்களைத் தழுவி மேற்படி பிரயோகம் ஒன்றை எழுதி வைத்திருக்கின்றார். அதுதான் தற்காலம் நம் தமிழ் நாட்டில் பெரும்பாலும் பல வைதிகர்களால் கையாளப்பட்டு வருகிறது. இந்தப் பிரயோகத்தை அச்சிட அவரு டைய கையெழுத்துப் பிரதி மிக்க உதவியாக இருந்தது.

தேவநாகர எழுத்தில் ஸ்வரத்துடன் ஸ்ரீருத்ரம் - சமகமும், ஸ்ரீ ருத்ரநாமத்ரி சதி மூலம் மட்டும் அச்சாகி வருகிறது. இதில் தமிழ் எழுத்திலும் இவையெல்லாம் சேர்க்கப்பட்டுள்ளன. விரைவில் வெளியாகும்.

இப் புத்தகத்தை மிக நேர்த்தியாக அச்சிட்டுக் கொடுத்த புதுக்கோட்டை "பங்கஜம் பிரின்டர்ஸ்" உரிமையாளருக்கு நமது நன்றி.

இப்படிக்கு,
R. முத்துகிருஷ்ண சாஸ்திரி
பதிப்பாசிரியர்.

## பத்திரிகைகளில் வெளியான
## முன் பதிப்புகளின் மதிப்புரைகள்

# ஸ்ரீருத்ரம் சமகம்

பரமேச்வரனது மகிமை பற்றியோ, அவனது மூச்சுக் காற்றாகவே கருதப்படும் வேதத்தில் அம்மகிமைகளை எடுத்துக்கூறும் ஸ்ரீருத்ரத்தின் பெருமை பற்றியோ கூற எப்படி இயலும்? எங்கும் நிறைந்த எல்லா மறிந்த, எல்லாம் வல்ல சிவபெருமானின் அருமைகளை அமரபாஷையில் எடுத்துச் சொல்பவை ஸ்ரீ ருத்ரத்தில் உள்ள புனித மந்திரங்கள், முனி புங்கவர்களின் நாவில் உலாவியவை. சரித்திரம் தோன்றாத நாளிலிருந்து நம்முந்தையர்கள் தாங்களும் உலகமும் இகபர பலன்களை அடைவத ற்காக ஜபித்து வந்தவை. ஸ்ரீ ருத்ரத்துக்கு சாயணர், பட்ட பாஸ்கரர், அபிநவசங்கரர் என்ற மூன்று பெரியார்கள் பாஷ்யம் செய்துள்ளனர். தேவநாகரலிபியில் மூலம், தமிழில் பதஅர்த்தம் கருத்துரை, விரிவுரை, மேற் சொன்ன பாஷ்யங்களின் சாராம் சங்கள், மற்றும் ஒவ்வொரு மந்திரத்திற்கும் உரிய ரிஷி, சந்தஸ், தேவதை, தியான சுலோகம், அவை ஒவ்வொன்றாலும் பெறக்கூடிய பலன் இவ்வளவையும் திரட்டி அளிக்கின்றது இந்தநூல். சிறிதேனும் வட மொழி ஞானமுள்ள ஆஸ்திகர்கள் ஒவ்வொருவரும் படித்துப் பயனடைய வேண்டிய உயர்ந்த நூல் இது.

**கல்கி**. 9-7-61

“எல்லா வேதங்களையும் விட ஸ்ரீருத்ரம் சிறந்தது என்பது கூர்ம புராணத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீ ருத்ரஜபத்துக்குச் சமமானது வேதத்திலும் ஸ்மிருதியி லும் இல்லை என்பது ஸூதஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ளது. இந்த மந்திரங்களின் அர்த்தங்களைத் தெரிந்துகொள்ள ஸ்ரீ முத்து கிருஷ்ண சாஸ்திரிகள் அருமையான சேவை செய்துள்ளார். ஸ்ரீ ஸாயண, பட்ட பாஸ்கர, அபிநவசங்கர பாஷ்யங்களைத் தழுவி தமிழில் பதவுரை கருதுரை முதலியவற்றைத் தந்துள்ளார். இதோடு மட்டு மல்ல. ஒவ்வொரு மந்திரத்திற்கும், ரிஷி, சந்தஸ், தேவதை முதலியவைகளைத் தெரிந்து கொள்ள வேண்டும். அபிநவசங்கர பாஷ்யத்திலிருந்து இவைகளையும் இப் புத்தகத்தில் இப் புத்தகத்தில் தந்திருக்கின்றார். ஸ்ரீருத்ரம் - சமகம் எல்லோரும் கற்றுக்கொன்டு வேண்டுமென்று ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகள் கூறி வரும் இக்கா லத்தில் அர்த்தம் தெரிந்து கொண் பாராயணம் செய்ய இது மிக உபயோகமாக இருக்கும்”.

**தினமணி** 30 -9-61.

Sri Rudram, the prayer to Lord Siva, is perhaps the most popular and efficatious among the Vedic hymns. It occurs in the middle of the Yajurveda and contains the highest of mantras, the Panchakshara. It is recited for one’s own purification and attainment of gnana and for the welfare of the country. No ablution in a Siva temple is complete without its recital. This hymn contains 11chapters and 164 mantras. Their very chanting in prescribed swaras by a group of men is charming. Lord Siva’s severl aspects, his omniscence, his omnipresence and omni potence are spoken of in choice and sweet song sounding phrases. The hymn is elaborately

commented upon by Sri Sayana, Sri Bhatta Bhaskara, and Abhinava Sankara. These Commentaries indicate the method of reciting and repeating the individual mantras with their special Rishis, Dhyana slokas, etc, and the usefulness on such repetitions. Sri Muthukrishna Sastrigal has done an incalculable service in giving word for word meaning for this famous hymn and in adding elaborate notes on each mantra çalled from the above commentaries.

Hindu - dated 30-6-57

## ஸ்ரீருத்ர மஹிமை

**भसितकवचितानां बद्धरुद्राक्षदाम्नां**
**अमृतकिरणमौलेर घ्रिमूले स्थितानाम् ।**
**प्रतिदिनशतरुद्रप्रश्नशुद्धाशयानां**
**अमरपतिनुतानामस्मि दासानुदासः ॥**

**ப⁴ஸிதகவசிதானும் ப³த்³த⁴ருத்³ராக்ஷதா³ம்னும்**
**அம்ருதகிரணமௌலேர கி⁴மூலே ஸ்தி²தானும் ।**
**ப்ரதிதி³னஶதருத்³ரப்ரஶ்னஶுத்³தா⁴ஶயானும்**
**அமரபதினுதாநாமஸ்மி தா³ஸானுதா³ஸः ॥**

விபூதி ருத்ராக்ஷங்களை யணிந்து கொண்டிருப்பவர்களும், சந்திரசேகரனது சரணாரவிந்தங்களில் ஈடுபட்டவர்களும், பிரதிதினம் ருத்ர பாராயணம் செய்வ தால் பரிசுத்தமான மனதுடன் கூடியவர்களும் (ஆதலால்) தேவேந்த்ரனல் கூட வணங்கப்படுகின்றவர்களுமான மஹான்களுடைய தாஸர்களுக்கு தாஸ னுக நான் இருக்கின்றேன்.

பிராம்மணர்களுக்கு வேதாத்யயனம் மிக அவசியம். ஆனல் தற்காலம் பலரு க்கு அவரவர்களுடைய வேதசாகையை பூர்ணமாக அத்யயனம் செய்ய அவகாசமும் சௌகரியமுமில்லை. இருந்தாலும் ஸ்ரீருத்ரம், சமகம், புருஷஸூக்தம் முதலிய குறிப்பிட்ட சில பாகங்களையாவது தவறாமல் அத்யயனம் செய்தால் இஹத்திலும் பரத்திலும் பல நன்மைகளைப் பெற்று, பிராம்மண்யத்தையும் ரக்ஷித்துக் கொள்ள லாம் என்று சாஸ்திரம் கூறுகிறது. அவற்றுள் ஸ்ரீருத்ரத்தை ச்ருதிகள், ஸ்மிருதிகள், இதிஹாஸங்கள், புராணங்கள் எல்லாம் பலவாறாகக் கொண்டாடுகின்றன. **ஸ்ரீ அபிநவ சங்கராசார்ய ஸ்வாமிகள்** அவர்கள் எழுதிய ருத்ரபாஷ்யத்தின் முகவுரை யில் ச்ருதிகள் முதலியவை ஸ்ரீருத்ரத்தின் மஹிமையை எவ்வாறு எடுத்துரைக்கின் றன என்பதை விரிவாகக் கூறியுள்ளார்கள். அதைத் தழுவியே ஸ்ரீ ருத்ரத்தின் மஹிமையை இங்கு முதலில் எழுதிவிட்டு பிறகு ஸ்ரீ ருத்ரத்திற்கு பதவுரை கருத்துரை விளக்கம் முதலியவற்றை விரிவாக எழுதியுள்ளோம்.

ஸ்ரீருத்ரம் "சதருத்ரீயம்" "ருத்ரோபனிஷத்" முதலிய நாமாக்களால் குறிப்பிடப் படுகின்றது. "சதருத்ரீயம்" என்பதற்கு மூன்று விதமாகப் பொருள் கூறலாம். பல ருத்ரர்கள் இங்கு வர்ணிக்கப்படுகின்றபடியால் **சதருத்ரீயம்**. அல்லது ருத்ரனைச் சேர்ந்த இந்த ருத்ரோபனிஷத் பல வேத சாகைகளில் படிக்கின்றபடியால் இது **சதருத்ரீயம்**. ஸூத ஸம்ஹிதையில்

**शतशाखागतं साक्षाच्छतरुद्रीयमुत्तमम् ।**
**तस्मात्तज्जपमात्रेण सर्वपापैः प्रमुच्यते ॥**

**ஶதஶாகா²க³தம் ஸாக்ஷாச்ச²தருத்³ரீயமுத்தமம் |**
**தஸ்மாத்தஞ்ஜபமாத்ரேண ஸர்வபாபை: ப்ரமுச்யதே ||**

“பல வேத சாகைகளிலும் இந்த சதருத்ரீயம் இருப்பதால் இது மிகச் சிறந்தது. ஆதலால் இதை ஜபித்தே எல்லா பாவங்களிலிருந்தும் விடுதலை அடைகின்றான்” என்று கூறப்பட்டிருக்கிறது.

**एकशतं यजुश्शाखाः, तासु रुद्रोपनिषदाम्नायते ।**

**ஏகஶதம் யஜுஶ்ஶாகா²:, தாஸு ருத்³ரோபநிஷதா³ம்ன்யதே |**

“யஜுர்வேதத்தின் சாகைகள் 101. அவை எல்லாவற்றிலும் ருத்ரோபனிஷத் கூறப்படுகிறது” என பட்டபாஸ்கரரும் கூறியுள்ளார். அல்லது ஸ்ரீருத்ரனின் நாமாக்கள் அனந்தமாக இங்கு வர்ணிக்கிப்பட்டிருக்கின்றபடியால் **“சதருத்ரீயம்”** என்றும் கூறலாம்.

## ஸ்ரீருத்ரம் எல்லா உபநிஷத்துக்களையும் விடச் சிறந்தது.

ஜாபாலோபனிஷத்தில் “எதை ஜபித்தால் மோக்ஷத்தை அடையலாம்” என்ற கேள்விக்கு “சதருத்ரீயத்தை ஜபித்தால் மோக்ஷத்தை அடையலாம்” என்ற பதில் காணப்படுகிறது. மற்ற உபனிஷத்துக்களை ஜபித்தாலும் மோக்ஷம் ஸித்திக்கலாம். இருந்தாலும் அவ்வாறு ஜபிக்கப்படும் உபனிஷத்துக்களுள் இது மிகச் சிறந்தது என போதிப்பதற்கென்றே மேற்படி ஜாபாலோபனிஷத்தில் கேள்வியும் பதிலும் தோன்றியிருக்கின்றன. அது எவ்வகையில் சிறந்தது என்பதைச் சற்று ஆராய்வோம். உபனிஷத்துக்களை ஜபித்து அதன் மூலம் ச்ரவணம், மனனம், நிதித்யாஸனம் இவற்றை அடிக்கடி செய்து ஞானத்தைப் பெற்றால் உடனே முக்தி ஏற்படும். ஜபத்தால் மோக்ஷத்தை அடையலாம் என்று கூறப்படும் இடங்களில் எல்லாம் ஜபத்தால் ஆத்மஞானத்தை ஸம்பாதித்து மோக்ஷத்தைப் பெறலாம் என்றுதான் பொருள்கொள்ளவேண்டும். ஸ்ரீ ருத்ரோபனிஷத் அம்மாதிரியும் மோக்ஷத்திற்கு ஸாதனமாக ஆகின்றது. வேறு விதமாகவும் மோக்ஷத்திற்கு ஸாதனமாக ஆகின்றபடியால்தான் மற்ற உபனிஷத்துக்களை விட இது சிறந்தது எனக் கூறப்படுகிறது. எப்படி என்றால், **“ஏதைர்ஹவா அம்ருதோ பவதி”** என ஜாபால ச்ருதி கூறுகின்றபடியால் ஸ்ரீ ருத்ரத்தில் உள்ள பரமேச்வர திவ்ய நாமாக்களே போட்டிபோட்டுக்கொண்டு ருத்ரஜபம் செய்கின்றவனை விடுவிக்க முன்வந்து ஈச்வரானுக்கிரஹத்தை ஸம்பாதித்துக்கொடுத்து ச்ரவணம் மனனம் முதலியவைகளை அபேக்ஷிக்காமலே அவனுக்கு ஆத்மஞானத்தை உண்டுபண்ணிவிடுகின்றன. அதுதான் ஸ்ரீருத்ரத்திற்குள்ள தனிச் சிறப்பு.

## எல்லா வேதங்களையும்விட ஸ்ரீருத்ரம் சிறந்தது.

இதைப்பற்றி கூர்ம புராணம் விரிவாகக் கூறுகின்றது. வஸுமனஸ் என்ற அரசன் மிக ச்ரத்தையுடன் பல வருஷகாலம் காயத்ரியை உபாஸித்து வந்தான்.

அதனால் திருப்தி அடைந்த பரமேச்வரன் அவன் முன்தோன்றி அடியிற்கண்டவாறு கூறுகிறார்.

**इमानि मे रहस्यानि नामानि शृणु चानघ ।**
**सर्ववेदेषु गीतानि संसारशमनानि च ॥**
**नमस्कुरुष्व सततमेभिर्नामपदैः शुचिः ।**
**अध्यायं शतरुद्रीयं यजुषां सारमुत्तमम् ॥**
**जपस्वानन्यचेतस्को मय्येवासक्तमानसः ।**
**ब्रह्मचारी मिताहारो भस्मनिष्ठस्समाहितः ॥**
**जपेतामरणाद्रुद्रं स याति परमां गतिम् ।**

**இமானி மே ரஹஸ்யானி நாமானி ஶ்ருணு சானக⁴ ।**
**ஸர்வவேதே³ஷு கீ³தானி ஸம்ஸாரஶமனானி ச ॥**
**நமஸ்குருஷ்வ ஸததமேபி⁴ர்நாமபதை³: ஶுசி: ।**
**அத்⁴யாயம் ஶதருத்³ரீயம் யஜுஷாம் ஸாரமுத்தமம் ॥**
**ஜபஸ்வானன்யசேதஸ்கோ மய்யேவாஸக்தமானஸ: ।**
**ப்³ரஹ்மசாரீ மிதாஹாரோ ப⁴ஸ்மநிஷ்ட²ஸ்ஸமாஹித: ॥**
**ஜபேதாமரணாத்³ருத்³ரம் ஸ யாதி பரமாம் க³திம் ।**

"ஏ குற்றமற்ற அரசனே! எல்லா வேதங்களிலும் புகழப்பட்டவைகளும், ஸம்ஸாரத்தை அழிக்கக் கூடியவைகளுமான என்னுடைய இந்த ரஹஸ்ய நாமாக்களை ச்ரவணம் செய். மிக சுத்தனாக இருந்து கொண்டு இந்த நாமாக்களால் எப்பொழுதும் என்னை வணங்கு. யஜூர்வேதத்தின் ஸாரமாயும் மிகச் சிறந்ததுமான சதருத்ரீய அத்யாயத்தை வேறு இடத்தில் மனதைச் செலுத்தாமல் என்னை எண்ணிக்கொண்டே ஜபம் செய். பிருஹ்மசர்யத்துடன் கூடிய ஒருவன் மிதமான ஆஹாரத்தை உட்கொள்ளுகின்றவனாயும் விபூதியைத் தரிப்பவனாயுமிருந்து கொண்டு கடைசி காலம்வரை ருத்ரத்தை ஜபிப்பானேயாகில் அவன் மிகச் சிறந்த கதியை அதாவது மோக்ஷத்தை அடைகின்றான்."

இங்கு **"யஜுஷாம் ஸாரம்"** என்பதனாலேயே யஜூர்வேதத்திற்குள் சிறந்தது எனக் கிடைக்கையில், மறுபடியும் **"உத்தமம்"** என்று கூறியிருப்பதால் ரிக்வேதம் முதலியவற்றைவிடக்கூடச் சிறந்த்து என ஸித்திக்கின்றது. அது எவ்விதம்? என்பதை உபபாதனம் செய்வதற்காகவே, "ஸம்ஸார சமநாநி" என்று நாமாக்களுக்கு விசேஷணம் கொடுக்கப்பட்டிருக்கிறது. விசேஷணம் ஜபித்தமாத்திரத்திலேயே ஸம்ஸாரத்திலிருந்து விடுவிக்கக்கூடிய நாமாக்களுடன் கூடியிருப்பதால் மட்டும் இந்த ருத்ரம் எல்லா வேதங்களையும்விடச் சிறந்தது என்பது அல்ல, அப்படிப்பட்ட ஈசனைக் குறித்து செய்யப்படும் பல நமஸ்காரங்களுடன் கூடியிருப்பதாலும் இது மிகச் சிறந்தது என்பதைக் குறிப்பிடுவதற்தாதவே "நமஸ்குருஷ்வ ஸததமேபிர் நாமபதை:" என்று கூறப்பட்டிருக்கிறது. ஸ்ரீருத்ர நாமாக்களின் ஜபமே மோக்ஷத்தை

அளிக்கவல்லது. அவற்றால் வாசிகமாக நமஸ்காரங்களும் செய்யப்பட்டால் ஸ்ம்ஸார துக்கத்தை அடியோடு அழிக்கக்கூடுமென்பதைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? **“அநக”** என்று அரசனைக்குறித்து செய்யப்படும் ஸம்போதனம், பல வருஷகாலம் காயத்ரீ உபாஸனத்தால் பாவங்களை யெல்லாம் களைந்தெறிந்தவனே ஸ்ரீருத்ரஜபத்தில் பூர்ணாதிகாரம் பெறுகின்றான் என்பதை சூசனம் செய்கின்றது.

வேதங்களில் "கர்மகாண்டம், உபாஸனகாண்டம், ஞானகாண்டம்” என்று மூன்று காண்டங்கள் உண்டு. சதருத்ரீயம் எல்லா வேதங்களிலும் சிறந்த தென்றால் இந்த மூன்று காண்டங்களையும்விடச் சிறந்ததென்றும் கூறவேண்டும். கைவல் யோபனிஷத் இவ்விஷயத்தை மிகத் தெளிவாக எடுத்துரைக்கின்றது. ப்ருஹ்மதத்து வத்தை அறிய விரும்பி தம் சரணங்களில் பணிந்து வேண்டிக் கொண்ட ஆச்வலாயனரைக் குறித்து பரமேஷ்டீ, ப்ருஹ்மாத்மதத்துவத்தை உபதேசம் செய்து அதை அறிந்துகொள்ள ஸாதனமாக சதருத்ரீய ஜபத்தை விதிக்கின்றார்.

**यः शतरुद्रीयमधीते सोझिपूतो भवति, स वायुपूतो भवति, स आत्मपूतो भवति, स सुरापानाद् पूतो भवति, स ब्रह्महत्यात् पूतो भवति, स सुवर्णस्तेयात्पूतो भवति, कृत्या - कृत्यात्पूतो भवति, तस्माद विमुक्तमाश्रितो भवति, अत्याश्रमी सर्वदा सकृद्वा जपेत्, अनेन ज्ञानमामोति संसारार्णवनाशनम् ।**

**யஃ ஶதருத்[3]ரீயமதீ[4]தே ஸோஜி[2]பூதோ ப[4]வதி, ஸ வாயுபூதோ ப[4]வதி, ஸ ஆத்மபூதோ ப[4]வதி, ஸ ஸுராபாநாத்[3] பூதோ ப[4]வதி, ஸ ப்[3]ரஹ்மஹத்யாத் பூதோ ப[4]வதி, ஸ ஸுவர்ணஸ்தேயாத்பூதோ ப[4]வதி, க்ருத்யா - க்ருத்யாத்பூதோ ப[4]வதி, தஸ்மாத[3] விமுக்தமாஶ்ரிதோ ப[4]வதி, அத்யாஶ்ரமீ ஸர்வதா[3] ஸக்ருத்[3]வா ஜபேத், அனேன ஜ்ஞாநமாமோதி ஸம்ஸாரார்ணவநாஶனம் ।**

இங்கு ஸம்ஸார ஸமுத்ரத்தை அழிப்பதற்கு ஸாதனமான ஞானத்தைப் பெற விருப்பமுள்ளவன் சத்ருத்ரீயத்தை ஜபிக்கவேண்டும் என்று கூறுவதற்குக் காரணம், சதருத்ரீயம் எல்லா வேதங்களையும் விடச் சிறந்தது என்பதுதான். அதை நிரூபிக்க **“ஸோக்நிபூதோ பவதி”** என்பது முதல் **"க்ருத்யாக்ருத்யாத் பூதோ பவதி”** என்பது வரை இது கர்மகாண்டத்தை விட மிகச் சிறந்தது எனக் கூறப்படுகிறது.

கர்ம காண்டத்தில் விதிக்கப்பட்ட வேறு எந்த கர்மாவும் எல்லா பாவங்களை யும் நிவிருத்தி செய்ய சக்தியற்றது. ஆனால் ஸ்ரீருத்ர ஜபம் ஒன்றே ப்ருஹ்மஹத்தி முதலிய மஹாபாபங்களைக்கூட நிவிருத்தி செய்யக்கூடியதாகையால், ஸ்ரீருத்ரம் கர்மகாண்டத்தைவிடச் சிறந்தது. கர்மகாண்டம்கூட ஆத்மஞானத்திற்கு ஸாதனம் என்ற ஸித்தாந்தம் ஒன்றுண்டு. அந்த ஸித்தாந்தத்தில், கர்மகாண்டத்தில் விதிக்கப் பட்ட கர்மாக்கள் எல்லாம் பாப நிவிருத்தி என்ற சித்த சுத்தியை உண்டுபண்ணி அதன் மூலம் ஞானத்திற்கு சாதனமாக ஆகின்றன எனக் கூற வேண்டும். எல்லா கர்மாக்களையும் அனுஷ்டானம் செய்ததால் ஏற்படக்கூடிய பாப நிவிருத்தி என்ற

சித்த சுத்தி ஸ்ரீருத்ரஜபம் ஒன்றாலேயே ஸித்திக்கின்றபடியால் ஸ்ரீருத்ரம் கர்மகாண்டத்தைவிடச் சிறந்தது.

கர்ம காண்டத்தில் கூறப்படும் கர்மாக்கள் ஸ்வர்க்கம் முதலிய பலவித பயன்களுக்குக் காரணமாகின்றன என்ற பக்ஷத்திலும், அக் கர்மாக்களால் விளையும் பயன்கள் எல்லாம் ஸ்ரீருத்ரஜபத்தாலேயே சித்திக்கக்கூடுமாதலால் ஸ்ரீருத்ரம் கர்ம காண்டத்தை விடச் சிறந்தது என்று ஸித்திக்கின்றது. ஆதலால் தான்

**वृक्षस्य मूलसेकेन शाखाः पुष्यन्ति वै यथा ।**
**शिवे रुद्रजपात्प्रीते प्रीता एवास्य देवताः ॥**
**अतो रुद्रजपादेव भुक्तिमुक्ती प्रसिद्ध्यतः ।**

**வ்ருக்ஷஸ்ய மூலஸேகேன ஶாகா²ः புஷ்யந்தி வை யதா² ।**
**ஶிவே ருத்³ரஜபாத்ப்ரீதே ப்ரீதா ஏவாஸ்ய தே³வதாः ॥**
**அதோ ருத்³ரஜபாதே³வ பு⁴க்திமுக்தீ ப்ரஸித்³த்⁴யதः ।**

என ஸூதஸம்ஹிதை கூறுகின்றது. அதாவது, மரத்தின் வேரில் ஜலத்தை ஊற்றினால் கிளைகள் செழிப்பதுபோல் ஸ்ரீருத்ர ஜபத்தால் ஸ்ரீபரமேச்வரன் பிரீதியடைந்தால் அவருடைய அவயவங்களான இந்திரன் அக்னி முதலிய தேவர்களும் பிரீதியடைவதால் அப்பிரீதியின் பயனாக உண்டாகக்கூடிய ஸ்வர்க்கம் முதலிய பயன்களும் தாமாகவே ருத்ர ஜபம் செய்கின்றவனை வந்து அடையக்கூடும்.

**यद्यदिच्छन् जपेत्तत्तदाप्नोति हि न संशयः ।**

**யத்³யதி³ச்ச²ன் ஜபேத்தத்ததா³ப்னோதி ஹி ந ஸம்ஶயः ।**

"எந்த எந்த பயனை விரும்பி ஜபிக்கின்றானோ அந்தந்தப் பயனை அடைகின்றான். இதில் ஸம்சயமில்லை."

**तदेतद् पापक्षयार्थी, व्याधिमोचनार्थी, श्रीकामः, शान्ति कामः, आयुष्कामः, आरोग्यकामञ्च कुर्यात्, एतत्सर्वमवानोति ॥**

**ததே³தத்³ பாபக்ஷயார்தீ², வ்யாதி⁴மோசனார்தீ², ஶ்ரீகாமः, ஶாந்தி காமः, ஆயுஷ்காமः, ஆரோக்³யகாமஞ்ச குர்யாத், ஏதத்ஸர்வமவா னோதி ॥**

"பாபக்ஷயத்தை விரும்புகின்றவனோ, வியாதி விலகவேண்டுமெனக் கருதுகின்றவனோ, ஐச்வர்யத்தை விரும்புகின்றவனோ, ஆயுளை வேண்டுகின்றவனோ, ஆரோக்கியத்தில் ஆசை கொண்டவனோ எல்லோருமிந்த ருத்ரஜபத்தைச் செய்ய வேண்டும். இதில் கூறப்பட்ட எல்லா பயன்களையும் அடைந்து விடுவான்" முதலிய வசனங்களாலும் கர்மாக்களால் அடையத்தகுந்த பயன்களை எல்லாம் ஸ்ரீருத்ர ஜபத்

தாலேயே அடைந்துவிடலாம் என்று ஸித்திக்கின்றது. மேலும் ஸ்ரீருத்ர லகுந்யாஸத்தில் **"அக்னி ஹோத்ராத்மநே ஹ்ருதயாய நம:"** முதலியவற்றால் அக்னிஹோத்ரம், தர்சபூர்ணமாஸம், பசுபந்தம், சாதுர்மாஸ்யம், ஜ்யோதிஷ்டோமம் முதலிய கர்மாக்கள் எல்லாம் ஸ்ரீருத்ரத்தின் ஹ்ருதயம் முதலிய அங்கங்களாகக் கூறப்பட்டிருக்கின்றன. பல சப்தங்களின் ஸமுதாயமான ஸ்ரீருத்ரத்திற்கு அக்னி ஹோத்ரம் முதலிய கர்மாக்கள் நேரிடையாக அங்கங்களாக ஆகமாட்டா. ஆதலால் இக்கர்மாக்கள் எல்லாவற்றாலும் உண்டாகும் பயன்கள் ஸ்ரீருத்ர பாராயணப் பயனில் அந்தர்கதம் எனக்கருதி மேற்படி கர்மாக்கள் ஸ்ரீருத்ரத்திற்கு அங்கங்களாகக் கூறப்பட்டிருக்கின்றன என்றே கொள்ளவேண்டும். இதனுலும் ஸ்ரீருத்ரம் கர்மகாண்டத்தைவிடச் சிறந்தது என. ஸித்திக்கின்றது.

**உபாஸனகாண்டம், ஞானகாண்டம் இவற்றை விட ஸ்ரீருத்ரம் சிறந்தது: -** உபாஸனங்களுள் **அவிமுக்தோபாஸனம்** மிகச் சிறந்தது. இந்த உபாஸ்னத்தைச் செய்கின்றவனுக்கு பிராணோத்க்ரமண காலத்தில் ஸ்ரீருத்ரன் தாரகப்ருஹ்மத்தை உபதேசம் செய்கின்றார். அதனுல் மோக்ஷத்தை அடைகின்றான் என்று ஜாபாலோபனிஷத்தில் கூறப்பட்டிருக்கிறது. "ஆதிபௌதிகம், ஆத்யாத்மிகம்" என்று அவிமுக்தோபாஸனம் இரண்டு விதம். இரு புருவங்களும் மூக்கும் சேருமிடத்திற்கு அவிமுக்தம் எனப்பெயர். அங்கு செய்யப்படும் ஸ்ரீபரமேச்வர உபாஸனம் ஆத்யாத்மிக அவிமுக்தோபாஸனம் ஆகும். காசிக்கு அவிமுக்த க்ஷேத்ரம் எனப்பெயர். அங்கு செய்யப்படும் ஸ்ரீபரமேச்வர தரிசனம் ஆதிபௌதிக அவிமுக்தோபாஸனமாகும்.

**तस्माद विमुक्तमाश्रितो भवति**

**தஸ்மாத[3] விமுக்தமாஶ்ரிதோ ப[4]வதி**

என்ற வாக்யத்திற்கு ருத்ரபாராயணத்தால், அவிமுக்தோபாஸனத்தால் உண்டாகும் பயனே, **ஆச்ரிதோபவதி** - அடைந்தவனுக ஆகின்றான் என்று அர்த்தமானதால், மேற்படி இருவித அவிமுக்தோபாஸனங்களின் பயனேயும் ருத்ராத்யயனத்தால் அடைந்து விடலாம் எனத் தெரியவருகிறது. ஆதிபௌதிக அவிமுக்தோபாஸனத்தில் காசியில் மரணம் ஸம்பவித்தால்தான் தாரக ப்ருஹ்மவித்யா உபதேசம் கிடைக்கும். ஆத்யாத்மிக அவிமுக்தோபாஸனத்தில் அவ்வித நிர்ப்பந்தமில்லையானுலும் ஸ்ரீருத்ர ஜபத்தைக்காட்டிலும் புருவங்கள் மூக்கு இவற்றின் ஸந்தியாகிற அவிமுக் தம் என்ற ஸ்தலத்தில் ஸ்ரீபரமேச்வர த்யானம் செய்வதில் பல மடங்கு சிரமம் அதிகம். மற்ற எவ்வித உபாஸனங்களிலும் ஸ்ரீருத்ர ஜபத்தைவிட சிரமம் அதிகம் என்பதில் ஐயமில்லை. ஆதலால் அனுயாஸ்மாக ஜபமாத்திரத்தினுல் மோக்ஷத்தை அளிக்கும் ஸ்ரீருத்ரம் எல்லா உபாஸனங்களையும்விடச் சிறந்தது என ஸித்திக்கின் றது.

**अत्याश्रमी सर्वदा सकद्वा जपेत्, अनेन ज्ञानमामोति संसारार्णवनाशनम् ।**

**அத்யாஶ்ரமீ ஸர்வதா[3] ஸகத்[3]வா ஜபேத், அனேன ஜ்ஞாநமாமோதி ஸம்ஸாரார்ணவநாஶனம் |**

என்ற உபநிஷத் வாக்யத்தால் **ஞானகாண்டத்தையும்விட ஸ்ரீருத்ரம் சிறந்தது** என ஏற்படுகின்றது. "ஞானகாண்டம்" எனப்படும் உபனிஷத்துக்கள் ஞானம் ஏற்படும் வரை பாராயணம் செய்யப்படவேண்டும் என ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது. **"ஸக்ருத்வாஜபேத்"** என்று ஸ்ரீ ருத்ரத்தை பிரதிதினம் ஒருமுறை பாராயணம் செய்து வந்தாலே ஸ்ரீபரமேச்வர அனுக்ரஹத்தால் அனுயாஸமாக ஞானம் ஏற்பட்டுவிடும் என்று தெரியவருவதால் இது ஞானகாண்டத்தையும்விடச் சிறந்தது என்று ஸித்திக் கின்றது.

## நரகம் செழித்த வரலாறு

புராணங்கள், இதிகாசங்கள், ஸ்மிருதிகள் முதலியவை எல்லாம் ஸ்ரீருத்ரத் தைப் புகழ்ந்து பேசுகின்றன. அவற்றுள் சிலவற்றை இங்கு குறிப்பிடுவோம். ஸ்காந்தம் பிருஹ்மோத்தர காண்டத்தில் "உபனிஷத்துக்களுள் சிறந்தது ஸ்ரீருத்ரம். மரீசி, அத்ரி முதலிய முனிவர்களும், தேவர்களும் இதை எப்பொழுதும் ஜபித்து வருகின்றனர். இதுவே சிறந்த தபஸ். உபபாதகங்களோ அல்லது மஹாபாதகங்களோ எல்லாம் இதன் ஜபத்தால் நசித்துவிடும்" என்று வர்ணிக்கப்பட்டு மேலும் கூறப்படுவ தாவது:

புண்யகர்மாக்களின் பயன் ஸ்வர்க்கம். பாப கர்மாக்களின் பயன் நரகம். இவ்விரண்டிற்கும் முறையே இந்திரனும் யமனும் அதிபதிகளாக பிரும்மதேவனுல் நியமிக்கப்பட்டு இருக்கின்றனர். காமம், குரோதம், லோபம், மதம், அஹங்காரம் முதலியவர்கள் அதர்மத்தின் பிள்ளைகள். இவர்கள் எல்லோரும் நரகத்தை பரிபாலிப்பவர்கள், குரோதத்திற்கு முதலில் "பித்ருவதம்", "மாத்ருவதம்" என்ற இரு பிள்ளைகளும், பின்பு "பிருஹ்மஹத்யை" என்ற கன்னிகையும் பிறந்தனர். காமனுடைய பிள்ளைகளுள் "குருதல்பகமனம், (குருவின் மனைவியிடம் செல்லு தல்) ஸுராபானம்,. (கள்குடித்தல்) சண்டாளீ கமனம், (சண்டாள ஸ்திரீயிடம் செல்லு தல்) என்ற மூவர்களும் முக்கியமானவர்கள். தேவஸ்வாபஹரணம் (தேவாலய சொத்தைக் கொள்ளை யடித்தல்) பிருஹ்மஸ்வஹரணம் (பிராம்மணன் சொத்தைக் கொள்ளையடித்தல்) ஸ்வர்ணஸ்தேயம (பவுனைத் திருடுதல்) இம் மூன்றும் லோபத் தின் பிள்ளைகளாம். நரகத்திற்கு அதிபதியான யமன் இவர்கள் எல்லோரையும் அழைத்து "நரகத்தை அபிவிருத்தி செய்யவேண்டிய பொறுப்பு உங்களைச் சேர்ந்தது" என பட்டத்தையும் கட்டி "பாதக நாயகர்கள்" என்ற பெயரையும் சூட்டினன். உடனே "உப பாதகம்" என்ற தன் வேலைக்காரர்களுடன் மிக தீவிரமாக வேலைசெய்து ஏராளமான நபர்களை நரகத்திற்கு அழைத்துவந்து நரகத்தை நிறப்பினர்.

## நரகநாயகர்கள்கூட நடுங்கும் விந்தை

ஆனுல் ஸ்ரீருத்ராத்யாயத்தின் மஹிமையை அறிந்து ஆங்காங்கு பலர் ருத்ர பாராயணம் செய்ய ஆரம்பித்தவுடன் அந்த த்வனியைக்கேட்ட மேற்படி பாதக நாயகர்கள் மிகவும் நடுக்கங்கண்டு உபபாதகர்களுடன் யமலோகத்திற்குத் திரும்பிச் சென்று யமனிடம் தெரிவித்தனர். அரசே! தாங்கள் நரகம் செழிப்பதற்கு வேண்டிய

வற்றைச்செய்ய எங்களுக்கு அதிகாரமளித்தீர்கள். தற்காலம் உலகத்தில் எங்கும் நடமாடக்கூட சக்தியற்றவர்களாக ஆகிவிட்டோம். கிராமங்கள் தோறும், நதீ தீரத்திலும், தேவாலயங்களிலும் ருத்ரஜபம் செய்கின்றனர். அந்த த்வனியைக் கேட்டவுடனேயே எங்கள் உடல்கள் எறிகின்றன. வேறு எவ்வித பிராயச்சித்தங்களை அனுஷ்டித்தபோதிலும் நாங்கள் பொருட்படுத்தமாட்டோம். ஆனால் ஸ்ரீருத்ரஜபத்தை மட்டும் ஒரு க்ஷண நேரங்கூட சகிக்க எங்களால் முடியவில்லை. எங்களுக்கு ஸ்ரீருத்ரஜபமே மிகக் கொடிய விஷமாக இருக்கின்றது. இனி என்ன செய்வோம்!

இதைக்கேட்ட யமன் மிகவும் வருத்தமடைந்து ப்ருஹ்மதேவனிடம் சென்று எல்லா விஷயங்களையும் தெரிவித்தான். உடனே ப்ருஹ்மதேவனும் ஸ்ரீருத்ரஜபம் எங்கும் தங்குதடையின்றி பரவாமலிருக்க ஓர் உபாயத்தைக் கற்பித்தார். அதாவது: - அவித்யா தேவியின் பெண்களாகிய அச்ரத்தா (அவ நம்பிக்கை) துர்மேதா (கெட்ட புத்தி) என்ற இரு பெண்களையும், மனிதர்களிடம் செல்லும்படித் தூண்டினர். பலர் மேற்படி அச்ரத்தை துர்மேதை இவ்விரண்டினாலும் மோஹத்தை அடைந்து ஸ்ரீருத்ர பாராயணத்தில் பற்றற்றவர்களாக ஆனவுடன் யமன் மிகவும் மகிழ்ச்சியுடன் தன்னுலகத்திற்குத் திரும்பினான். இதிலிருந்து ஸ்ரீருத்ரஜபம், உபபாதகம், மஹாபாதகம் முதலிய ஸமஸ்தபாபங்களையும் அழிக்கவல்லது எனத் தெரியவருகிறது.

ஸ்ரீருத்ரத்தின் மஹிமையைப்பற்றி அடியிற் கண்டவாறு **ஸ்மிருதிகளில்** கூறப்பட்டிருக்கிறது.

**मद्यं पीत्वा गुरुदारांश्च गत्वा**
**स्तेयं कृत्वा ब्रह्महत्यां च कृत्वा ।**
**भमच्छन्नो भस्मशय्याशयानो**
**रुद्राध्यायी मुच्यते सर्वपापैः ॥** (சாதாதப ஸ்மிருதி)

**மத்³யம் பீத்வா கு³ருதா³ராம்ஶ்ச க³த்வா**
**ஸ்தேயம் க்ருத்வா ப்³ரஹ்மஹத்யாம் ச க்ருத்வா ।**
**ப⁴மச்ச²ன்னோ ப⁴ஸ்மஶய்யாஶயானோ**
**ருத்³ராத்⁴யாயீ முச்யதே ஸர்வபாபை꞉ ॥**

"மத்யபானம் செய்தாலும், குருதார கமனம், ஸ்வர்ணஸ்தேயம், ப்ருஹ்மஹத்யை இவற்றையெல்லாம் செய்தாலும், விபூதி தாரணம் செய்துகொண்டு ஸ்ரீருத்ராத்யாயத்தை ஜபம் செய்கின்றவன் ஸமஸ்த பாபங்களிலிருந்தும் விடுதலையடைகின்றான்."

**एकादशगुणान्चापि रुद्रानावृत्य धर्मवित् ।**
**महापापैरपि स्पृष्टो मुच्यते नात्र संशयः ॥** (அத்ரி ஸ்மிருதி)

**ஏகாத³ஶகு³ணான்சாபி ருத்³ரானாவ்ருத்ய த⁴ர்மவித் ।**
**மஹாபாபைரபி ஸ்ப்ருஷ்டோ முச்யதே நாத்ர ஸம்ஶய꞉ ॥**

"மஹாபாபங்களைச் செய்தவனானாலும் ருத்ர பாராயணம் மிகச் சிறந்த தர்மம் என்பதை அறிந்த ஒருவன் பதினோறு தடவை ருத்ரத்தை ஆவிருத்தி செய்தானேயாகில் அந்த பாபங்களிலிருந்து விடுதலையடைந்து விடுகிறான். இதில் ஐயமில்லை."

**सुरापी स्वर्णहारी च रुद्रजापी जले स्थितः ॥**
**सहस्त्रशीर्षजापी च मुच्यते सर्वकिल्बिषैः ॥**

(யாக்ஞவல்க்ய ஸ்மிருதி)

**ஸுராபீ ஸ்வர்ணஹாரீ ச ருத்³ரஜாபீ ஜலே ஸ்தி²த: ॥**
**ஸஹஸ்த்ரஶீர்ஷஜாபீ ச முச்யதே ஸர்வகில்பி³ஷை: ॥**

"ஸுராபானம் செய்தவனாகிலும், ஸ்வர்ணத்தை அபஹரித்தவனாகிலும், ஜலத்தில் நின்று ஸ்ரீருத்ரத்தையும் "ஸஹஸ்ரசீர்ஷா" கொண்டு என்று ஆரம்பமாகும் புருஷஸூக்தத்தையும் ஜபிப்பானேயாகில் எல்லா பாபங்களிலிருந்தும் விடுதலையடைகின்றான்."

**वेदमेकगुणं जप्त्वा तदक्षैव विशुद्धयति ।**
**रुद्रैकादशिनीं जप्त्वा तत्क्षणादेव शुद्धयति ॥**

**வேத³மேககு³ணம் ஜப்த்வா தத³க்ஷைவ விஶுத்³த⁴யதி ।**
**ருத்³ரைகாத³ஶினீம் ஜப்த்வா தத்க்ஷணாதே³வ ஶுத்³த⁴யதி ॥**

"வேதம் முழுவதும் ஒருதடவை ஜபம்செய்தால் அப் பகலிலேயே சுத்தியடைந்துவிடுகிறான். ஸ்ரீருத்ரத்தை ஜபம் செய்தால் அதே க்ஷணத்தில் சுத்தியடைந்து விடுகிறான்."

இதிஹாஸமாகிற **மஹாபாரதத்திலும்** ஸ்ரீருத்ரம் பலவாறாகப் புகழப்பட்டிருக்கிறது. ஆநுசாஸனிக பர்வத்தில் ஸ்ரீகிருஷ்ணன் தர்மபுத்ரரைக் குறித்தும், த்ரோண பர்வத்தில் ஸ்ரீவியாஸர் அர்ஜுனனைக் குறித்தும் கூறும் **"வேதேசாஸ்ய விஞ்ஞானம் சதருத்ரீய முத்தமம்"** என்ற வசனத்தில் ஸ்ரீருத்ரம் உத்தமம் எனக் காணப்படுகிறது. எதைவிட உத்தமம்? என்றால், அதே வாக்யத்தில் சமீபத்தில் உள்ள வேதத்தைவிட்டு வேறு ஒன்றை எடுத்துக்கொள்ளக்கூடாதாகையால் வேதத்தைக் காட்டிலும் என்று கிடைகின்றது. ஆதலால் மற்ற வேதப்பகுதிகளைவிட ஸ்ரீருத்ரம் மிகச் சிறந்தது என ஸித்திக்கின்றது. அவ்வித சிறப்பிற்குக் காரணம் ருத்ர பாராயணத்தாலேயே எல்லா புருஷார்த்தங்களும் ஸித்திக்கின்றன என்பதுதான். இது தமது சொந்த அனுபவம் என்று ஸ்ரீகிருஷ்ணன் அதே ஆநுசாஸனிக பர்வத்தில் தெரிவிக்கின்றார்.

**प्रयतः प्रातरुत्थाय यदधीते विशांपते ।**
**प्राञ्जलिः शतरुद्रीयं नास्य किंचन दुर्लभम् ॥**

ப்ரயத: ப்ராதருத்தா²ய யத³தீ⁴தே விஶாம்பதே ।
ப்ராஞ்ஜலி: ஶதருத்³ரீயம் நாஸ்ய கிஞ்சன து³ர்லப⁴ம் ॥

∴"ஏ அரசனே! காலையில் எழுந்திருந்து மிகவும் சுத்தமாக இருந்துகொண்டு அஞ்சலி பந்தத்துடன் எவன் ருத்ரத்தை ஜபிக்கின்றானோ அவன் அடைய முடியாதது ஒன்று மேயில்லை."

கூர்ம புராணம், லிங்க புராணம், ஹரிவம்சம் முதலியவற்றில் ஸ்ரீகிருஷ்ணன் பல பயன்களை அடைவதன்பொருட்டு ஸ்ரீருத்ரத்தையும் பஞ்சாக்ஷரத்தையும் ஜபித்ததாகக் கூறப்பட்டிருக்கிறது.

अत्र पूर्व हृषीकेशो विश्वात्मा देवकीसुतः ।
उवास वत्सरं कृष्णः सदा पाशुपतव्रतः ॥
भस्मोद्धूलितसर्वाङ्गो रुद्राध्ययनतत्परः ।
आराधयन् हरिः शम्भुं कृत्वा पाशुपतंत्रतम् ॥

(கூர்ம புராணம்)

அத்ர பூர்வ ஹ்ருஷீகேஶோ விஶ்வாத்மா தே³வகீஸுத: ।
உவாஸ வத்ஸரம் க்ருஷ்ண: ஸதா³ பாஶுபதவ்ரத: ॥
ப⁴ஸ்மோத்³தூ⁴லிதஸர்வாங்கோ³ ருத்³ராத்⁴யயனதத்பர: ।
ஆராத⁴யன் ஹரி: ஶம்பு⁴ம் க்ருத்வா பாஶுபதந்த்ரதம் ॥

"தேவகீ ஸுதனை ஸ்ரீகிருஷ்ணன் எப்பொழுதும் பாசுபத வ்ருதத்துடனும் ஸர்வாங்கங்களிலும் விபூதி தாரணம் செய்துகொண்டும், ஸ்ரீருத்ராத்யயனத்தில் விசேஷமாக ஈடுபட்டவராகவும் ஸ்ரீபரமேச்வரனை ஆராதனம் செய்துகொண்டு இங்கு ஒரு வருஷகாலம் வாஸம் செய்தார்."

एवं स्तुत्वा महादेवं दण्डवत्प्रणिपत्य च ।
जजाप रुद्रं भगवान् कोटिवारं जले स्थितः ॥

(லிங்க புராணம்)

ஏவம் ஸ்துத்வா மஹாதே³வம் த³ண்ட³வத்ப்ரணிபத்ய ச ।
ஜஜாப ருத்³ரம் ப⁴க³வான் கோடிவாரம் ஜலே ஸ்தி²த: ॥

"இவ்வாறு மஹாதேவனைத் துதித்து ஸாஷ்டாங்கமாக வணங்கி ஸ்ரீ கிருஷ்ணன் ஜலத்தில் நின்றுகொண்டு கோடி தடவை ருத்ரத்தை ஜபித்தார்."

भास्वस्त्रिपुण्ड्रो भसितैस्सितस्सन् मौनी जपी बल्कलवान् मुकुन्दः ।
निरन्तरं चेतसि चन्द्रचूडं विचिन्तयन् पञ्च जजाप वर्णान् ॥

(ஹரி வம்சம்)

**பா4ஸ்வஸ்த்ரிபுண்ட்3ரோ ப4ஸிதைஸ்ஸிதஸ்ஸன்**
**மௌனீ ஜபீ ப3ல்கலவான் முகுந்த3: ।**
**நிரந்தரம் சேதஸி சந்த்3ரசூட3ம்**
**விசிந்தயன் பஞ்ச ஜஜாப வர்ணான் ॥**

“பளிச்சென்று பிரகாசிச்கும் திருபுண்ட்ரத்தை தரித்துக்கொண்டு உடல் முழுவதும் விபூதியால் வெளுத்தவராகவும், தலையில் ஜடையும், இடையில் மரவுரியும் அணிந்து வேறு பேச்சைப் பேசாதவரான ஸ்ரீ கிருஷ்ணன், சந்திரசேகரனை மனதில் இடை விடாமல் த்யானம் செய்துகொண்டு பஞ்சாக்ஷரத்தை ஜபித்துவந்தார்.”

மஹாபாரதத்திலேயே, மானஸ ஸரஸ்ஸில் மிக உக்ரஸ்வரூபத்துடன் இருந்த பாசுபதாஸ்த்ரத்தை ஸமாதானப்படுத்துவதற்காக ஸ்ரீ கிருஷ்ணன் ருத்ர பாராயணம் செய்தார் என்றும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

பரப்ருஹ்மஸ்வரூபியாயும், எப்பொழுதும் ஸமஸ்த அபீஷ்டங்களுடன் கூடியிருப்பவருமான ஸ்ரீகிருஷ்ணன் ஒரு மந்த்ரத்தை ஜபித்து அதனால் சில பயன்களை அடைய வேண்டுமென்பதில்லை. இருந்தாலும் உலகில் மற்றவர்கள் இம்மாதிரி மஹா மந்த்ரங்களை ஜபித்து அவர்களுக்கு வேண்டியவற்றை யெல்லாம் பெறலாம் என்பதை எடுத்துக் காட்டுவதற்காகவே ஸ்ரீகிருஷ்ணன் மந்த்ரஜபம் ருத்ரபாராயணம் முதலிய பல கர்மாக்களையும் அனுஷ்டித்து வருகிறார். கீதையிலும் இவ்வாறே மொழிந்திருக்கிறார்.

**न में पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किञ्चन ।**
**नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि ॥**

**ந மேம் பார்தா2ஸ்தி கர்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சன ।**
**நானவாப்தமவாப்தவ்யம் வர்த ஏவ ச கர்மணி ॥**

“ஏ அர்ஜுனா! மூவுலகங்களிலும் எனக்கு ஆக வேண்டியது ஒன்றுமில்லை. இதுவரை என்னிடமில்லாத எதுவும் இக் கர்மாவைச் செய்து அடைய வேண்டுமென்பதும் எனக்கில்லை. இருந்தாலும் நான் எல்லா கர்மாக்களையும் அனுஷ்டித்துக் கொண்டே வருகிறேன்."

"நான் செய்யாதபோனால் என்னைப் பின்பற்றி மற்றவர்களும் கர்மாக்களை அனுஷ்டிக்காமல் அழிந்து விடுவர். உலகில் சிறந்தவன் எதைச் செய்கின்றானோ, எதை நம்பு அதையே ஸாதாரண ஜனங்கள் செய்வர், நம்புவர். ஆதலால் கர்மானுஷ்டானத்தால் நமக்கு ஆகவேண்டியது இல்லையானாலும், மற்றவர்களை கர்மானுஷ்டானத்தில் தூண்டுவதன் பொருட்டாவது நாம் அவசியம் கர்மாக்களை அனுஷ்டித்தே ஆகவேண்டும்."

இவ்வாறு ஸ்ரீருத்ரமஹிமையைப்பற்றி புராணங்களிலிருந்தும் பல வசனங்களை எடுத்துக்காட்டலாம். ஆனால் அது மிகவும் விரியுமெனக்கருதி ஸூதஸம்ஹி

தையிலிருந்துமட்டும் ஒரு வசனத்தை எடுத்துக்கூறி அத்துடன் முடித்துக் கொள்ளுகிறோம்.

**रुद्रजापी विमुच्येत महापातकपञ्जरात् ।**
**सम्यग्ज्ञानं च लभते तेन मुच्येत बन्धनात् ॥**
**अनेन सदृशं जप्यं नास्ति सत्यं श्रुतौ स्मृतौ ॥**

**ருத்³ரஜாபீ விமுச்யேத மஹாபாதகபஞ்ஜராத் ।**
**ஸம்யக்³ஜ்ஞானம் ச லப⁴தே தேன முச்யேத ப³ந்த⁴னாத் ॥**
**அனேன ஸத்³ருஶம் ஜப்யம் நாஸ்தி ஸத்யம் ஶ்ருதௌ ஸ்ம்ருதௌ॥**

“ருத்ரஜபம் செய்கின்றவன் மஹாபாதகம் என்ற கூண்டிலிருந்து விடுதலை யடைந்துவிடுவான். ஆத்மஞானத்தை அடைவான். அஞ்ஞானம் என்ற கட்டிலிருந் தும் விடுதலையடைவான். வேதத்திலும் ஸ்மிருதியிலும் இதற்குச் சமமான ஜபம் வேறு ஒன்றுமே இல்லை. இது உண்மை."

# ஸ்ரீருத்ரம்

**नमस्ते रुद्र मन्यव उतोत इषवे नमः ।**
**नमस्ते अस्तु धन्वने बाहुभ्यामुत ते नमः ॥ १**

**நமஸ்தே ருத்$^{3}$ர மன்யவ உதோத இஷவே நம: |**
**நமஸ்தே அஸ்து த$^{4}$ன்வனே பா$^{3}$ஹுப்$^{4}$யாமுத தே நம: || 1**

| | | |
|---|---|---|
| **ருத்$^{3}$ர** | - | ஏ பரமேச்வர! |
| **தே** | - | தங்களுடைய, |
| **மன்யவே** | - | கோபத்தின்பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |
| **உதோ** | - | மேலும், |
| **தே** | - | தங்களுடைய, |
| **இஷவே** | - | பாணத்தின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம், |
| **தே** | - | தங்களுடைய, |
| **த$^{3}$ன்வனே** | - | வில்லின்பொருட்டு, |
| **நம: அஸ்து** | - | நமஸ்காரம் இருக்கட்டும், |
| **உத** | - | மேலும், |
| **தே** | - | தங்களுடைய, |
| **பா$^{4}$ஹுப்$^{4}$யாம்** | - | இரு கைகளின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**விளக்கம்:** ஸ்ரீருத்ரத்திற்கு ஸாயணர், பட்ட பாஸ்கரர், அபிநவசங்கரர் என்ற மூவர் பாஷ்யம் செய்திருக்கின்றனர். அந்த மூன்றையும் தழுவியே இந்த விளக்கம் எழுதப்பட்டிருக்கிறது.

இந்த ருத்ரத்தில் மொத்தம் 11 அனுவாகங்கள் உள்ளன. முதல் அனுவாகத்தால் கோபங்கொண்ட ஸ்ரீ ருத்ரனுக்கு ஸமாதானம் செய்யப்படுகிறது. 2 - வது முதல் 9 - வது அனுவாகம்வரை ஸ்ரீருத்ரனைப் பலவாறாகப் புகழ்ந்து வணங்கப்படுகிறது. கடைசீ இரு அனுவாகங்களால் ருத்ரனிடமும் ருத்ரகணங்களிடமும் வேண்டிக் கொள்ளப்படுகிறது.

ஸ்ரீருத்ரனுக்கு கோரமாயும் சாந்தமாயுமுள்ள பல உருவங்கள் உண்டு. அவற்றுள் கோரமான உருவத்தை சமாதானப் படுத்துவதற்காக, அவருடைய கோபம் ஆயுதம் முதலியவற்றிற்கெல்லாம் நமஸ்காரம் செய்யப்படுகிறது. எவ்வித குற்ற மற்றவரும் எல்லா குணங்களுடன் கூடியவருமான ஸ்ரீபரமேச்வரனுக்கு ஒருவனிடம் கோபம் ஏற்படக் கூடுமோவெனில், அவரது கட்டளையாகிற சுருதி ஸ்மிருதி முதலியவற்றை மீறி நடப்பவர்களிடம், அவர்களை சிக்ஷித்து, ஸந்மார்க்கத்தில் ஈடுபடும்

படி செய்வதற்கென கோபித்துக்கொள்வதென்பது குணமே அல்லாமல் குற்றமாக ஆகாது.

रुतं + द्रावयतीति = रुद्रः ருதம் + த்³ராவயதீதி = ருத்³ர꞉ என்ற வியுத்பத்தியை அனுசரித்து, துக்கம் அல்லது, துக்கத்திற்குக் காரணமான பாபம் இவற்றை விரட்டியடிக்கின்றபடியால் "ருத்ரன்" என ஸ்ரீபரமேச்வரனுக்குப் பெயர் ஏற்பட்டிருக்கிறது. இங்கு பாப நிமித்தமாக உண்டாகும் கோபத்தை விலக்கி சாந்தமாக இருக்கவேண்டுமென்பதற்காக "ருத்ர" என்ற சொல்லால் ஸம்போதனம் செய்யப்பட்டிருப்பது மிகவும் பொருத்தமானதே. எல்லாவித துக்கங்களுக்கும் கோபமே மூலகாரணமானதால் முதல் முதலாக அதற்கு நமஸ்காரம் செய்யப்படுகிறது. பரமேச்வரன் கோபங் கொண்டதும், அவருடைய அம்பு முன் வந்து நிற்கும். பிறகு வில்ஐல நோக்குவார். பின்பு அவ்விரண்டையும் எடுக்க இருகைகளும் முயற்சிக்கும். ஆதலால் அந்த வரிசையிலேயே கோபம், பாணம், வில், கைகள் இவைகளுக்கு நமஸ்காரம் செய்யப்பட்டிருக்கிறது.

பரமேச்வரனுடைய பாணம் முதலியவை தேவதைகள் போல் உபாஸிக்கத் தக்கவை. ஆதலால் இங்கு அவற்றை வணங்கி வேண்டிக்கொள்ளுவதென்பது மிகவும் பொருத்தமுள்ளது தான். ஒரு சமயம் பாசுபதாஸ்திரப் பிரயோகம் செய்யும் முறையை அர்ஜூனன் மறந்துவிட்டான். அதை அறிவதன் பொருட்டு ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜூனன் இருவரும் கைலாஸத்திற்குச் சென்றனர். அங்கு "ஓர் திவ்ய ஸரஸ்ஸில் அந்த அஸ்திரம் இருக்கின்றது. அதை எடுத்து வாருங்கள்" என அவ்விருவர்களுக்கும் பரமேச்வரன் உத்திரவிட்டார். அதன்படி அவ்விருவரும் அந்த ஸரஸ்ஸுக்குச் சென்று பார்க்கையில் பல ஸர்ப்பங்களின் வாய்களிலிருந்து வெளிவரும் கொடிய விஷஜ்வாஐலயால் வியாப்தமாயும், மிக பயங்கரமாயும், அந்த அஸ்திரம் தோற்றமளித்த்து. உடனே ஸ்ரீகிருஷ்ணன், அது சாந்தி அடைந்து தன்னிடம் வருவதன் பொருட்டு ருத்ர ஜபம் செய்தார். அதனுல் அந்த அஸ்திரம் மிக சாந்தமான உருவத்துடன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய கைக்குக் கிட்டியது" என மஹாபாரதத்தில் கூறப்பட்டிருக்கிறது. இதனுல் ஸ்ரீ பரமேச்வரனுடைய அம்பு முதலிய ஆயுதங்கள் உபாஸ்ய மூர்த்திகள் என்றும், சேதனங்கள் என்றும் தெரியவருகிறது.

ஒவ்வொரு மந்திரத்தின் ரிஷி, சந்தஸ், தேவதை முதலியவற்றை அறிந்து கொள்ளவேண்டியது மிக அவசியம் எனக் கூறப்பட்டிருக்கின்றபடியால் அபிநவ சங்கர பாஷ்யத்தில் அவையெல்லாம் விரிவாக எடுத்து எழுதப்பட்டிருக்கின்றன. இந்த முதல் மந்திரத்திற்கு ரிஷி - ஆத்ரேயர், சந்தஸ் - அநுஷ்டுப், தேவதை - ஸ்ரீருத்ரன்.

**த்யானம்: -**

**आकर्णकृष्टे धनुषि ज्वलन्तीं देवीमिषु भास्वति सन्दधानम् |**
**ध्यायेन्महेश महनीयवेषं देव्या युतं योधतनुं युवानम् ||**

**ஆகர்ணக்ருஷ்டே த⁴னுஷி ஜ்வலந்தீம் தே³வீமிஷூ பா⁴ஸ்வதி ஸந்த³தா⁴னம் |**
**த்⁴யாயேன்மஹேஶ மஹனீயவேஷம் தே³வ்யா யுதம் யோத⁴தனும் யுவானம் ||**

"காது வரையில் இழுக்கப்பட்ட ஒளிமிகுந்த வில்லில், ஜ்வலித்துக் கொண்டிருக்கும் பாணத்தைத் தொடுக்கின்றவரும், அழகிய வேஷத்துடன் கூடியவரும், போர் வீரனைப்போன்ற உடலை தரிப்பவரும், வாலிபப் பருவத்தில் உள்ளவரும் தேவியுடன் கூடியவருமான மஹேச்வரனை தியானம் தியானம் செய்ய வேண்டும்."

ப்ராஜாபத்ய கிருச்ரத்தை அனுஷ்டித்து 11 ஆயிரம் ஆவிருத்தி ஜபம் செய்தால் இந்த மந்திரம் சித்திபெறும். இந்த மந்திரத்தைச் சொல்லிக் கொண்டு பிரதக்ஷண நமஸ்காரங்களைச் செய்வதால் பரமேச்வரனுடைய அருளும், பாபக்ஷயமும், சமுதாயத்திற்குத் தலைவனாக இருக்கும் தன்மையும் சித்திக்கும். இதனால் செய்யக்கூடிய மற்ற பிரயோகங்களை எல்லாம் "ருத்ரகல்பார்ணவம்" முதலிய நூல்களிலிருந்து அறிந்துகொள்ளலாம். **(1)**

**यात इषुः शिवतमा शिवं बभूव ते धनुः ।**
**शिवा शरव्या या तव तथा नो रुद्र मृडय ॥ २**

**யாத இஷு꞉ ஶிவதமா ஶிவம் ப³பூ⁴வ தே த⁴னு꞉ |**
**ஶிவா ஶரவ்யா யா தவ ததா² நோ ருத்³ர ம்ருட³ய || 2**

| | | |
|---|---|---|
| **ருத்³ர** | - | ஏ பரமேச்வர! |
| **தே** | - | தங்களுடைய, |
| **யா இஷு:** | - | எந்த பாணமானது, |
| **ஶிவதமா** | - | மங்களகரமாக, |
| **ப³பூ⁴வ** | - | இருக்கின்றதோ, |
| **தே** | - | தங்களது, |
| **த⁴னு:** | - | எந்த வில்லானது, |
| **ஶிவம் ப³பூ⁴வ** | - | மங்களகரமாக இருக்கின்றதோ, |
| **தவ** | - | தங்களுடைய, |
| **யா ஸரண்யா** | - | எந்த அம்பராத்தூணி, |
| **ஶிவா** | - | மங்களகரமாக இருக்கின்றதோ, |
| **தயா** | - | அந்த பாணத்தாலும், வில்லாலும், அம்பராத்தூணியாலும், |
| **ந:** | - | எங்களை, |
| **ம்ருட⁴ய** | - | சுகமாக இருக்கும்படி செய்யவேண்டும். |

**விளக்கம்:** வேதத்தில் வர்த்தமான அர்த்தத்திலும் "லிட்" பிரயோகம் செய்யப்படலாமாகையால் இங்கு "ப³பூ⁴வ" என்பதற்கு இருக்கின்றதோ, என வர்த்தமானுர்த்தத்தைக் கொள்ளவேண்டுமென பட்டபாஸ்கர பாஷ்யம். பாபியான என்னிடம் முதலில் மிக பயங்கரமாக இருந்த எந்த பாணம் முதலியவை என்னுல் முன் மந்திரத்தால் வணங்கப்பட்டு சாந்த ஸ்வரூபங்களாக ஆயிற்றோ, அவற்றால் எனக்கு

சுகத்தை அளியுங்கள், என மற்ற இரு பாஷ்யங்களிலும் பொருள் கூறப்பட்டிருக் கிறது. இதன்படி பூதார்த்தத்திலே "ப³பூ⁴வ" என்ற சொல் பிரயோகம் செய்யப்பட்ட தாக ஆகிறது.

இந்த இரண்டாவது மந்திரத்திற்கு ரிஷி - ஆத்ரேயர். சந்தஸ் - அனுஷ்டுப், தேவதை சம்பு.

**த்யானம்:**

**ध्यायेद्देवं सस्मितं स्यन्दनस्थं देव्या सार्धं तेजसा दीप्यमानम् |**
**इष्विष्वासालंकृताभ्यां भुजाभ्यां शूराकारं स्तूयमानं सुरौघैः ॥**

**த்⁴யாயேத்³தே³வம் ஸஸ்மிதம் ஸ்யந்த³னஸ்த²ம்**
**தே³வ்யா ஸார்த⁴ம் தேஜஸா தீ³ப்யமானம் ।**
**இஷ்விஷ்வாஸாலங்க்ருதாப்⁴யாம் பு⁴ஜாப்⁴யாம் ஶூராகாரம்**
**ஸ்தூயமானம் ஸுரௌகை⁴: ॥**

"தேவியுடன் தேரில் அமர்ந்திருப்பவரும், தேஜஸ்ஸுடன் பிரகாசிப்பவரும், பாணம், வில் இவற்றால் அலங்கரிக்கப்பட்ட இரு கைகளாலும் சூரனைப்போல் விளங்குகிறவரும், தேவகணங்களால் போற்றப்பட்டவரும், சிரித்த முகத்துடன் கூடியவருமான தேவரை தியானம் செய்ய வேண்டும்."

இந்த மந்திரத்தை பன்னிரண்டு தினங்கள், நித்யகர்மாக்களுக்கு விரோத மில்லாமல் நடுநிசியைத்தவிர மற்ற காலங்களில் இடைவிடாமல் ஜபித்துவந்தால் சித்தி ஏற்படும். இது துர்பிக்ஷம் தேகக்ஷோபம் முதலியவற்றை பரிஹாரம் செய்வதற் கென்றே ஏற்பட்ட மஹாமந்திரமாகும். **(2)**

**या ते रुद्र शिवा तनूरघोरापापकाशिनी ।**
**तथा नस्तनुवा शन्तमया गिरिशन्ताभिचाकशीहि ॥ ३**

**யா தே ருத்³ர ஶிவா தனூரகோ⁴ராபாபகாஶினீ ।**
**ததா² நஸ்தனுவா ஶந்தமயா கி³ரிஶந்தாபி⁴சாகஶீஹி ॥ 3**

| | | |
|---|---|---|
| **ருத்³ர** | - | ஏ பரமேச்வர! |
| **தே** | - | தங்களுடைய, |
| **அகோ⁴ரா** | - | ஆயுதங்களால் பிறருக்கு பயத்தை உண்டு பண்ணுததும், |
| **ஶிவா** | - | ஐஹிக சுகங்களை அளிக்கக் கூடியதும், |
| **அபாபகாஸினீ** | - | மோக்ஷ சுகத்திற்குக் காரணமான ஆத்ம ஞானத்தை அளிக்கக்கூடியதுமான, |
| **யா** | - | எந்த, |
| **தநு:** | - | சரீரம் இருக்கின்றதோ, |

| | | |
|---|---|---|
| **தயா** | - | அந்த, |
| **ஸந்தமயா** | - | சிறந்த மோக்ஷ சுகத்தை அளிக்கும், |
| **தநுவா** | - | சரீரத்தால், |
| **கி[3]ரிஸந்த** | - | வேதப் பிரதிபாத்யமான பொருளாக இருந்து கொண்டு மோக்ஷம் வரையிலுமுள்ள எல்லா சுகங்களையும் அளிக்கக்கூடிய ஏ பரமேச்வரா! |
| **ந:** | - | எங்களுக்கு, |
| **அபி[4]சாகஸ்ஹி** | - | எங்கும் ஆத்மதத்துவம் விளங்கும்படி செய்யுங்கள். |

**விளக்கம்:** "முன் மந்திரத்தால் ஐஹிகசுகத்தை அளிக்கும்படி வேண்டிக் கொண்டு இந்த மந்திரத்தால் மோக்ஷ சுகத்தை அளிக்கும்படி வேண்டிக்கொள்ளுகி றார்," என்று அபிநவசங்கரர் பாஷ்யம். "ஸ்ரீபரமேச்வரனுடைய சாந்த மூர்த்திகளுள் சில ஆயுதங்களை தரித்துக்கொண்டிருப்பவை. சில ஆயுதங்கள் அற்றவை. முன் மந்திரத்தால் ஆயுதங்களுடன் கூடிய மூர்த்தி வேண்டிக்கொள்ளப்பட்டது. இந்த மந்திரத்தால் ஆயுதங்கள் அற்ற மூர்த்தி வேண்டிக் கொள்ளப்படுகிறது" என்று பட்ட பாஸ்கர பாஷ்யம்.

**அகோரா**.- ஆயுதங்களை கையில் ஏந்தி காரணமின்றி பயத்தை உண்டு பண்ணும் மூர்த்தி **கோரா**, அவ்வாறு அல்லாத மூர்த்தி இங்கு **அகோரா** என்ற சொல்லால் குறிப்பிடப்படுகிறது.

**ஶிவா** - மங்களகரம், அதாவது ஸம்ஸாரத்தில் உள்ள சுகங்களையும் அளிக்கக்கூடியது.

**அபாபகாசிநீ** - பாபத்திற்கு விரோதியான பிருஹ்மாத்மதத்வ ஞானம் இங்கு "அபாப" என்ற சொல்லால் குறிப்பிடப்படுகிறது. ஆத்மஞானம் ஏற்பட்டவுடன் ஸமஸ்த பாபங்களும் அழிந்துவிடுகின்றன என உபநிஷத் கூறுகின்றபடியால் ஆத்ம ஞானம் பாபத்திற்கு விரோதி என்று ஏற்படுகிறது. அத்தகைய ஆத்மதத்வ ஞானத்தை பிரகாசப்படுத்தும், அதாவது அளிக்கும் சரீரம் இங்கு **அபாபகாசிநீ** என்ற பதத்தால் குறிப்பிடப்படுகிறது."

**கிரிசந்த** - பரமேச்வரனைக் குறிக்கும் இச்சொல்லுக்கு பலவாறாக விவரணம் உரைக்கப்பட்டிருக்கிறது.

**गिरौ = कैलासे नित्याविर्भूतो यः**
**प्राणिभ्यः शं तनोति स गिरिशन्तः** -

**கி[3]ரௌ = கைலாஸே நித்யாவிர்பூ[4]தோ யஃ**
**ப்ராணிப்[4]யஃ ஶம்' தனோதி ஸ கி[3]ரிஶந்தஃ** -

கைலாச பர்வதத்தில் எப்பொழுதும் குடி கொண்டு எல்லாப்பிராணிகளுக்கும் சுகத்தை அளித்துக்கொண்டிருப்பவர்.

**गिरौ - वेदे तिष्ठन्नर्थरूपेण शं तनोति**

**கி³ரௌ - வேதே³ திஷ்ட²ன்னர்த²ரூபேண ஶம் தனோதி**

வேதங்களில் அவற்றின் பொருளாக இருந்துகொண்டு அனைவருக்கும் க்ஷேமத்தை செய்துகொண்டிருப்பவர்.

**गिरौ - प्रणवे तिष्ठन् ध्येयरूपेण निरतिशयब्रह्मानन्दलक्षणं शं तनोति**

**கி³ரௌ - ப்ரணவே திஷ்ட²ன் த்⁴யேயரூபேண**
**நிரதிஶயப்³ரஹ்மானந்த³லக்ஷணம் ஶம் தனோதி**

பிரணவத்தில் தியானம் செய்யத்தகுந்தவராக இருந்துகொண்டு பிருஹ்மானந்தம் என்ற ஒப்புயர்வற்ற சுகத்தை அளிக்கின்றவர்.

இந்த மந்திரத்திற்கு ரிஷி - காச்யபர், சந்தஸ் - ஸ்வராடநுஷ்டுப், தேவதை சம்பு.

**த்யானம்:**

**स्मैराननं चन्द्रकलावतंसं गङ्गाधरं शैलसुतासहायम् ।**
**त्रिलोचनं भस्मभुजङ्गभूषणं ध्यायेत्पशूनां पतिमीशितारम् ॥**

**ஸ்மைரானனம் சந்த்³ரகலாவதம்ஸம்' க³ங்கா³த⁴ரம் ஶைலஸுதாஸஹாயம் ।**
**த்ரிலோசனம் ப⁴ஸ்மபு⁴ஜங்க³பூ⁴ஷணம் த்⁴யாயேத்பஶூனாம் பதிமீஶிதாரம் ॥**

"சிரித்த முகத்துடன் கூடியவரும், சந்திர கலையை சிரசில் அணிந்தவரும், கங்கையை தரிப்பவரும், பர்வதராஜ குமாரியுடன் கூடியவரும், மூன்று கண்களை யுடையவரும், விபூதி, சர்ப்பங்கள் இவற்றை ஆபரணமாக அணிந்தவரும் பசுக்களு க்கு (ஜீவர்களுக்கு) பதியுமான ஈச்வரனைத் தியானம் செய்யவேண்டும்."

பசுக்களின் சாந்தியின் பொருட்டு இந்த மந்திரத்தின் ஜபம், ஹோமம் முதலியவை விதிக்கப்பட்டிருக்கின்றன. **(3)**

**यामिषुं गिरिशन्त हस्ते बिभर्ष्यस्तवे ।**
**शिवां गिरित्र तां कुरु मा हिप्सीः पुरुषं जगत् ॥ ४**

**யாமிஷும் கி³ரிஶந்த ஹஸ்தே பி³ப⁴ர்ஷ்யஸ்தவே ।**
**ஶிவாம் கி³ரித்ர தாம் குரு மா ஹிப்ஸீः புருஷம் ஜக³த் ॥ 4**

**கி$^3$ரிஶந்த** - ஏ பரமேச்வர!
**யாம் இஷும்** - எந்த பாணத்தை,
**அஸ்தவே** - பாபிகள்மேல் வீசி எறிவதற்காக,
**ஹஸ்தே** - கையில்,
**பி$^3$ப$^4$ர்ஷி** - தரித்துக்கொண்டிருக்கின்றீர்களோ,
**கி$^3$ரித்ர** - கைலாச மலையில் வாசம் செய்து, அதை ரக்ஷிக்கும் ஏ பரமேச்வர!
**தாம்** - அந்த பாணத்தை,
**ஶிவாம் குரு** - மங்களகரமாகச் செய்யுங்கள்,
**புருஷம்** - என்னைச் சேர்ந்த மனுஷ்யர்களையும்,
**ஜக$^3$த்** - மற்ற ஜங்கம ஸ்தாவர சொத்துக்களையும்,
**மா ஹிப்ஸீ:** - ஹிம்ஸிக்காமல் இருங்கள்.

**விளக்கம்:** இரண்டாவது மூன்றாவது மந்திரங்களால் இஷ்டசித்தியை வேண்டிக்கொண்டு இந்த நான்காவது மந்திரத்தால் அநிஷ்ட பரிஹாரத்தை வேண்டிக் கொள்கிறார். "**கிரிசந்த**" என்ற ஸம்போதனம் இருக்கையில் அதிகப்படியாக "**கிரித்ர**" என்றும் ஸம்போதனம் செய்யப்பட்டிருப்பதன் தாத்பர்யம், "அகார்யத்தைச் செய்தவன் ஆனாலும் என்னை பஜனம் செய்வானேயாகில் அவனுக்கு நற்புத்தியை அளித்து அவனை நான் "இரக்ஷிப்பேன்" என ஸ்ரீபரமேச்வரன் பிரதிக்ஞை செய்திருக் கிறார். கிரி அவ்வித பிரதிக்ஞையாகிறவாக்கில் உறுதியாக இருந்துகொண்டு, **த்ராயதே** தன்னை பஜிக்கின்றவர்களை "இரக்ஷிக்கின்றார்" என்று அபிநவசங்கர பாஷ்யத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. **(4)**

**शिवेन वचसा त्वा गिरिशाच्छा वदामसि ।**
**यथा नस्सर्वमिजगदयक्ष्म सुमना असत् ॥ ५**

**ஶிவேன வசஸா த்வா கி$^3$ரிஶாச்சா$^2$ வதா$^3$மஸி ।**
**யதா$^2$ நஸ்ஸர்வமிஜக$^3$த$^3$யக்ஷ்ம ஸுமனா அஸத் ॥ 5**

**கி$^3$ரிஶா** - கைலாச வாசியான ஏ பரமேச்வர!
**த்வா** - தங்களை,
**அச்சா$^2$** - அடைவதன் பொருட்டு,
**ஶிவேன வசஸா** - மங்களகரமான வார்த்தைகளால் (ஸ்தோத்திரத்தால்),
**யதா$^2$** - எப்படிச் செய்தால்,
**ந:** - எங்களுடைய,
**ஸர்வ ஜகத் இத்** - ஜங்கமமான மனுஷ்யன், பசு முதலியவையும்,
**அயக்ஷ்மம்** - ரோகம் அற்றவையாகவும்,
**ஸுமனா** - நல்ல மனதுடன் கூடியவையாகவும், அதாவது சுகமாக இருக்கக்கூடியவைகளாகவும்,
**அஸத்** - ஆகக்கூடுமோ - அவ்விதம்,

**வதா³மஸி** - வேண்டிக்கொள்கிறோம்.

**விளக்கம்:** இந்த ஐந்தாவது மந்திரத்தால் இஷ்டப் பிராப்தி அனிஷ்ட பரிஹாரம் இவ்விரண்டும் வேண்க்கொள்ளப்படுகிறது.

**கிரிச** - கைலாசத்தில் வசிப்பவர் என்றும், வேத் ப்ரதிபாத்யமான பொருள் என்றும், கைலாஸமஐல, மேகம், பிரணவம், வைகளுக்கெல்லாம் ஈச்வரன் என்றும் பலவாறாகப் பொருள் கூறப்பட்டிருக்கிறது.

**அச்ச** - இது அவ்யயம், ஸம்ஹிதாகாலத்தில் தீர்க்கம் சிரவிக்கும். ப்ராப்தும் (அடைவதற்கு) என ஸாயணரும், அபிமுகீகரணம் - தன்ஐன நோக்கும்படி செய்வ தற்கு என பட்டபாஸ்கரரும் பொருள் கூறியுள்ளார். ஆனுல் அபிநவசங்கரர் “அச்ச” என்பதை பரமேச்வர ஸம்போதனமாகக் கருதி, ஏ நிர்மல ஸ்வரூப! என்று பொருள் கூறியுள்ளார். இவ்வாறு ஸம்போதனம் செய்வதால் ஓர் விசேஷார்த்தம் கிடைக்கின் றது. அதாவது பாபிகளுடைய ஸ்தோத்ர சம்பந்தத்தால் பரமேச்வரனுக்கும் தோஷம் சம்பவிக்குமோவெனில், அது ஒருநாளும் சம்பவிக்காது. அவர் எப்பொழுதும் பரிசுத்த மான ஸ்வரூபத்தையுடையவர் என்ற பொருள் "அச்ச” என்ற ஸம்போதனத்திலிரு ந்து கிடைக்கின்றது. தெருவில் உள்ள அசுத்த ஜல சம்பந்தத்தால் எப்பொழுதும் பாவனமான கங்காஜலத்தின் மஹிமை குறைவதில்ஐல. அதற்கு மாறுதலாக கங்கா ஜல சம்பந்தத்தால் மற்ற ஜலந்தான் யமுனு ஜலம்போல் மிகவும் பாவனமாக ஆகின்றது. அதுபோல் நித்ய பரிசுத்தரான பரமேச்வரஐனத் துதிக்கும் பாபிகளுடைய வார்த்தைகள் எல்லாம் பரமேச்வர ஸம்பந்த வசத்தால் பரமபாவனமாக ஆகிவிடு கின்றன. ஆதலால்தான் "சிவேன வசஸா" என்று இதே மந்திரத்தில் கூறப்பட்டு ள்ளது.

நான்காவது, ஐந்தாவது இரண்டும் சேர்ந்து ஒரே மந்த்ரம், இதற்கு ரிஷி - கௌதமர். சந்தஸ் - காயத்ரீ, தேவதை - ருத்ரன்.

**த்யானம்:**

**सांग्रामिकेन वपुषा प्रविराजमानं**
**देवं पुरलयविनाशन मन्दहासम् ।**
**दैत्यान् दिधक्षुमचलेश्वरचापपाणि**
**ध्यायेत्पुरारिमथ भूमिरथाधिरूढम् ॥**

**ஸாங்க்³ராமிகேன வபுஷா ப்ரவிராஜமானம்’**
**தே³வம்’ புரலயவிநாஶன மந்த³ஹாஸம் ।**
**தை³த்யான் தி³த⁴க்ஷுமசலேஶ்வரசாபபாணி**
**த்⁴யாயேத்புராரிமத² பூ⁴மிரதா²தி⁴ரூட⁴ம் ॥**

“போருக்குரிய வேஷங்கள் பூண்ட உடலால் விளங்குகின்றவரும், முப்புரத்தை அழிக்கும் மந்தஹாசத்தை உடையவரும், அசுரர்களை தஹிக்க விரும்புகின்றவரும், மேருமலையை வில்லாகக்கையில் தரிப்பவரும், பூமியாகிற தேரில் வீற்றிருப்பவருமான, முப்புரத்திற்கு எதிரியான ஸ்ரீபரமேச்வரனைத் தியானம் செய்யவேண்டும்.”

திருபுர ஸம்ஹார காலத்தில் ஸ்ரீபரமேச்வரன் பூண்ட வேஷங்களையும் அவருடைய நிலையையும் இந்த சுலோகம் எடுத்துரைக்கின்றது. இந்த இரு மந்த்ரங்களையும் சேர்த்து 21 தினங்கள் இடைவிடாமல் ஜபித்தால் சித்தியைப் பெறலாம். அகால மரணம் முதலிய தீங்குகள் இம்மந்த்ர ஜபத்தால் விலகும். **(5)**

**अध्यवोचदधिवक्ता प्रथमो दैव्यो भिषक् ।**
**अही श्च सर्वान् जम्भयन् सर्वाश्च यातुधान्यः || ६**

**அத்⁴யவோசத³தி⁴வக்தா ப்ரத²மோ தை³வ்யோ பி⁴ஷக் ।**
**அஹீ ஶ்ச ஸர்வான் ஜம்ப⁴யன் ஸர்வாஶ்ச யாதுதா⁴ன்ய: || 6**

| | | |
|---|---|---|
| **அதி⁴வக்தா** | - | பக்தர்களுக்குப் பரிந்து பேசுகின்றவரும், |
| **ப்ரத²ம:** | - | அனைவரையும் விடச் சிறந்தவராயும், |
| **தை³வ்ய:** | - | தேவர்களிடமும் அந்தர்யாமியாக இருப்பவரும், |
| **பி⁴ஷக்** | - | பாவம், ரோகம், ஸம்ஸாரம், வறுமை முதலிய எல்லா துன்பங்களுக்கும் சிகித்ஸை அளிக்கும் வைத்யருமான பரமேச்வரன், |
| **ஸர்வான் அஹீப்ஷ்ச** | - | நேரில் நின்று ஹிம்ஸை செய்யும் பாம்பு, தேள், திருடன் முதலியவர்களையும், |
| **ஸர்வாஷ்ச யாது தா⁴ன்ய:** | - | மறைந்து நின்று ஹிம்சைபுரியும் ராக்ஷஸர்கள், பிசாசுகள் முதலியவைகளையும், |
| **ஜம்ப⁴யன்** | - | நாசம் செய்துகொண்டு, |
| **அத்⁴யவோசத்** | - | எனக்காகப் பரிந்து பேசட்டும். |

**விளக்கம்:** ஸ்ரீ பரமேச்வரனை வணங்கி துதித்தபோதிலும், பாபங்களுக்கேற்ற தண்டனைகளை விதிக்கும் யமன் சித்ரகுப்தன் முதலியவர்களும், ஷை பாபங்களுக்கு சாக்ஷியாக மற்ற தேர்களும் இருக்கையில் பரமேச்வரன் எப்படி தாமாக துதிக்கின்றவர்களை ரக்ஷிக்க முடியும்? என்றால் பரமேச்வர அருளைப் பெற்றவர்களிடம் மற்றயாரும் எதையும் செய்யமுடியாது என இந்த மந்த்ரம் கூறுகின்றது.

**அதிவக்தா** - தன்னை அண்டியவர்களுக்குப் பரிந்து பேசுகின்றவர். பரமேச்வர பஜனம் என்ற சிறந்த கர்மாவிற்குப் பயனுக பரமேச்வரன் பக்தர்களுக்குப் பரிந்து பேசுகிறார். ஆதலால் அது குற்றமாக ஆகாது.

**ப்ரதம**: -பரமேச்வரன் பரிந்து பேசியபோதிலும், யமன் தண்டிக்காமல் இருக்க க்கூடுமோ? என்ற சங்கைக்கு ஸமாதானம் "ப்ரதம:" என்ற சொல்லிலிருந்து கிடைக்கின்றது.

**"यो देवानां प्रथमं पुरस्ताद्विश्वाधिको रुद्रो महर्षिः"**
**"तमीश्वराणां प्रथमं महेश्वरं तं दैवतानां प्रथम च दैवतम्"**
**"यो देवः सर्वदेवेषु महादेव इति स्मृतः।**
**तस्मै नमस्तु कुर्वाणा दिवि तिष्ठन्ति देवताः ॥"**

**"யோ தே³வாஞும் ப்ரத²மம் புரஸ்தாத்³விஸ்வாதி⁴கோ ருத்³ரோ மஹர்ஷி:"**
**"தமீஸ்வராணாம் ப்ரத²மம் மஹேஸ்வரம் தம் தை³வதாஞும் ப்ரத²ம ச தை³வதம்"**
**யோ தே³வ: ஸர்வதே³வேஷு மஹாதே³வ இதி ஸ்ம்ருத: |**
**தஸ்மை நமஸ்து குர்வாணா தி³வி திஷ்ட²ந்தி தே³வதா: ||"**

"தேவதைகளுள் முதல்வன், உலகிலேயே சிறந்தவன்" "ஈச்வரர்களுள் முதலான மஹேச்வரன். தேவதைகளுள் முதலான தேவதை" எல்லா தேவர்களுள் எவர் "மஹாதேவன்" என்று வழங்கப்படுகின்றாரோ அவர் பொருட்டு நமஸ்காரம் செய்துகொண்டே தேவலோகத்தில் தேவர்கள் வாழ்கின்றனர்" என்றெல்லாம் கூறும் பல சுருதி ஸ்மிருதி இதிஹாசங்களிலிருந்து பரமேச்வரன் அனைவரையும்விடச் சிறந்தவர் என்று தெரிய வருகிறது. அவருடைய அருளைப்பெற்ற பக்தனை அவரை வணங்கும் மற்றவர்கள் எப்படி தண்டிக்க முன்வரக்கூடும்?

பரமேச்வரோபாஸகன் மற்றவர்களால் துன்புறுத்தப்படமாட்டான் என்பது மட்டுமில்லை, போற்றவும் படுவான் என்றும் "தைவ்ய:" என்ற சொல்லால் குறிப்பிடப் படுகின்றது. "தைவ்ய:" என்றால் தேவர்களுள் அந்தர்யாமியாக இருப்பவன் என்று பொருள். அவ்வாறு இருந்துகொண்டு பரமேச்வரோபாஸகனைப் போற்றும்படியும் தேவர்களுடைய புத்தியைத் தூண்டுகின்றார்.

**பிஷக்** - இச் சொல்லிற்கு "வைத்யன்" என்பது பொருள். உலகில் வியாதி யைப்போல் பிராணிகளை துன்புறுத்தக் கூடியவை, பாபம், ஸம்ஸாரதுக்கம், வறுமை முதலிய எவ்வளவோ இருக்கின்றன. அவை எல்லாவற்றிற்கும் சிகிச்சை யளிக்கக்கூடியவர் ஸ்ரீபரமேச்வரன். ஆதலால்தான் பொதுவாக "பிஷக்தமம் த்வா பிஷஜாம் ச்ருணோமி" (வைத்தியர்களுள் மிகச்சிறந்த வைத்தியர்) என்று வேறு ஒரு சுருதியும் கூறுகிறது. 'பிஷக்' என்ற சொல் பரமேசவரன் கருணை நிரம்பியவர் என்பதையும் குறிப்பிடுகின்றது. வியாதியால் வருந்துகின்றவனுக்கு அந்த வியாதி யின் காரணத்தை அறிந்தவன் சில சமயம் சஸ்த்ர சிகித்சை செய்யலாம். அது ரோகி க்கு ஹிம்சையானாலும் அவனுடைய நன்மையின் பொருட்டே செய்யப்பட்ட தாகையால் அதைச் செய்த வைத்தியனை குரூரன் என்று சொல்லாமல் தயை நிரம் பியவன் என்றே கூறுவர். அதுபோல் ஸம்ஸார வைத்தியரான பரமேச்வரனும் துஷ்டர்களான இராக்ஷஸர்கள், சர்ப்பங்கள் முதலியவற்றை தண்டித்தபோதிலும்,

அதனுல் அவற்றின் பாவம் நீங்கி காலக்கிரமத்தில் அவை நற்கதியடையக் கூடுமா தலால் அச்செய்கையாலும் பரமேச்வரன் தயை நிரம்பியவர் என்பதுதான் உறுதியா கிறது.

**निदानशस्य भिषजो रुग्णे हिंसां प्रयुञ्जतः ।**
**न किञ्चिदत्र नैर्घृण्यं घृणैवात्र प्रयोजिका ॥**

**நிதா³னஶஸ்ய பி⁴ஷஜோ ருக்³ணே ஹிம்ஸாம் ப்ரயுஞ்ஜத꞉ ।**
**ந கிஞ்சித³த்ர நைர்க்⁴ருண்யம் க்⁴ருணைவாத்ர ப்ரயோஜிகா ॥**

என்ற சிவபுராண சுலோகத்தில் "பிஷக்" என்ற சொல் பரமேச்வரனுடைய கருணை யையே எடுத்துக் காட்டுகின்றது எனக் கூறப்பட்டிருக்கிறது.

**ஜம்பயந் அத்யவோசத்** - தன் பக்தர்களின் விரோதிகளை அழித்தபின் பக்தர்களுக்கு பரிந்துபேசவேண்டும் என்று வேண்டிக்கொள்ளப்படுகிறது. பக்தர்களின் விரோதிகள் யாராயிருந்தாலும் அவர்களை நிக்ரஹம் செய்யத் திறமையற்றவரா னுல், முதலில் பரிந்துபேசி பிறகு அவர்களை அழிக்கவேண்டும் என்று வேண்டிக் கொள்ளப்படும். பரமேச்வரன் யாரையும் எக்காலத்திலும் அனுயாசமாக அழிக்கத் திறமை உள்ளவராகையால் முதலில் விரோதிகளை அழித்து, பிறகு அவர்களுக்காக பரிந்து பேசவேண்டும் என இங்கு வேண்டிக்கொள்ளப்படுகிறது. தன்னை அண்டிய வனை இரக்ஷிப்பதன் பொருட்டு பிறரை தண்டித்தால், அப்பொழுது மற்ற தேவர்கள் "பல பாபங்களைச் செய்த இவனை இரக்ஷிக்கலாமா?" என்று கேட்கக்கூடும். அத்தருணத்தில் "இவன் என்னை அண்டி பலவாறாகப் போற்றினுன், இவனிடம் இனி ஏது பாபம்? இவன் சிறந்த புண்ணியசாலியல்லவோ? என்றெல்லாம் பரமேச்வ ரன் பரிந்து பேசுவார்." ஆதலால்தான் “அதிப்ருவஞ்ஜம்பயது" என்று கூறாமல் "ஜம்பயந்நத் யவோசத்" என்று கூறப்பட்டிருக்கிறது.

காட்டில் பல பாபகாரியங்களைச் செய்துகொண்டிருக்கும் வேடர்கள் ஒரு சமயம் வில்வ மரத்தின் மேல் ஏறி நின்றுகொண்டு வில்வ தளங்களைப் பரித்து கீழே எறிந்துகொண்டிருந்தனர். அவ்விடத்தில் ஒரு சிவலிங்கம் இருந்தது. அதை வேடர்கள் அறியவில்லை. இருந்தாலும் அவர்கள் போட்ட வில்வதளங்கள் சிவலிங் கத்தின் மேல் விழுந்ததால் அவர்களையும் தனது பக்தர்கள் எனக்கருதி பரமேச்வரன் அவர்கள் இறந்தவுடன் அவர்களைக் கைலாசத்திற்கு அழைத்துவரும்படி உத்தர விட்டார். பரமேச்வர தூதர்கள் அதன்படி அழைக்கவந்த காலத்தில் யமதூதர்கள் அவர்களை எதிர்த்தனர். யமதூதர்களை வென்று சிவதூதர்கள் அந்த வேடர்களை கைலாசத்திற்கு அழைத்துச் சென்றுவிட்டனர். பிறகு யமன் சித்ரகுப்தன் முதலியவர் கள் பரமேச்வரனிடம் சென்று மிகக்கொடிய பாவங்களைச் செய்த இந்த வேடர்கள் எங்கள் தண்டனைக்குள்ளாக வேண்டியவர்கள், அவர்களை எப்படி கைலாசத்திற்கு அழைத்துவரலாம்' என வினவ, வேடர்கள் தெரிந்தோ தெரியாமலோ என்மேல் வில்வ தளங்களைப் போட்டதால் அவர்களிடம் உள்ள பாவங்கள் பறந்துவிட்டன. ஆதலால் அவர்களை தண்டிக்க உங்களுக்கு அதிகாரமில்லை, என பதிலுரைத்தார். இதுபோன்ற பல கதைகள் சிவபுராணங்களில் காணப்படுகின்றன. இவற்றில் யம

தூதர்களை அடித்து விரட்டியபின் வேடர்களுக்காக யமன் சித்ர குப்தன் முதலியவர்களிடம் பரிந்து பேசியதாகக் காணப்படுகிறது.

இதே ருத்ரத்தில் மேலேயும் "ரக்ஷா ச நோ அதிசதேவப்ருஹி" என்று முதலில் இரக்ஷித்தல், பின்பு பரிந்துபேசுதல் என்று கூறப்பட்டிருக்கிறது.

இந்த மந்த்ர ஜபம் இராக்ஷஸர்கள், பிசாசுகள், விஷம், ஜ்வரம் முதலியவற்றால் ஏற்படும் துன்பங்களை அறவே அழிக்கக்கூடியது. ஆதலால் இந்த மந்த்ரம் "கவசம்" என மஹரிஷி போதாயனரால் வழங்கப்பட்டிருக்கிறது. :

இந்த மந்த்ரத்தின் ரிஷி- கண்வர். சந்தஸ் - அனுஷ்டுப். தேவதை - சம்பு.

**த்யானம்:**

**चन्द्रार्धमौलि कालारिं व्यालयज्ञोपवीतिनम् ।**
**ज्वलत्पावकसंकाशं ध्यायेदेवं त्रिलोचनम् ||**

**சந்த்³ரார்த⁴மௌலி காலாரிம் வ்யாலயஜ்ஞோபவீதினம் ।**
**ஜ்வலத்பாவகஸங்காஶம் த்⁴யாயேதே³வம் த்ரிலோசனம் ॥**

"அர்த்த சந்திரனை சிரஸில் அணிந்தவரும், யமனை வென்றவரும், சர்ப்பத்தை உபவீதமாக அணிந்தவரும், எரியும் நெருப்பைப்போல் பிரகாசிக்கின்றவரும், முக்கண்ணனுமான தேவனை தியானம் செய்யவேண்டும்."

ஐம்பது ஆயிரம் தடவை இந்த மந்த்ரத்தை ஜபித்தால் மந்த்ரசித்தி உண்டாகும். **(6)**

**असौ यस्ताम्रो अरुण उत बभ्रुस्सुमङ्गलः ।**
**ये चे माँ रुद्रा अभितो दिक्षु श्रिताः सहस्रशो वैषाँ हेड ईमहे ॥**

**அஸௌ யஸ்தாம்ரோ அருண உத ப³ப்⁴ருஸ்ஸுமங்க³லः ।**
**யே சே மாம் ருத்³ரா அபி⁴தோ தி³க்ஷு ஶ்ரிதாः ஸஹஸ்ரஶோ வைஷாம் ஹேட³ ஈமஹே ॥**

| | | |
|---|---|---|
| **ய:** | - | முன் மந்திரங்களால் கூறப்பட்ட பரமேச்வரனே, |
| **தாம்ரோ:** | - | (உதய காலத்தில்) மிகவும் சிவப்பாயும், |
| **அருண:** | - | (உதயமானவுடன்) சொற்ப சிவப்பாயும், |
| **உத** | - | மேலும், |
| **ப³ப்⁴ரு:** | - | (சற்று நேரத்திற்குப்பின்) பொன்னிறமாயும், |
| **ஸுமங்க³ல:** | - | மிகவும் மங்கள கரமாயுமுள்ள, |
| **அஸௌ** | - | நமக்கெதிரில் நேரே தோன்றும் சூரியனுக |

விளங்குகின்றார்.

**இமாம்** - இந்த பூமிக்கு,
**அபி4த** - நான்கு பக்கங்களிலும்,
**தி3க்ஷு** - திக்குகளில்,
**ஶ்ரிதா꞉** - ஆச்ரயித்திருக்கின்ற,
**ஸஹஸ்ரஶோ** - ஆயிரக்கணக்கான,
**யே ச ருத்3ரா:** - எந்த ருத்ரர்கள் இருக்கின்றனரோ,
**ஏஷாம்** - இவர்கள் அனைவருடையவும்,
**ஹேட3** - கோபத்தை,
**அவ ஈமஹே** - (துதி நமஸ்காரம் முதலியவற்றால்) நிவிருத்தி செய்கின்றோம்.

**கருத்துரை:** பரமேச்வரனுக்கு, பிருதிவி, ஜலம், அக்னி, வாயு, ஆகாயம், சந்திரன், சூரியன், யஜமானன் என்று எட்டு உருவங்கள் உள. அவற்றுள் சூரிய ஸ்வரூபியான பரமேச்வரன் இந்த ஏழாவது எட்டாவது மந்த்ரங்களால் போற்றப்படு கின்றார். சூரிய மண்டலம் உதய காலத்தில் மிகவும் சிவந்ததாயும், அதற்குப் பின் சற்று சிவந்ததாயும் பின்பு பொன்னிறமாயும் காணப்படுகின்றது. இருள் பனி முதலிய வற்றை நீக்கி அனைவருக்கும் ஸௌக்கியத்தை உண்டு பண்ணுவதால் "ஸுமங்கல:" மிகவும் கங்களகரம் என்று சூரிய மண்டலம் போற்றப்படுகின்றது. சூரியன் இல்லாவிடில் உலகம் முழுவதும் இருள் சூழ்ந்து அமங்களமாக ஆகிவிடும். சூரியனுடைய கிரணங்கள் உலகம் முழுவதும் வியாபித்திருப்பதுபோல் பரமேச்வர னது உருவம் போன்ற உருவத்தைக்கொண்ட ஆயிரக்கணக்கான பரமேச்வர கணங்கள் பூமண்டலத்தைச் சுற்றி பலவிடங்களிலும் இருந்துகொண்டு ஜனங்களு டைய புண்ணிய பாபங்களுக்கேற்றபடி அநுக்ரஹத்தையும் நிக்ரஹத்தையும் செய்து வருகின்றனர். சூரிய மண்டல ரூபியான ஸ்ரீ பரமேச்வரன், எங்கும் ஆயிரக்கணக்காக வியாபித்திருக்கும் ஸ்ரீருத்திரகணங்கள், இவர்கள் அனைவருடையவும் கோபத்தை ஸ்தோத்ரம், நமஸ்காரம் முதலியவற்றால் நிவிருத்தி செய்கின்றோம். அவர்கள் எல்லோரும். எங்களுக்கு அருள் புரியட்டும்.

**ஹேட:** - என்பதற்கு அனாதரவு, கோபம் என்று இரு பொருள்களும் உண்டு. வேதங்களில் விதிக்கப்பட்டதைச் செய்யாததால் அனாதரவும், நிஷித்தங்களை அனுஷ்டிப்பதால் கோபமும் உண்டாகும். அவ்விரண்டையும் நாங்கள் நிவிருத்தி செய்கின்றோம் எனக் கூறப்படுகிறது. **(7)**

**असौ योऽवसर्पति नीलग्रीवो विलोहितः ।**
**उतैनं गोपा अदृशन्नदृशन्नदहार्यः ॥**
**उतैनं विश्वा भूतानि स दृष्टो मृडयाति नः ||**

**அஸௌ யோ(அ)வஸர்பதி நீலக்3ரீவோ விலோஹித꞉ ।**
**உதைனம் கோ3பா அத்3ருஶன்னத்3ருஶன்னத3ஹார்ய꞉ ॥**
**உதைனம் விஶ்வா ப்4ருதானி ஸ த்3ருஷ்டோ ம்ருட3யாதி ந꞉ ॥**

| | | |
|---|---|---|
| **ய:** | - | எந்த பரமேச்வரன், |
| **நீலக்3ரீவ:** | - | காலகூட விஷத்தை தரிப்பதால் கருப்பான கழுத்தையுடையவராக இருக்கின்றாரோ, அவரே, |
| **விலோஹித:** | - | மிகவும் சிவந்த வர்ணத்தையுடையவராக இருந்துகொண்டு, |
| **அஸௌ** | - | நேரில் காணப்படும் சூரிய மண்டலத்திற் குள் இருப்பவராக, |
| **அவஸர்பதி** | - | ஆகாயத்தில் சென்றுகொண்டிருக்கிறார், |
| **கோ3பாஉத** | - | இடையர்கள்கூட, |
| **ஏனம்** | - | இந்த ஆதித்ய ரூபியான ருத்ரனை, |
| **அத்3ருஷன்** | - | பார்க்கின்றனர், |
| **உத3 ஹார்ய:** | - | ஜலத்தை எடுத்துவரும் ஒன்றுமறியாத பெண்கள் கூட, |
| **அத்3ருஷன்** | - | பார்க்கின்றனர், |
| **ஏனம்** | - | இந்த ருத்ரனை, |
| **விஷ்வா பூ4தானி** | - | மாடு, ஆடு முதலிய ஸமஸ்த பிராணி களும் (பார்க்கின்றன). |
| **ஸ:** | - | ஆதித்யரூபியான பரமேச்வரன், |
| **த்3ருஷ்ட:** | - | நம்மால் பார்க்கப்பட்டவராக இருந்து கொண்டு, |
| **ந:** | - | நம்மை, |
| **ம்ருட3யாதி** | - | சுகத்தை அனுபவிப்பவர்களாகச் செய்ய வேண்டும். (நமக்கு சுகத்தை அளிக்க வேண்டும்.) |

**கருத்துரை:** ஏழாவது மந்த்ரத்தால் ஸ்ரீருத்ரனுக்கு ஸமாதானத்தை உண்டு பண்ணி இந்த எட்டாவது மந்த்ரத்தால் இஷ்டசித்தியை வேண்டிக்கொள்ளுகிறார். ஸ்ரீபரமேச்வரனே தன்னை அனைவரும் கண்டுகளிக்கட்டும் என்ற கருணையால் பிரதிதினம் சூரிய மண்டல ரூபமாக ஆகாய மார்க்கத்தில் சென்று வருகின்றார். அதனால் ஒன்றுமறியாத பாமர மக்கள் கூட ஸ்ரீருத்ரனை நேரில் பார்க்க வசதி ஏற்பட்டிருக்கின்றது. பொதுவாக அறிவற்றவர்களைக் குறிப்பிடுங்காலத்தில் இடை யர்களையே உதாரணமாக கூறுவது வழக்கம். "ஆபாலகோபாலம்" எனச் சொல்லு வதுண்டு. அதை அநுசரித்தே இந்த மந்திரத்தில் **गोपा अदृशन्** **கோ3பா அத்3ருஶன்** எனக்கூறப்பட்டிருக்கிறது. அவர்களுக்கிருக்கும் அறிவுகூட இல்லாத தண்ணீர் குடம் தூக்கிவரும் பெண்களும் சூர்யமண்டல ரூபியான இந்த ருத்ரனைப் பார்க்கின்றனர். அது மட்டுமா? ஆடு மாடு முதலிய பிராணிகள்கூட கண்டு களிக்கின்றன. ஸச்சிதா னந்த மயமான அத்வைதஸ்வரூபம் யாருடைய அறிவிற்கும் எட்டாதது. கைலாச வாசியான ஸகுணஸ்வரூபமோ வெனில் உபாஸகர்களால் மட்டும் அறியத்தகுந்தது. சூர்யமண்டல ரூபியான ஸ்ரீபரமேச்வர ஸ்வரூபமோ ஸமஸ்த பிராணிகளும் கண்டு களிக்கத்தகுந்தது. அனைவரும் இந்த ஸ்வரூபத்தை தரிசித்து சிரேயஸ்ஸை

யடையட்டும் என்ற மிகுந்த கருணையுடன் ஆகாயத்தில் சென்றுவரும் ஸ்ரீபரமேச்வரன் நமக்கு சுகத்தை அளிக்கட்டும், என இங்கு வேண்டிக் கொள்ளப்படுகிறது.

7 - வது மந்த்ரத்திற்கு சந்தஸ்:- ஆஸ்தார பங்க்தி, 8 - வது மந்த்ரத்திற்கு ஆறு பாதங்கள் கொண்ட ஜகதீசந்தஸ். இரண்டிற்கும் ரிஷி - மருத்வாந். தேவதை - ஆதித்ய ஸ்வரூபியான ஸ்ரீபரமேச்வரன்.

**த்யானம்:**

**मण्डलान्तरगतं हिरण्मयं भ्राजमानवपुषं शुचिस्मितम् ।**
**चण्डदीधितिमखण्डितद्युतिं चिन्तयेन्मुनिसहस्रसेवितम् ॥**

**மண்ட³லாந்தரக³தம் ஹிரண்மயம் ப்⁴ராஜமானவபுஷம் ஶுசிஸ்மிதம் ।**
**சண்ட³தீ³தி⁴திமக²ண்டி³தத்³யுதிம் சிந்தயேன்முநிஸஹஸ்ரஸேவிதம் ॥**

“சூரிய மண்டலத்திற்குள் இருப்பவரும்; சுவர்ணமயமாக விளங்குகின்றவரும், நன்கு பிரகாசிக்கும் உடலைப் பெற்றவரும், சிரித்த முகத்துடன் கூடியவரும், ஆயிரக்கணக்கான முனிவர்களால் ஸேவிக்கப்படுகின்றவரும், எங்கும் மழுங்காத காந்தியுடையவரும், உக்கிரமான கிரணங்களையுடையவருமான ஸ்ரீ பரமேச்வரனைத் தியானம் செய்ய வேண்டும்".

இந்த ஏழு, எட்டு இரு மந்த்ரங்களையும் "கிருச்ரம்” என்ற பிராயச்சித்தத்தை அனுஷ்டித்து பிறகு 16 தினங்கள் இடைவிடாமல் ஜபித்து வந்தால் சித்தி உண்டாகும். மேற்கூறியவாறு புரச்சரணம் செய்தவன் மழையில்லாத காலத்தில் இம் மந்த்ரத்தை ஜபித்தால் மழையுண்டாகும். **(8)**

**नमो अस्तु नीलग्रीवाय सहस्राक्षाय मीढुषे ।**
**अथो ये अस्य सत्वानोऽहं तेभ्योऽकरं नमः ॥ ९**

**நமோ அஸ்து நீலக்³ரீவாய ஸஹஸ்ராக்ஷாய மீடு⁴ஷே ।**
**அதோ² யே அஸ்ய ஸத்வானோ(அ)ஹம் தேப்⁴யோ(அ)கரம் நம: ॥ 9**

| | | |
|---|---|---|
| **ஸஹஸ்ராக்ஷாய** | - | ஆயிரக்கணக்கான கண்களையுடையவரும், |
| **மீடு³ஷே** | - | வணங்குகின்றவர்களுக்கு வேண்டியவற்றை யெல்லாம் அளிப்பவருமான, |
| **நீலக்³ரீவாய** | - | நீலகண்டனை ஸ்ரீ பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம: அஸ்து** | - | எனது நமஸ்காரம் இருக்கட்டும், |
| **அதோ²** | - | மேலும், |
| **அஸ்ய** | - | இந்த பரமேச்வரனுக்கு, |
| **ஸத்வான:** | - | சமீபத்தில் இருக்கும் பிரமதகணங்களாக, |

| | | |
|---|---|---|
| **யே** | - | எவர்கள் இருக்கின்றனரோ, |
| **தேப்⁴ய:** | - | அவர்களின் பொருட்டு, |
| **அஹம்** | - | நான், |
| **நம:** | - | நமஸ்காரத்தை, |
| **அகரம்** | - | செய்கின்றேன். |

**கருத்துரை:** நீலகண்டமூர்த்தியான ஸ்ரீபரமேச்வரனுடைய அருளைப் பெருவ தன்பொருட்டு மந்த்ரத்தால் அவரை வணங்குகின்றார். காலகூட விஷத்தை கழுத்திலேயே தரித்துக்கொண்டிருப்பதால் பரமேச்வரனுக்கு "நீலக்ரீவர்" என்றுபெயர் ஏற்பட்டிருக்கிறது. இப்பெயரைச் சொல்லி இங்கு பரமேச்வரனை வணங்குவதால் அவரிடமுள்ள ஒரு சிறந்த மகிமை ஞாபகமூட்டப்படுகிறது. அமிருதத்திற்காக பாற்கடலைக் கடைந்தபொழுது விஷம், சந்திரன் முதலிய பல வஸ்துக்கள் அதிலி ருந்து உண்டாயின. அவற்றுள் விஷத்தையும் சந்திரனையும் பரமேச்வரன் ஏற்றுக் கொண்டு, கொடிய விஷத்தை கழுத்தில்வைத்து மறைத்துக்கொண்டு அனைவரு க்கும் ஆனந்தத்தை அளிக்கும் சந்திரனை தலையில் வைத்துக்கொண்டாடினர். அவ் விதமே நம்மிடமிருக்கும் குறைகளை வெளியிடாமல் குணங்களைக் கண்டே மகிழ்ச்சியடையக் கூடுமாதலால், அவர் மிக சுலபமாக உபாஸிக்கத் தகுந்தவர் எனத் தெரியவருகிறது.

**விளக்கம்: ஸஹஸ்ராக்ஷாய** - “ஸஹஸ்ர” என்ற சொல்லிற்கு இங்கு ஆயிரம் என்று பொருள் அல்ல. ஏராளம் என்று பொருள். ஆக எல்லா இடத்திலும் அவருடைய பார்வை இருக்கின்றபடியால் நாம் எந்த இடத்தில் இருந்து வணங்கிய போதிலும் அவர் நேரில் அதை காணக்கூடுமெனத் தெரிய வருகிறது. “ஸஹஸ்ராக்ஷன்" என்றால் தேவேந்திரனுக்குப் பெயர். தேவேந்திர ஸ்வரூபமாக இருப்பவர் என்றும் பொருள் கூறலாம்.

**"மீடுஷே"** என்பதற்கு மழையைப்பொழிந்து உலகத்தை இரக்ஷிக்கின்றவர் என்றும் பொருள் கூறலாம். புருஷரூபமாக இருந்துகொண்டு வீர்யத்தை அளித்து கர்ப்பத்தை உண்டு பண்ணுகின்றவர் என்றும் கூறலாம்.

இந்த மந்த்ரத்தின் சந்தஸ் - அநுஷ்டுப், ரிஷி - சம்பு, தேவதை - சம்பு.

**த்யானம்:**

शरच्चन्द्रप्रकाशेन वपुषा शीतलद्युतिम् ।
ध्यात्सिह्यासनासीनमुमया सहित शिवम् ॥

**ஶரச்சந்த்³ரப்ரகாஶேன வபுஷா ஶீதலத்³யுதிம் ।**
**த்⁴யாத்ஸிஹ்யாஸநாஸீனமுமயா ஸஹித ஶிவம் ॥**

“சரத்காலத்துச் சந்திரனுக்குகொப்பான உடலுடன் சீதளமான, அதாவது ஆனந்தத்தை அளிக்கும் காந்தியையுடையவரும், சிம்மாசனத்தி.ல் வீற்றிருப்பவரும், பார்வதியுடன் கூடியவருமான ஸ்ரீபரமேச்வரஐ தியானம் செய்யவேண்டும்".

இந்த மந்த்ரத்தை ஆவிருத்தி செய்தால் ஸத்புத்ரலாபம் ஏற்படும். **(9)**

**प्रमुञ्च धन्वनस्त्वमुभयोरार्लियोर्ज्याम् ।**
**याच ते हस्त इषवः पराता भगवो वप ॥ १०**

**ப்ரமுஞ்ச த⁴ன்வனஸ்த்வமுப⁴யோரார்லியோர்ஜ்யாம் ।**
**யாச தே ஹஸ்த இஷவः பராதா ப⁴க³வோ வப ॥ 10**

| | | |
|---|---|---|
| **ப⁴க³வ:** | - | பகவாஹுன ஏ பரமேச்வர! |
| **த⁴ன்வன:** | - | தங்கள் வில்ஐலச்சார்ந்த, |
| **உப⁴யோ: ஆர்த்னியே:** | - | இரு நுனிகளிலும் (கட்டப்பட்டிருக்கும்), |
| **ஜ்யாம்** | - | நாண் கயிற்றை, |
| **த்வம்** | - | தாங்களே, |
| **ப்ரமுஞ்ச** | - | அவிழ்த்துவிடுங்கள், |
| **தே** | - | தங்களுடைய, |
| **ஹஸ்தே** | - | கையில், |
| **யா:** | - | எந்த, |
| **இஷவ:** | - | பாணங்கள் (இருக்கின்றனவோ), |
| **தா: ச** | - | அவற்றையும், |
| **பராவப** | - | பராமுகமாக - எதிரில் இல்லாதவைகளாகச் செய்யுங்கள். |

**கருத்துரை:** பகவாஹுன ஏ பரமேச்வர! தங்கள் வில்ஐலச் சார்ந்த இரு நுணிகளிலும் (கட்டப்பட்டிருக்கும்) நாண்கயிற்றை தாங்களே அவிழ்த்து விடுங்கள். தங்களுடைய கையில் எந்த பாணங்கள் (இருக்கின்றனவோ) அவற்றையும் பராமுகமாக - எதிரில் இல்லாதவைகளாகச் செய்யுங்கள்.

**விளக்கம்:** இந்த பத்தாவது மந்த்ரம் முதல் ஆறு மந்த்ரங்களால் ஆயுதங்கஐள மறைத்து வைத்துக் கொள்ளும்படி வேண்டிக்கொள்ளுகின்றார்.

ஐச்வர்யம், வீர்யம், (தர்மம் என்று ஒரு பாடமும் உண்டு.) புகழ், ஸம்பத்து, ஞானம், வைராக்யம் என்ற ஆறு குணங்களும் யாரிடம் நிரம்பியிருக்கின்றனவோ, அவருக்கு பகவான் என்று பெயர். இந்த ஆறு குணங்களும் பூர்ணமாயுள்ள ஸ்ரீபரமேச்வரன் கையில் உள்ள நாண்கயிறு, பாணம் முதலியவற்றை உபஸம்ஹாரம் செய்ய வேறு யாராலும் முடியாதாகையால் "தாங்களே அதைச் செய்ய வேண்டும்" என வேண்டிக்கொள்ளுகின்றார். வில்லில் நாண்கயிறு கட்டப்பட்டிருந்தால்தானே அதில் அம்புகஐளத் தொடுத்து வீசி எறியக்கூடும்? அவ்விதம் செய்யாமல் இருப்பதற்காக வில்லின் இரு நுணிகளிலும் கட்டப்பட்டிருக்கும் நாண்கயிற்றை அவிழ்த்து விடுங்

கள் என வேண்டிக்கொள்கிறார். நாண்கயிறு அவிழ்க்கப்பட்டபோதிலும் கையில் உள்ள அம்புகள் உலகத்தையே விழுங்கிவிடும் போல் மிக பயங்கரமாக இருக்கின்ற படியால் அவற்றையும் என்.கண்களில் தென்படாதபடி மறைத்துக் கொள்ளுங்கள் என வேண்டிக்கொள்ளுகின்றார். **(10)**

**अवतत्य धनुस्त्वं सहस्राक्ष शतेषुधे ।**
**निशीर्य शल्यानां मुखा शिवो नः सुमना भव ॥ ११**

**அவதத்ய த⁴னுஸ்த்வம் ஸஹஸ்ராக்ஷ ஶதேஷுதே⁴ ।**
**நிஶீர்ய ஶல்யானும் முகா² ஶிவோ நঃ ஸுமனு ப⁴வ ॥ 11**

| | | |
|---|---|---|
| **ஸஹஸ்ராக்ஷ** | - | பல கண்களையுடையவரே! |
| **ஸதேஷுதே⁴** | - | பல அம்பறாத்தூணிகளை உடையவரே! |
| **த்வம்** | - | தாங்கள், |
| **த⁴நு:** | - | தங்களது வில்லை, |
| **அவதத்ய** | - | கழற்றப்பட்ட நாண் கயிற்றை உடையதாகச் செய்து, |
| **ஸல்யானும்** | - | அம்புகளுடைய, |
| **முகா** | - | நுணிகளை, |
| **நிஸீர்ய** | - | மழுங்கியதாகவும் செய்து, |
| **ந:** | - | எங்களிடம், |
| **ஶிவ:** | - | மங்களகரமான உருவத்துடன் கூடியவரா கவும், |
| **ஸீமநா:** | - | நல்ல எண்ணங் கொண்டவராகவும், |
| **ப⁴வ** | - | இருங்கள். |

**விளக்கம்:** அம்புகளை எங்கள் கண்களில் படாமல் இருக்கும்படி செய்யுங்கள் என வேண்டிக்கொண்டு, அதனுலும் பய நிவிருத்தி உண்டாகாததால் அவற்றை மழுங்கியதாகச் செய்துவிடுங்கள் என மறுபடியும் வேண்டிக்கொள்ளுகின்றார், சில இடங்களை மட்டும் பார்க்கக்கூடியவனுகவும், சொற்ப அம்புகளை மட்டும் உடைய வனுகவும் ஒருவன் இருந்தால் அவன் கண்களில் படாமலிருந்தும், அம்புகள் எல் லாம் வீசி எறியப்பட்ட பின்பும், அவனை நமக்கு அநுகூலமாக இருக்கும்படி செய்ய லாம். ஸ்ரீபரமேச்வரனோ ஏராளக்கண்களையுடையவராதலாலும் எங்கும் பார்க்க வல் லவர் ஆதலாலும் ஏராள அம்பறாத் தூணிகளையும் அம்புகளையும் பெற்றவராத லாலும் நாம் எந்த விதத்திலும் அவரிடமிருந்து தப்பித்துக் கொள்ள முடியாது என்ற விஷயத்தை சூசனம் செய்வதற்காக **ஸஹஸ்ராக்ஷ**, **சதேஷுதே** என இரு சம்போ தனங்கள். அம்புகளை மழுங்கியதாகச் செய்தபோதிலும் அவற்றை வீசி எரிகின் றவன் குரூரனுக இருக்கும் பக்ஷத்தில் எப்படியாவது நம்மை ஹிம்சிக்கக் கூடும். ஆதலால் அவ்விதமிராமல் **"சிவோ பவ"** என வேண்டிக்கொள்ளப்படுகின்றது. மனதில் தயவு இல்லாமல் வெளியில் சுமுகமாக இருந்து மட்டும் பயனில்லை யாகையால் **ஸுமநா பவ** என்றும் வேண்டிக் கொள்ளப்படுகிறது. **(11)**

विज्यं धनुः कपर्दिनो विशल्यो बाणवाँ उत ।
अनेशन्नस्येषव आभुरस्य निषङ्गधिः ॥ १२

**விஜ்யம் த⁴னு꞉ கபர்தி³னோ விஶல்யோ பா³ணவாம் உத ।**
**அனேஶன்னஸ்யேஷவ ஆபு⁴ரஸ்ய நிஷங்க³தி⁴꞉ ॥ 12**

| | | |
|---|---|---|
| **கபர்தி³ன:** | - | பரமேச்வரனுடைய, |
| **த⁴னு:** | - | வில், |
| **விஜ்யம்** | - | நாண் கயிறு அற்றதாக ஆகட்டும், |
| **பா³ணவான் உத** | - | அம்பறாத்தூணியும், |
| **விஸல்ய:** | - | அம்புகள் அற்றதாக ஆகட்டும், |
| **அஸ்ய** | - | இந்த பரமேச்வரனுடைய, |
| **இஷவ:** | - | அம்புகள், |
| **அனேஸன்** | - | அடிக்கும் சக்திகள் அற்று அழிந்து போகட்டும், |
| **நிஷங்க³தி⁴:** | - | கத்தியைத் தாங்கும் உரை, |
| **ஆபு³:** | - | கத்தியற்றதாக ஆகட்டும், (அல்லது **நிஷங்க³தி⁴**: - கத்தி, **ஆபு³**: - சக்தி யற்றதாக ஆகட்டும்.) என்றும் பொருள் கூறலாம். |

(10, 11, 12 மூன்று மந்திரங்களுக்கும், ரிஷி - நாரதர், சந்தஸ் - அநுஷ்டுப், தேவதை - ருத்ரன்)

**த்யானம்:**

उद्यद्भास्करकोटिप्रकाशं आदीप्तदहनमूर्धानम् ।
भीषणभुजङ्गभूष ध्यायेद्विविधायुधं रुद्रम् ॥

**உத்³யத்³பா⁴ஸ்கரகோடிப்ரகாஶம் ஆதீ³ப்தத³ஹனமூர்தா⁴னம் ।**
**பீ⁴ஷணபு⁴ஜங்க³பூ⁴ஷ த்⁴யாயேத்³விவிதா⁴யுத⁴ம் ருத்³ரம் ॥**

“கோடிசூர்யப் பிரகாசராயும், ஜ்வலிக்கும் அக்னியை சிரசில் உடையவராயும், பயங்கரமான சர்ப்பங்களை ஆபரணமாக அணிந்தவராகவும், பலவித ஆயுதங்களை தரித்தவருமான ஸ்ரீருத்ரனை தியானம் செய்யவேண்டும். இந்த மந்த்ரங்களின் ஜபத்திற்கு சத்ருநாசம் பயனாகக் கூறப்பட்டிருக்கிறது." **(12)**

या ते हेतिमदुष्टम हस्ते बभूव ते धनुः ।
तयाऽस्मान् विश्वतस्त्वमयक्ष्मया परिब्भुज ॥ १३

**யா தே ஹேதிமது³ஷ்டம ஹஸ்தே ப³பூ⁴வ தே த⁴னு꞉ ।**
**தயா(அ)ஸ்மான் விஶ்வதஸ்த்வமயக்ஷ்மயா பரிப்³பு⁴ஜ ॥ 13**

**மீடு3ஷ்டம** - பக்தர்களின் விருப்பத்தை மிக அதிகமாக அளிக்கின்றவரே! தங்களுடைய,
**யா** - எந்த,
**ஹேதி:** - கத்தி முதலிய ஆயுதங்கள் இருக்கின்றன வோ,
**தே** - தங்களுடைய,
**ஹஸ்தே** - கையில்,
**த4னு:** - எந்த வில்,
**ப3பூ4வ** - இருக்கின்றதோ,
**அயக்ஷ்மயா** - பக்தர்களின் ஆரோக்யத்திற்குக் காரணமான,
**தயா** - அந்த ஆயுதங்களாலும், வில்லாலும்,
**த்வம்** - தாங்கள்,
**அஸ்மான்** - எங்களை,
**விஷ்வத்** - எல்லாவிதமான ஆபத்துக்களிலிருந்தும்,
**பரிப்3புஜா** - எப்பொழுதும் எல்லாவிதமாகவும் இரக்ஷிக்கவேண்டும்.

முன்பு மூன்று மந்த்ரங்களால் ஆயுதங்களை உபஸம்ஹாரம் செய்ய வேண்டுமென்று வேண்டிக் கொண்டு, இந்த மந்திரத்தால் தங்களுடைய ஆயுதங்களால் எங்களை இரக்ஷிவேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகின்றார். **(13)**

**नमस्ते अस्त्वायुधायानातताय धृष्णवे |**
**उभाभ्यामुत ते नमो बाहुभ्यां तव धन्वने ॥ १४**

**நமஸ்தே அஸ்த்வாயுதா4யானததாய த்4ருஷ்ணவே |**
**உபா4ப்4யாமுத தே நமோ பா3ஹுப்4யாம் தவ த4ன்வனே ॥ 14**

**தே** - (ஏ பரமேச்வர!) தங்களுடைய,
**அனததாய** - அடிப்பதற்கு சித்தமாக இல்லாததும்,
**த்4ருஷ்ணவே** - ஆனால் அடிக்கும் திறமை உள்ளதுமான,
**ஆயுதா4ய** - ஆயுதத்தின் பொருட்டு,
**நம: அஸ்து** - நமஸ்காரம் இருக்கட்டும்,
**உத** - மேலும்,
**தே** - தங்களுடைய,
**உபா4ப்4யாம்** - இரு,
**பா4ஹுப்4யாம்** - கைகளின் பொருட்டும்,
**தவ** - தங்களுடைய,
**த4ன்வனே** - வில்லின் பொருட்டும்,
**நம:** - நமஸ்காரம்.

முன் மந்த்ரத்தால் வேண்டிக்கொண்டு மறுபடியும் இந்த மந்த்ரத்தால் ஆயுதம் முதலியவற்றிற்கு வணங்குகின்றார். "பாஹுப்யாம்" என்று த்விவசனத்தாலேயே இரண்டு என்று கிடைக்கையில் "உபாப்யாம்" என்று மறுபடியும் ஆயுதங்களைத் தாங்கும் கைகளைக் கண்டு மிகவும் நடுக்கத்தால் கூறப்பட்டிருக்கிறது. **(14)**

**परिते धन्वनो हेतिरस्मान् वृणक्त विश्वतः ।**
**अथो य इषुधिस्तवारे अस्मन्निधेहि तम् || १५**

**பரிதே த⁴ன்வனோ ஹேதிரஸ்மான் வ்ருணக்த விஸ்வத꞉ ।**
**அதோ² ய இஷுதி⁴ஸ்தவாரே அஸ்மந்நிதே⁴ஹி தம் ॥ 15**

| | | |
|---|---|---|
| **தே** | - | (ஏ பரமேச்வர!) தங்களுடைய, |
| **த³ன்வன:** | - | வில்லைச் சார்ந்த, அதாவது வில்லில் தொடுக்கப்பட்ட, |
| **ஹேதி:** | - | அம்பு என்ற ஆயுதம், |
| **அஸ்மான்** | - | எங்களை, |
| **பரிவ்ருணக்து** | - | வர்ஜிக்கட்டும். அதாவது எங்களிடம் வராமல் இரக்ஷிக்கட்டும், |
| **அதோ²** | - | மேலும், |
| **தவ** | - | தங்களுடைய, |
| **ய: இஷுதி⁴:** | - | யாதொரு அம்பறாத் தூணியுண்டோ, |
| **தம்** | - | அதை, |
| **அஸ்மத்** | - | எங்களுடைய, |
| **ஆரே** | - | விரோதிகளின் சமுதாயத்தில், விரோதியாகிற பாவக்குவியலில் அல்லது வெகு தூரத்தில், |
| **நிதே⁴ஹி** | - | வைத்துவிடுங்கள். |

**விளக்கம்:** இம்மந்த்ரங்களில் நமஸ்காரமும் பிரார்த்தனையும் மாறி மாறி வருகின்றது. முன்மந்த்ரத்தால் நமஸ்கரித்துவிட்டு இதனல் வேண்டிக்கொள்ளுகிறார். தங்களுடைய அம்புகளை எங்களிடம் பிரயோகம் செய்யாமல் எங்களை இரக்ஷிக்கவேண்டும். எங்களுடைய இரக்ஷணத்திற்கு இடையூறாக எங்களிடம் பல பாவங்கள் இருக்கும் பக்ஷத்தில், தங்கள் ஆயுதங்களை அந்த பாபசமுதாயத்தில் வைத்து அதை அழித்துவிடுங்கள். **"ஆரே"** என்பதற்கு எதிரிகளின் சமுதாயம் என்பது பொருள். பாவமே நமக்கு மிகக்கொடிய விரோதியானதால் "ஆரே" என்பதற்கு பாவக்குவியல் எனப்பொருள் கூறப்பட்டது. மற்ற விரோதிகளின் சமுதாயம் என்றும் பொருள் பொருந்தும். **ஆரே** என்பதை அவ்யயமாகக் கொண்டு, தங்கள் ஆயுதங்களை எங்கள் அருகில் இல்லாமல் வெகு தூரத்தில் வைத்துவிடுங்கள் என்றும் அர்த்தங் கூறலாம்.

13, 14, 15, மூன்று மந்த்ரங்களுக்கும், ரிஷியும் தேவதையும், ஸ்ரீபரமேச்வரனே, சந்தஸ் - அநுஷ்டுப்.

**த்யானம்:**

**प्रणमदमरसंघमौलिमालाकुसुमरजोरूणपादपद्मयुग्मम् ।**
**अनवरतमनुस्मरेद्भवान्या सह जगतां पितरं पिनाकपाणिम् ॥**

**ப்ரணமத³மரஸங்க⁴மௌலிமாலாகுஸுமரஜோரூணபாத³பத்³மயுக்³மம் ।**
**அனவரதமனுஸ்மரேத்³ப⁴வான்யா ஸஹ ஜக³தாம் பிதரம் பிநாகபாணிம் ॥**

"நமஸ்கரிக்கும் தேவர் குழான்களின் சிரஸில் அணியப்பட்ட மாலைகளின் மலர்களுடைய மகரந்தத்தால் சிவந்த அடித்தாமரையை உடையவரும் உலகங்களுக்கெல்லாம் தந்தையாயும் "பிநாகம்" என்ற வில்லை கையில் ஏந்தியவராயுமுள்ள பரமேச்வரனை பார்வதியுடன்கூட எப்பொழுதும் த்யானம் செய்யவேண்டும்."

இந்த மூன்று மந்த்ரங்களுடைய ஜபத்திற்கும் சத்ருநாசமே பயனாகக் கூறப் பட்டிருக்கிறது. **(15)**

**முதல் அனுவாகம் முற்றிற்று.**

---

## இரண்டாவது அனுவாகம்

**नमो हिरण्यबाहवे सेनान्ये दिशां च पतये नमः । १**

**நமோ ஹிரண்யபா³ஹவே ஸேனான்யே தி³ஶாம் ச பதயே நம: । 1**

| | | |
|---|---|---|
| **ஹிரண்ய பாஹவே** | - | சுவர்ணமயமான ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட கைகளையுடையவரும் அல்லது பொன்நிறமான கைகளையுடையவரும், |
| **ஸேனான்யே** | - | சேனாதிபதியாயும், |
| **தி³ஷாம்** | - | திக்குகளுக்கு, |
| **பதயே ச** | - | பதிதாயுமிருக்கின்ற பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**(கருத்துரை)** முதல் அனுவாகம் பதினைந்து மந்திரங்களால் ஆயுதம் முதலியவற்றுடன்கூடிய பரமேச்வரன் வேண்டிக்கொள்ளப்பட்டார். இரண்டாவது அனுவாகம் முதல் எட்டு அநுவாகங்களால் பரமேச்வரனை பலவாறாக வர்ணித்து நமஸ்கரிக்கின்றார். அவற்றுள் இப்பொழுது பரமேச்வரனையே ஸர்வேச்வரனாக வணங்குகின்றார்.

இது முதல் **श्वभ्यः श्वपतिभ्यश्च वो नमः ஶ்வப்⁴ய: ஶ்வபதிப்⁴யஶ்ச வோ நம:** என்பது முடிய எல்லா மந்த்ரங்களும் ஆதியிலும் அந்தத்திலும் '**நம:**' என்ற சொல்லை

உடையவை. ஆதலால் இவையெல்லாம் **உபயதோ நமஸ்கார மந்த்ரங் கள்** எனப்படும் அதாவது **नमो हिरण्यवाहवेसेनान्ये दिशां च पतये नमः நமோ ஹிரண்யவாஹவேஸேனுன்யே தி³ஶாம் ச பதயே நம:** என்பது ஒரு மந்திரமாகும். இதைப் போலவே மேலேயும் பல மந்த்ரங்கள் காணப்படுகின்றன.

**திசாம் ச பதயே நம: -** திக்குகளுக்குப் பதியான பரமேச்வரனின் பொருட்டு நமஸ்காரம் என்றால், இந்திரன், அக்னி முதலியவர்கள் அல்லவோ திக்பதிகள் எனப் பிரசித்திபெற்றவர்கள்? பரமேச்வரன் எப்படி திக்பதியாவார்? என சந்தேகமேற்படுகிறது. அதை நிவிருத்தி செய்வதற்காக **ஸேநாந்யே** என்ற விசேஷணம் கொடுக்கப் பட்டிருக்கிறது. இதனுல் தேவர்கள், மனிதர்கள் முதலிய கந்தர்வர்கள், மனிதர்கள் முதலிய அனைவரும் சேனைகள். அவற்றிற்குத் தலைவன் பரமேச்வரன். ஆதலால் திக்குகளுக்கு அதிபதியும் பரமேச்வரனே. அவருடைய ஆக்ஞையால் இந்திரன் முதலியவர்கள் அந்தந்த திக்குகளில் ஆட்சி புரிந்து வருகின்றனர்.

இந்திரன் முதலிய எல்லா சராசரங்களுக்கும் ஸ்ரீபரமேச்வரனே தலைவர் என்பதை தெரிவிப்பதற்காக **ஹிரண்யபாஹவே** என்ற மற்றொரு விசேஷணம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதற்கு சுவர்ணாபரணங்களையுடைய கைகளையுடைய வர் என்றும் பொன்னிறமான கைகளையுடையவர் என்றும் பொருள் கூறலாம். பொன்னிறமான கை என்பது உபலக்ஷணம். நகம் முதல் சிகை வரை எல்லாம் சுவர்ணமயம் என்பது பொருள். **"ஆப்ரணகாத் ஸர்வ ஏவ ஸுவர்ண:," "ஹிரண்ய பாஹவே ஹிரண்யவர்ணுய" யதாபச்ய: பச்யதே ருக்மவர்ணம்** முதலிய வேத வாக்கியங்கள் பரமேச்வரனை சுவர்ணமயமாகவே வர்ணிக்கின்றன. சாந்தோக்ய உபனிஷத்தில் **அந்தராதித்ய வித்யை** என்று ஒன்று உண்டு. அங்கு சுவர்ணமயமான பரமேச்வரனே உபாஸிக்கப்படவேண்டிய தெய்வமாகக் கூறப்பட்டிருக்கிறது. இங்குள்ள **ஹிரண்ய பாஹவே** என்ற சொல்லும் அந்த வித்யையில் கூறப்பட்ட சுவர்ணமயமான பரமேச்வரனையே குறிப்பிடுகின்றது. அந்த வித்யையில் பரமேச்வரனை எல்லா லோகத்திற்கும் தலைவனுகக் கூறப்பட்டிருக்கிறது. ஆதலால் தேவேந்திரன் முதலிய எல்லா தேவர்களுக்கும் பரமேச்வரன் அதிபதி என்பதை ஹிரண்ய பாஹவே என்ற சொல் குறிப்பிடுகிறது. **(1)**

## नमो वृक्षेभ्यो हरिकेशेभ्यः पशूनां पतये नमः । २

**நமோ வ்ருக்ஷேப்⁴யோ ஹரிகேஶேப்⁴ய: பஶூனும் பதயே நம: । 2**

| | | |
|---|---|---|
| **ஹரிகேஸேப்⁴ய:** | - | ஸாத்விக, ராஜஸ, தாமஸமான கர்மாக்களாகிற இலைகளையுடைய, |
| **வ்ருக்ஷேப⁴ய:** | - | பிரபஞ்சமாகிற விருக்ஷஸ்வரூபமான ருத்ரர்களின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |
| **பசூனும் பதயே** | - | பிராணிகளுக்கெல்லாம்பதியான பரமேச்வரனின்பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**(கருத்துரை) பசூநாம் பதயே நம:** - இங்குள்ள 'பசு' என்ற சொல் ஆடுமாடு களை மட்டும் குறிப்பிடவில்லை. இரண்டு கால்கள் உள்ளவை, நான்கு கால்கள் உள்ளவை முதலிய எல்லாப் பிராணிகளையும் பொதுவாகக் குறிப்பிடுகின்றது. அவை எல்லாவற்றிற்கும் பரமேச்வரன் அதிபதி. பிராணிகள் எல்லாவற்றையும் பசுக்கள் என்றும் பரமேச்வரனை பசுபதி என்றும் எவ்வாறு கூறப்படுகின்றது என்பதை **ஹரிகேசேப்ய: வ்ருக்ஷேப்ய:** என்ற இரு சொற்களும் விளக்குகின்றன. உலகில் கயிற்றால் கட்டப்படுவதை பசு என்றும் அந்த பசுவை தன் விருப்பப்படி ஆட்டிவைப்பவனை பசுபதி என்றும் கூறுவார்கள். அதுபோல் பிராணிகள் அனைவ ரும் அவரவர்களுடைய கர்மாக்களாகிற ஸம்ஸார பாசத்தால் கட்டுப்படுகின்ற படியால் பசுக்கள் என்றும், அவற்றை எல்லாம் அந்தந்த காரியங்களில் தூண்டுகி ன்றபடியாலும், அவற்றின் கட்டை அவிழ்த்துவிடுகின்றபடியாலும் ஸ்ரீபரமேச்வரன் 'பசுபதி' என்றும் கூறப்படுகின்றார்.

**நமோ வ்ருக்ஷேப்யோ ஹிரிகேசேப்யோ நமஸ்தாராய** என்ற விடத்தில் மரங்கள் ஸ்வரூபமாக ஸ்ரீபரமேச் வரனை வர்ணிக்கின்றபடியால் இங்குள்ள வ்ருக்ஷ என்பதற்கு "ஸம்ஸாரவிருக்ஷம்" என்று பொருள் கூறப்பட்டது. உபனிஷத், கீதை முதலியவை ஸம்ஸாரத்தை மரமாகக் கற்பித்துக் கூறியிருக்கின்றன. மரத்தின் உச்சியிலுள்ள பசுமையான இலைகளால் மரங்கள் வளர்ச்சியடைவதுபோல் கர்மகாண்டத்தில் கூறப்பட்ட பலவித கர்மாக்களால் பிரபஞ்சம் விருத்தியடைகின்ற படியால் பிரபஞ்சமாகின்ற மரத்திற்கு கர்மாக்கள் இலைகளாகக் கற்பிக்கப்பட்டிருக் கின்றன. மரங்களின் உச்சியில் இலைகள் இருப்பதால் அவை 'கேசம்' என இங்கு கூறப்பட்டிருக்கின்றன.

ஸத்வ குணத்தை வெளுப்பாகவும், ரஜோ குணத்தைப் பச்சையாகவும் அல்லது சிவப்பாகவும், தமோ குணத்தை கருப்பாகவும் வர்ணிப்பது வழக்கம். கர்ம காண்டத்தில் ஸாத்விக - ராஜஸ - தாமஸம் என்ற பல கர்மாக்கள் கூறப்படுகின்றன. ஆதலால் இங்குள்ள பச்சை நிறமான ராஜஸ கர்மாவைக் குறிப்பிடும் "ஹரி" என்ற சொல் மற்ற இரு வகையான கர்மாக்களுக்கும் உபலக்ஷணம். **(2)**

## नमस्सस्पिञ्जराय त्विषी मते पथीनां पतये नमः । ३

### நமஸ்ஸஸ்பிஞ்ஜராய த்விஷீ மதே பதீ²னும் பதயே நம: । 3

| | | |
|---|---|---|
| **ஸஸ்பிஞ்ஜராய** | - | இளம் புல்போல் சிவப்பும் மஞ்சளும் கலந்த வர்ணத்தையுடையவரும், |
| **த்விஷீ மதே** | - | ஞான ஒளியையுடையவரும், |
| **பதீ²னும்** | - | வைதிக தாந்த்ரிக மார்க்கங்களுக்கு, |
| **பதயே** | - | ப்ரவர்த்தகராயுமுள்ள பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**(கருத்துரை)** மோக்ஷத்தை அடைவதற்கு வேதங்கள் கூறும் மார்க்கத்தை 'வைதிகம்' என்றும், தந்த்ரங்கள் கூறும் மார்க்கத்தை 'தாந்த்ரிகம்' என்றும் கூறுவர். தாந்த்ரிக மார்க்கங்களில் சில, வேதத்திற்கு விருத்தமாக இருப்பதால் அவற்றைப் பின் பற்றலாகாது என சித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறதே? அப்படியிருக்க தாந்த்ரிக மார்க்கத்தை ஏன் எடுத்துரைத்தார்? என்ற சந்தேகம் ஏற்படுகிறது. அதை நிவிருத்தி நிவிருத்தி செய்வதற்காகவே **த்விஷிமதே** என்ற விசேஷணம் கொடுக்கப்பட்டிருக்கி றது. வேதத்தில் அதிகாரமுள்ளவர்கள் தாந்த்ரிக மார்க்கத்தைப் பின்பற்றக் கூடாதா னாலும் வேதத்தில் அதிகாரமற்றவர்கள் தாந்த்ரிக மார்க்கத்தைப் பின்பற்றியாவது நற்கதியையடையட்டும் என்ற எண்ணத்தால் தான் ஞான ஒளி நிரம்பிய, அதாவது ஸர்வஜ்ஞுன ஸ்ரீ பரமேச்வரன் தந்த்ர சாஸ்திரங்களையும் இயற்றியுள்ளார். **(3)**

## नमो बभ्लुशाय विव्याधिनेन्नानां पतये नमः । ४

**நமோ ப³ப்⁴லுஶாய விவ்யாதி⁴னேன்னானாம் பதயே நம꞉ | 4**

| | | |
|---|---|---|
| **ப³ப்⁴லுஸாய** | - | விருஷபத்தில் வீற்றிருப்பவராயும், |
| **விவ்யாதி⁴னே** | - | (துஷ்டர்களை, அவர்கள் உண்ணும் உணவாலேயே) மிகவும் ஹிம்சிக்கின்றவராயும், |
| **அன்னானாம்** | - | உண்ணப்படும் பொருள்களுக்கெல்லாம், |
| **பதயே** | - | அதிபதியாயுமிருக்கின்ற பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம் |

**(கருத்துரை)** தர்மமே பரமேச்வரனுடைய வாஹனமான விருஷபமாக அமைந்திருக்கிறது என ஸ்காந்தபுராணம் கூறுகிறது. உணவுப் பொருள்கள் எல்லாம் தர்மத்தாலேயே விளையக்கூடியதாகையால் தர்மஸ்வரூபமான விருஷபத்தில் வீற்றிருப்பவரே தர்மத்திலிருந்து விளையும் உணவுப்பொருள்களுக்கும் பதியாக இருப்பது பொருத்தந்தானே. அன்னபதியான பரமேச்வரனே சிலரை அவர்கள் உண்ணும் உணவைக்கொண்டே ஹிம்சிக்கின்றார் என்பது பொருந்தும். **(4)**

## नमो हरिकेशायोपवीतिने पुष्टानां पतये नमः । ५

**நமோ ஹரிகேஶாயோபவீதினே புஷ்டானாம் பதயே நம꞉ | 5**

| | | |
|---|---|---|
| **ஹரிகேஸாய** | - | கருத்த கேசத்தையுடையவரும். (எப்பொழுதும் வாலிபராகவே இருப்பவரும்) |
| **உபவீதினே** | - | யக்ஞோபவீதமணிந்தவரும், |
| **புஷ்டானாம்** | - | அறிவு, ஐச்வர்யம் முதலிய எல்லாம் நிரம்பியவர்களுக்கு, |
| **பதயே** | - | ஸ்வாமியாயுமிருக்கின்ற பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**(கருத்துரை)** ஸாமவேதத்தில் தேவர்களுள் பரமேச்வரன் பிராம்மணன் எனக் கூறப்பட்டிருக்கிறது. இங்கு **உபவீதிநே** என்ற சொல் அதை குறிப்பிடுவதாகவும் கொள்ளலாம். அவரை அர்ச்சித்து மற்றவர்கள் புஷ்டியைப் பெற்றிருப்பதால் **புஷ்டி பதியாகவும்** அவர் கூறப்படுகின்றார். தான் புஷ்டியுடன் இருந்தால்தான் பிறருக்கு புஷ்டியை அளிக்கக் கூடுமாதலால் **ஹரிகேசாய** என்ற சொல் நித்யயுவாவான பரமேச்வரன் எல்லாவித புஷ்டிகளுடன் கூடியவர் என்பதை குறிப்பிடுகின்றது.

அல்லது **புஷ்டாநாம் பதயே** என்பதற்கு புஷ்டிகளின்பதி, அதாவது அவற்றைக் காப்பாற்றுகின்றவர் என்றும் பொருள் கூறலாம். புஷ்டிகள் பத்து விதம், அவையாவன: வாக்புஷ்டி, ஞானபுஷ்டி, சரீரேந்த்ரியபுஷ்டி, கிருஹக்ஷேத்ரபுஷ்டி, தனதான்யபுஷ்டி, ப்ரஜாபுஷ்டி, பசுபுஷ்டி, கிராமபுஷ்டி, தர்மபுஷ்டி, அணிமா திபுஷ்டி என்பனவாம். **(5)**

## नमो भवस्य हेत्यै जगतां पतये नमः । ६

**நமோ ப⁴வஸ்ய ஹேத்யை ஜக³தாம் பதயே நம: | 6**

| | | |
|---|---|---|
| **ப⁴வஸ்ய** | - | பிரபஞ்சத்திற்கு, |
| **ஹேத்யை** | - | ஆயுதம் போன்றவரும், |
| **ஜக³தாம்** | - | உலகத்திற்கு, |
| **பதயே** | - | ஸ்வாமியாயுமுள்ள பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**(கருத்துரை)** ஸம்ஸாரமாகிற விருக்ஷத்தை வெட்டித்தள்ளுவதற்கு ஆயுதம் போன்றவர் ஸ்ரீபரமேச்வரன். அவர் அருளால்தான் ஸம்ஸார பந்தம் அறுபடும் என்பது கருத்து. **பசூநாம் பதயே நம:, ஜகதாம் பதயே நம:** இரண்டாலும் உலகங்களுக்கெல்லாம் பதி என்பதுதான் கூறப்படுகிறது. இருந்தாலும், **பசூநாம் பதயே நம:** என்பதால் ஜீவர்களின் பந்தத்திற்குக் காரணம் என்றும், "ஜகதாம் பதயே நம:" என்பதால் அவர்களுடைய மோக்ஷத்திற்குக் காரணம் என்றும் குறிப்பிடப்படு கிறது.

## नमो रुद्रायाततताविने क्षेत्राणां पतये नमः । ७

**நமோ ருத்³ராயாததாவினே க்ஷேத்ராணும் பதயே நம: | 7**

| | | |
|---|---|---|
| **ருத்³ராய** | - | ஸம்ஸார துக்கத்தை அழிக்கின்றவரும், |
| **ஆததாவினே** | - | நாண் ஏற்றப்பட்ட வில்லைக் கொண்டு உலகத்தை இரக்ஷிக்கின்றவரும், |
| **க்ஷேத்ராணும்** | - | சரீரங்களுக்கு, |
| **பதயே** | - | ரக்ஷகரான பதியாயுமிருக்கின்ற பரமேச்வரன் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

புண்ய க்ஷேத்திரங்களுக்கு பதியாக இருப்பவர் என்றும் பொருள் கூறலாம். (7)

**नमस्सूतायाहन्त्याय वनानां पतये नमः । ८**

**நமஸ்ஸூதாயாஹந்த்யாய வனானாம் பதயே நம꞉ | 8**

| | | |
|---|---|---|
| **ஸூதாய** | - | (உலகமாகிற இரதத்தை ஓட்டிச் செல்லும்) ஸாரதியாயும், |
| **அஹந்த்யாய** | - | யாராலும் ஹிம்சிக்கமுடியாத ஆத்ம ஜ்யோதிஸ்வரூபமாயும், |
| **வனானாம்** | - | காடுகளுக்கு, |
| **பதயே** | - | ஸ்வாமியாயுமுள்ள பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். (8) |

**नमो रोहिताय स्थपतये वृक्षाणां पतये नमः । ९**

**நமோ ரோஹிதாய ஸ்த²பதயே வ்ருக்ஷாணாம் பதயே நம꞉ | 9**

| | | |
|---|---|---|
| **ரோஹிதாய** | - | சிவப்பு நிறமாக இருப்பவரும், |
| **ஸ்த²பதயே** | - | எல்லாவிடங்களிலும் இருந்துகொண்டு எல்லாவற்றையும் இரக்ஷிப்பவரும், |
| **வ்ருக்ஷாணாம் பதயே** | - | விருக்ஷங்களுக்கு பதியாயுமிருக்கின்ற பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

(**கருத்துரை**) விருக்ஷங்களுக்கு அதிஷ்டானமான பரமேச்வரனுடைய வர்ணம் சிவப்பு என இதிலிருந்து தெரியவருகிறது. (9)

**नमो मन्त्रिणे वाणिजाय कक्षाणां पतये नमः । १०**

**நமோ மந்த்ரிணே வாணிஜாய கக்ஷாணாம் பதயே நம꞉ | 10**

| | | |
|---|---|---|
| **மந்த்ரிணே** | - | ஏழுகோடி மஹாமந்த்ரங்கள், ரகசியமான உபநிஷத்துக்கள் இவற்றிற்கு ஸ்வாமியாயும், |
| **வாணிஜாய** | - | வியாபாரிபோல் ஸர்வதேச வியவஹாரங்களையும் நன்கு அறிகின்றவராயும், |
| **கக்ஷாணாம்** | - | மலை, நதி, காடு, புதர் முதலிய எளிதில் பிரவேசிக்க முடியாத பிரதேசங்களுக்கு, |
| **பதயே** | - | ஸ்வாமியாயுமிருப்பவரின்பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

“கக்ஷாணாம்” என்பதற்கு மிகவும் துரூஹமான தர்மா தர்மரகசியங்கள், பாஷைகள், தேசங்கள் இவற்றிற்கெல்லாம் பதி என்றும் பொருள் கூறலாம். (10)

பக்கம் 65

**नमो भुवन्तये वारिवस्कृतायौषधीनां पतये नमः । ११**

**நமோ பு⁴வந்தயே வாரிவஸ்க்ருதாயௌஷதீ⁴னும் பதயே நமঃ |** 11

**பு⁴வந்தயே** - பூமியை வளர்க்கின்றவரும், அதாவது பூமியிலுள்ள அனைவற்றையும் வளர்க்கின்றவராயும்,

**வாரிவஸ்க்ருதாய** - பக்தர்களிடம் வசிப்பவரும்,

**ஓஷதீ⁴னும் பதயே** - கொடி செடி முதலியவற்றிற் கெல்லாம் ரக்ஷகராயுமிருக்கின்ற பரமேச்வரன் பொருட்டு,

**நம:** - நமஸ்காரம்.

**வாரிவஸ்க்ருதாய** - தனத்தை அளிப்பவர், தனம் ஸம்பாதிப்பவர்களுக்கு ஸஹாயமாக இருப்பவர், ஜலத்தில் வசிக்கும் விஷ்ணு ஸ்வரூபமாகவோ அல்லது வருண ஸ்வரூபமாகவோ இருப்பவர் என்றும் பொருள் கூறலாம். பரமேச்வரன் பக்தர்களின் உடலில் வீற்றிருக்கிறார் என்பதற்கு சான்றாக பல புராண வசனங்கள் காணப்படுகின்றன.

**"यथायोग्निसमावेशान्नायो भवति केवलम् |**
**तथैव मम सान्निध्यान्नते केवलमानुषाः " ॥**
**"शिवस्य परिपूर्णस्य किन्नाम क्रियते नरैः ।**
**यकृतं शिवभक्तानां तच्छिवस्य कृतं भवेत् ॥**
**अकायो भक्तकायः स्यात् ॥**

**"யதா²யோக்³நிஸமாவேஶான்னயோ ப⁴வதி கேவலம் |**
**ததை²வ மம ஸாந்நித்⁴யான்னதே கேவலமானுஷாঃ" ||**
**"ஶிவஸ்ய பரிபூர்ணஸ்ய கிந்நாம க்ரியதே நரைঃ |**
**யக்ருதம் ஶிவப⁴க்தானும் தச்சி²வஸ்ய க்ருதம் ப⁴வேத் ||**
**அகாயோ ப⁴க்தகாயঃ ஸ்யாத் ||** முதலியன.

**(இதன் பொள்)** நெருப்பில் பழுக்கப் பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்பு எப்படி வெறும் இரும்பாக ஆகாதோ, அவ்விதமே என் பக்தர்கள் என்னுடைய ஸாந்நித்யத்

தால் சாமான்ய மனிதர்களாக ஆகமாட்டார்கள். சிவஸ்வரூபமாகவே அவர்கள் கருதப்பட வேண்டுமென்பது கருத்து. எல்லாம் நிறைந்த சிவனுக்கு மனிதர்களால் செய்யப்படவேண்டியது என்ன இருக்கிறது? சிவபக்தர்களுக்குச் செய்வதே சிவனுக் குச் செய்ததாக ஆகும். உடல் அற்ற சிவனுக்கு பக்தர்களுடைய உடலே உடலாம்.

(11)

### नम उच्चैर्घोषायाक्रन्दयते पत्तीनां पतये नमः । १२

**நம உச்சைர்கோ⁴ஷாயாக்ரந்த³யதே பத்தீனாம் பதயே நமஃ** | 12

| | | |
|---|---|---|
| **உச்சைர்கோ⁴ஷாயா** | - | (போர் முதலியவற்றில்) உரக்க சத்தம் செய்கின்றவரும், |
| **ஆக்ரந்த³யதே** | - | எதிரிகளை அழிக்கின்றவரும், |
| **பத்தீனாம் பதயே** | - | காலாள் படைகளுக்கு பதியாயுமிருக்கின்ற ஈச்வரனின்பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**(கருத்துரை)** காலாள் படைகளுக்கு ஸ்வாமி என்பதால் எதிரிகளை ஜயிக்கும் விஷயத்தில் அவர்களுடைய உதவி தேவை என்ற சந்தேகம் ஏற்படக்கூடும். அதை நிவிருத்தி செய்வதற்காக **ஆக்ரந்தயதே** என்ற விசேஷணம். பிறருடைய உதவியை எதிர்பாராமலே விரோதிகளை அழிக்கக்கூடியவர் என்பது இதன் பொருள். அதற்கும் வேறு ஆயுதங்கள் அவருக்குத் தேவையில்லை. ஹுங்காரம் ஒன்றே போதுமானது என்பதைத் தெரிவிப்பதற்காக **உச்சைர்கோஷாய** என்பதாம். திருபுரத்தை சிரிப்பா லும், மன்மதனைப் பார்வையாலும், யமனை நகத்தாலும் அழித்த பரமேச்வரனுக்கு ஆயுதங்கள் எதற்காக? 12

### नमः कृत्सवीताय धावते सत्वनां पतये नमः | १३

**நமஃ க்ருத்ஸவீதாய தா⁴வதே ஸத்வனாம் பதயே நமஃ** | 13

| | | |
|---|---|---|
| **க்ருத்ஸ்ன்ன வீதாய** | - | எல்லா உலகங்களிலும் வியாப்தராயும், |
| **தா³வதே** | - | (பக்தர்களை இரக்ஷிப்பதற்காக) அவர்களைத் தொடர்ந்து ஓடுகின்றவரும், |
| **ஸத்வனாம் பதயே** | - | ஸாத்விகர்களுக்கு பதியாயுமிருக்கின்ற பரமேச்வரனின்பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**(கருத்துரை)** கன்றைத் தொடர்ந்து பசு ஓடுவது போல் பக்தர்களைத் தொடர் ந்து அவர்களை இரக்ஷிப்பதற்காக ஓடுகின்றபடியால் அவர் ஸாத்விகர்களுக்கு பதியாக ஆகின்றார். எங்கும் வியாப்தராக இருந்துகொண்டு எல்லோரையும் இரக்ஷிக் கின்றார் என்ற விஷயம் வாஜஸநேயிகளுடைய கிருஹ்யத்தில் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. "ஜலத்தில்" மூழ்கும் பொழுதும், வழியில் நடக்கும்பொழுதும், காட்டில் செல்லும்பொழுதும், வேறு எந்த காரியத்தைச் செய்யும்பொழுதும் அந்தந்த

இடங்களில் உள்ள ருத்ரனுக்கு நமஸ்காரம், எனக்கு க்ஷேமத்தை உண்டுபண்ண வேண்டும்" என்ற கருத்துடைய **नमो रुद्रायासुषदे स्वस्ति मा संपारय நமோ ருத்³ராயாஸுஷதே³ ஸ்வஸ்தி மா ஸம்பாரய** முதலியவை ஜபிக்கப்படவேண்டிய மந்த்ரங்களாகும். **(13)**

இந்த இரண்டாவது அனுவாகம் முழுவதும் ஒரே மந்த்ரம். இதன் ரிஷி - மண்டுகர். சந்தஸ் - மஹா காயத்ரீ, தேவதை - ஸ்ரீருத்ரன்.

**த்யானம்:**

**मुक्तालंकृत सर्वाङ्गमिन्दुगङ्गाघरं हरम् ।**
**ध्यायेत्कल्पतरोर्मूले समासीनं सहोमया ॥**

**முக்தாலங்க்ருத ஸர்வாங்க³மிந்து³க³ங்கா³க⁴ரம் ஹரம் ।**
**த்⁴யாயேத்கல்பதரோர்மூலே ஸமாஸீனம் ஸஹோமயா ॥**

(**இதன் பொருள்**) எல்லா அங்கங்களிலும் முத்துக்களை அணிந்தவராவும், சந்திரனையும் கங்கையையும் சிரஸில் அணிந்தவராயும், கல்பக விருக்ஷத்தின் அடியில் உமாதேவியுடன் வீற்றிருப்பவருமான பரமேச்வரனை த்யானம் செய்ய வேண்டும்.

இந்த மந்த்ரத்தை முறைப்படி ஆவிருத்தி செய்தால் முக்கியமாக சத்ருநாசம், வசீகரணம். ஐச்வர்யலாபம் முதலியவை சித்திக்கும்.

**இரண்டாவது அனுவாகம் முற்றிற்று.**

---

## மூன்றுவது அனுவாகம்

**नमस्सहमानाय निव्याधिन आव्याधिनीनां पतये नमः ॥ १**

**நமஸ்ஸஹமானாய நிவ்யாதி⁴ன ஆவ்யாதி⁴னீனாம் பதயே நம꞉ ॥ 1**

| | | |
|---|---|---|
| **ஸஹமானாய** | - | விரோதிகளை அடக்குகின்றவரும் அல்லது பக்தர்களுடைய குற்றங்களைப் பொறுக்கி ன்றவரும், |
| **நிவ்யாதி⁴னே** | - | எதிரிகளை நன்றாக அடிக்கும் திறமை வாய்ந்தவரும், |
| **ஆவ்யாதினீனாம்** | - | அனைவரையும் எதிர்த்து அடிக்கும் சக்திவாய்ந்த சேனைகளுக்கு, |
| **பதயே** | - | பதியாயுமிருக்கின்ற பமேச்வரனின் |

| | | |
|---|---|---|
| | | பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**(கருத்துரை)** இரண்டாவது அனுவாகம் போலவே இந்த மூன்றவது அனுவாகத்திலும் முதல் எட்டு யஜுஸ்ஸூக்களால் பரமேச்வரனே ஸர்வேச்வரன் என்று வணங்கப் படுகின்றார். **ஆவ்யாதிநீநாம் பதயே** என்பதன் அர்த்தமான "வீரசேனைகளுக்குத் தலைவன்" என்பதற்கு **ஸஹமாநாய**, **நிவ்யாதிநே** என்ற இரு விசேஷணங்களும் காரணத்தை விளக்குகின்றன. எல்லோரையும் அடக்கி ஆளுகின்றவரும், நன்கு அடிக்கின்றவருமான பரமேச்வரன் வீரசேனைகளுக்கும் தலைவன் என்பது பொருத்தந்தானே! வீரசேனைகளுக்குத் தலைவனாக இருந்துகொண்டு மற்றவர்களை அடிக்கின்றவரானாலும் பக்தர்களானால் அவர்களுடைய குற்றங்களைப் பொறுத்து அருள் புரிவார் என்றும் **ஸஹமா நாய** என்ற விசேஷணத்தால் தெரிய வருகிறது. **(1)**

## नमः ककुभाय निषङ्गिणे स्तेनानां पतये नमः ॥ २

**நம꞉ ககுபா[4]ய நிஷங்கி[3]ணே ஸ்தேனானாம் பதயே நம꞉ ॥ 2**

| | | |
|---|---|---|
| **ககுபா[4]ய** | - | (திருடர்களுள்) சிறந்தவராயும், |
| **நிஷங்கி[3]ணே** | - | கையில் கத்தியை தரித்துக் கொண்டிருப்பவரும், |
| **ஸ்தேனானாம்** | - | மறைந்து இருந்து திருடுகின்றவர்களின், |
| **பதயே** | - | ஸ்வாமியாகவும் இருப்பவரின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். (**ஸ்தேன:** - மறைந்து நின்று திருடுகின்றவன், **தஸ்கர:** - வெளிப்படையாகத் திருடுகின்றவன்.) |

**(கருத்துரை)** எல்லோருக்கும் ஈச்வரனாக இருக்கும் பரமேச்வரன் திருடர்களுக்கும் பதியாக இருக்கின்றார். அதனால் அவருக்கு எவ்வித குற்றமுமில்லை. திருடர் முதலியவர்களின் உடல்களில் ஸ்ரீபரமேச்வரன் ஜீவஸ்வரூபமாகவும், ஈச்வரஸ்வரூபமாகவும் வியாபித்திருக்கின்றார். அவற்றுள் திருடர்களுடைய ஜீவாத்ம ஸ்வரூபமே சாஸ்த்ரங்களில் நிந்திக்கப்படுகிறது. எங்கும் நிறைந்த பரமாத்மா திருடர்களுடைய உடல்களிலும் வியாபித்திருக்கின்றார் என்பதே **ஸ்தேநானாம் பதயே** முதலியவற்றால் கூறப்படுகின்றது. பரமேச்வரனை அவ்விதமாகவும் அநுஸந்தானம் செய்தால் புண்ணியமுண்டு என்பது தாத்பர்யம்.

அல்லது பக்தவத்ஸலனான பரமேச்வரன் திருடர்களுக்கும் பதியாக இருந்து கொண்டு, அவர்கள் தன்னை அண்டினால் அவர்களுடைய பாவங்களையும் போக்கடித்து அவர்களையும் இரக்ஷிக்கின்றார் என்றுமாம்.

எல்லாம் வல்ல இறைவன் திருடுவதிலும் தலை சிறந்தவன். இதனால் பரமேச்வரன் பிறர் பொருளை திருடுகின்றார் என்று கூறப்பட்டதாக ஆகாது. **(2)**

### नमो निषङ्गिण इषुधिमते तस्कराणां पतये नमः ॥ ३

**நமோ நிஷங்கி³ண இஷுதி⁴மதே தஸ்கராணும் பதயே நம꞉ ॥ 3**

| | | |
|---|---|---|
| **நிஷங்கி³ணே** | - | வில்லில் தொடுப்பதற்காக கையில் அம்பை வைத்துக்கொண்டிருப்பவரும், |
| **இஷுதி⁴மதே** | - | அம்பறாத்தூணியை உடையவரும், |
| **தஸ்கராணும்** | - | அனைவரும் அறிந்து திருடுகின்ற திருடர்களுக்கு, |
| **பதயே** | - | ஸ்வாமியாயுமிருக்கின்ற பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**(கருத்துரை)** முன் மந்த்ரத்தில் **நிஷங்க:** என்பதற்கு கத்தி என்று பொருள் கூறப்பட்டது. இங்குள்ள **நிஷங்க** என்பதற்கு வில்லில் தொடுப்பதற்காக கையில் வைத்துக்கொள்ளப்பட்டிருக்கும் அம்பு என்று அர்த்தம் கூறப்பட்டது. **नितरां + सङ्गी = तस्मै** **நிதராம் + ஸங்கீ³ = தஸ்மை** என்ற வியுத்பத்தியை அனுசரித்து பக்தர்களிடம் மிகுந்த பிரீதி உள்ளவர் என்றும் அர்த்தம் கூறப்பட்டிருக்கிறது. ஆனுல் **तस्कराणां पतये** **தஸ்கராணாம் பதயே** என்ற இடத்தில் இந்த அர்த்தம் அவ்வளவு பொருத்தமுள்ளதாகக் கூறுவதற்கில்லை. **(3)**

### नमो वञ्चते परिवञ्चते स्तायूनां पतये नमः ॥ ४

**நமோ வஞ்சதே பரிவஞ்சதே ஸ்தாயூனும் பதயே நம꞉ ॥ 4**

| | | |
|---|---|---|
| **வஞ்சதே** | - | யஜமானனுக்கு வேண்டியவனுக இருந்து கொண்டே சிலவற்றை மட்டும் சில சமயங்களில் வஞ்சித்துத் திருடுகின்றவன் ஸ்வரூபமாயும், |
| **பரிவஞ்சதே** | - | எல்லா சமயங்களிலும், எல்லா காரியங்களிலும் மிகவும் வஞ்சிக்கின்றவன் ஸ்வரூபமாயும், |
| **ஸ்தாயூனும்** | - | தன்னைச் சேர்ந்தவர்களாக இருந்து கொண்டே பிறருக்குத் தெரியாமல் திருடுகின்றவர்களுக்கு, |
| **பதயே** | - | பதியாயுமிருக்கின்ற பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**(கருத்துரை)** வெளியிலிருந்துவந்து இரவில் யாரும் அறியாமல் திருடுகின்ற வன் **ஸ்தேந:**. தன்னைச் சேர்ந்தவனுகவே இருந்துகொண்டு இரவிலோ பகலிலோ யாரும் அறியாமல் திருடுகின்றவன் **ஸ்தாயு**. **வஞ்சன்** - யஜமானனுக்கு வேண்டியவனுக இருந்து கொண்டு சில சமங்களில் சிலவற்றை மட்டும் வஞ்சித்து அபகரிக்கின்றவன். **பரிவஞ்சன்** - எல்லாவியவஹாரங்களிலும் எப்பொழுதும் வஞ்சிக்கின்றவன். **(4)**

## नमो निचेरवे परिचरायारण्यानां पतये नमः || ५

**நமோ நிசேரவே பரிசராயாரண்யானும் பதயே நமः || 5**

| | | |
|---|---|---|
| **நிசேரவே** | - | எப்பொழுது பொருளை அபகரிக்கலாம் என்ற எண்ணத்துடனேயே யஜமானன் வீட்டில் மிக்க கவனத்துடன் சஞ்சரித்துக்கொண்டிருப்பவன் ஸ்வரூபமாயும், அல்லது காட்டில் உள்ள திருடர்களை விட திருடுவதற்காக அதிகமாக சஞ்சரிக்கின்றவன் ஸ்வரூபமாயும், |
| **பரிசராய** | - | கடைவீதி முதலிய பலவிடங்களிலும் திருடுவதற்காக சஞ்சரிக்கின்றவன் ஸ்வரூபமாயும், |
| **ஆரண்யானும்** | - | காட்டில் உள்ள திருடர்களுக்கு, |
| **பதயே** | - | பதியாயுமுள்ள பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். **(5)** |

## नमः सृकाविभ्यो जिघाँसद्भ्यो मुष्णतां पतये नमः ॥ ६

**நமः ஸ்ருகாவிப்⁴யோ ஜிகா⁴ஹும்ஸத்³ப⁴யோ முஷ்ணதாம் பதயே நமः || 6**

| | | |
|---|---|---|
| **ஸ்ருகாவிப்⁴யோ** | - | இயந்திரத்தால் தன்னை இரக்ஷித்துக் கொள்ளுகின்றவன் ஸ்வரூபமாயும், |
| **ஜிகா³ஹும்ஸ்ப்⁴ய:** | - | பிராணிகளை ஹிம்சிக்க விரும்புகின்றவன் ஸ்வரூபமாயும், |
| **முஷ்ணதாம்** | - | வயல் முதலியவற்றில் தான்யத்தைத்திருடுகின்றவர்களுக்கு, |
| **பதயே** | - | பதியாயுமிருப்பவரின்பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**(கருத்துரை)** தன்னை இயந்திரம் முதலியவற்றால் இரக்ஷித்துக் கொள்ளுகின்றவனும், பிறரை ஹிம்சிக்க விரும்புகின்றவனுமே திருடர்களுக்குத் தலைவனுக இருக்கமுடியும். ஆதலால் **முஷ்ணதாம் பதயே** என்பதற்கு **ஸ்ருகாவிப்⁴ய:**, **ஜிகா⁴ஹும்ஸத்³ப்⁴ய:** என்ற இரண்டும் விசேஷணங்கள். வேதமானதால் ஏகவசன ஸ்தானத்தில் பஹு வசனம் சிரவிக்கின்றது. **(6)**

## नमो सिमद्भ्यो नक्तंचरद्भ्यः प्रकृन्तानां पतये नमः ७

**நமோ ஸிமத்³ப⁴யோ நக்தஞ்சரத்³ப்⁴ய꞉ ப்ரக்ருந்தானாம் பதயே நம꞉ 7**

| | | |
|---|---|---|
| **அஸிமத்³ப்ய:** | - | கத்தியை தரித்துக்கொண்டிருக்கின்றவர் ஸ்வரூபமாயும், |
| **நக்தன்சரத்³ப்⁴ய:** | - | இரவில் சஞ்சரிக்கின்றவர்கள் ஸ்வரூபமாயும், |
| **ப்ரக்ருந்தானாம்** | - | பிறரைக்கொன்று பொருளை அபகரிக்கின்ற திருடர்களுக்கு, |
| **பதயே** | - | பதியாயுமிருக்கின்ற பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். **(7)** |

## नम उष्णीषिणे गिरिचराय कुलुञ्चानां पतये नमः ८

**நம உஷ்ணீஷிணே கி³ரிசராய குலுஞ்சானாம் பதயே நம꞉ 8**

| | | |
|---|---|---|
| **உஷ்ணீஷிணே** | - | கிராம ஜனங்கள் போல் தலைப்பாகையை அணிந்திருப்பவர் ஸ்வரூபமாயும், |
| **கி³ரிசராய** | - | மலையில் சஞ்சரிக்கின்றவன் ஸ்வரூபமாயும், |
| **குலுஞ்சானும்** | - | வீடு வயல் முதலியவற்றைத் திருடுகின்றவர் களுக்கு, |
| **பதயே** | - | ஸ்வாமியாயுமிருப்பவரின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**குலுஞ்சானும்** - வீடு வயல் முதலியவற்றை அபகரிக்கின்றவர்கள் இரு வகைப்படுவார்கள். கிராமங்களில் இருந்துகொண்டு கிராம ஜனங்களைப்போல் தலைப்பாகை முதலியவற்றை அணிந்துகொண்டு ஏழைகளின் வீடு வாசல்களை அபகரிக் கின்றவர்கள் ஒரு விதம். காடு மலை முதலியவற்றில் இருந்து கொண்டு வீடு வாசல் முதலியவற்றை அபகரிக்கின்றவர்கள் மற்றொரு விதம். **(8)**

## नम इषुमद्भ्यो धन्वाविभ्यश्च वो नमः ॥ ९

**நம இஷுமத்³ப⁴யோ த⁴ன்வாவிப்⁴யஶ்ச வோ நம꞉ ‖ 9**

| | | |
|---|---|---|
| **இஷுமத்³ப⁴யோ** | - | அம்புகளை தரித்துக்கொண்டிருப்பவர்களாயும், |
| **த⁴ன்வாவிப்⁴ய:** | - | வில்லை கையில் தரித்துக்கொண்டிருப்பவர்க ளுமான, |
| **வ:** | - | தங்களுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**நமோ ஹிரண்யபாஹவே** முதல் முன்மந்த்ரம்வரை 21 அவாந்தர மந்த்ரங்க ளால் பரமேச்வரன் எல்லா ஜகத்திற்கும் அதிபதி என்பது கூறப்பட்டது. இது முதல் பல வஸ்து ஸ்வரூபமாக இருக்கின்றார் என்பதை வர்ணித்து நமஸ்கரிக்கின்றார்.

இதனால் ஸர்வாத்மத்வம் நிரூபணம் செய்யப்படுகிறது. பரமேச்வரனுடைய ஸ்வரூபங்களுள் பயங்கரமாயும் பல இருக்கின்றன. அவற்றுள் பயங்கரமான ஸ்வரூபங்கள் (உபயதோ நமஸ்கார மந்த்ரங்களால்) இரண்டுதடவை நமஸ்காரத்தைக்கூறும் மந்த்ரங்களால் நேரிடையாகவே இனி நமஸ்கரிக்கப்படுகின்றன. ஆதலால்தான் இந்த மந்த்ரங்களில் "வ:" என்று காணப்படுகின்றது. **(9)**

### नम आतन्वानेभ्यः प्रतिदधानेभ्यश्च वो नमः ॥ १०

**நம ஆதன்வானேப்⁴ய: ப்ரதித³தா⁴னேப்⁴யஶ்ச வோ நம: || 10**

**ஆதன்வானேப்⁴ய:** - வில்லில் நாண் ஏற்றுகின்றவர்களும்,
**ப்ரதித³தா⁴னேப்⁴ய:** - நாண் ஏற்றிய வில்லில் அம்பைத் தொடுக்கின்றவர்களுமான,
**வ:** - தங்களுக்கு,
**நம:** - நமஸ்காரம். **(10)**

### नम आयच्छद्भ्यो विसृजद्भ्यश्च वो नमः || ११

**நம ஆயச்ச²த்³ப்⁴யோ விஸ்ருஜத்³ப்⁴யஶ்ச வோ நம: || 11**

**ஆயச்ச²த்³ப்⁴ய:** - நாணை இழுக்கின்றவர்களும்,
**விஸ்ருஜத்³ப்⁴யஶ்ச** - இழுத்து அம்புகளை விடுகின்றவர்களுமான,
**வ:** - தங்களுக்கு,
**நம:** - நமஸ்காரம். (11)

### नमो ऽस्यद्भ्यो विद्ध्यद्भ्यश्च वो नमः ॥. १२

**நமோ (அ)ஸ்யத்³ப்⁴யோ வித்³த்⁴யத்³ப்⁴யஶ்ச வோ நம: || 12**

**அஸ்யத்³ப்⁴ய:** - லக்ஷ்ய தேசம் வரை பாணத்தை வீசி எறிகின்றவர்களும்,
**வித்³த்⁴யப்⁴யஶ்ச** - லக்ஷ்யத்தை அடிக்கின்றவர்களுமான,
**வ:** - தங்களுக்கு,
**நம:** - நமஸ்காரம். **(12)**

### नम आसीनेभ्यः शयानेभ्यश्च वो नमः ॥ १३

**நம ஆஸீனேப்⁴ய: ஶயானேப்⁴யஶ்ச வோ நம: || 13**

**ஆஸீனேப்⁴ய:** - உட்கார்ந்துகொண்டிருப்பவர்களும்,
**ஶயானேப்⁴யஶ்ச** - சயனித்துக்கொண்டிருப்பவர்களுமான,
**வ:** - தங்களுக்கு,
**நம:** - நமஸ்காரம். **(13)**

**नमः स्वपद्भ्यो जाग्रद्भ्यश्च वो नमः ॥ १४**

**நமஃ ஸ்வபத்³ப⁴யோ ஜாக்³ரத்³ப⁴யஶ்ச வோ நமஃ ॥ 14**

| | | |
|---|---|---|
| **ஸ்வபத்³ப⁴யோ:** | - | தூங்குகிறவர்களும், |
| **ஜாக்³ரத்³ப⁴யஶ்ச:** | - | விழித்துக்கொண்டிருப்பவர்களுமான, |
| **வ:** | - | தங்களுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**नम स्तिष्ठद्भ्यो धावद्भ्यश्च वो नमः ॥ १५**

**நம ஸ்திஷ்ட²த்³ப⁴யோ தா⁴வத்³ப⁴யஶ்ச வோ நமஃ ॥ 15**

| | | |
|---|---|---|
| **திஷ்டத்³ப்⁴ய:** | - | நின்றுகொண்டிருப்பவர்களும், |
| **தா⁴வத்³ப்⁴யஷ்ச** | - | ஓடுகின்றவர்களுமான, |
| **வ:** | - | தங்களுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**नमः सभाभ्यः सभापतिभ्यश्च वो नमः ॥ १६**

**நமஃ ஸபா⁴ப்⁴யஃ ஸபா⁴பதிப்⁴யஶ்ச வோ நமஃ ॥ 16**

| | | |
|---|---|---|
| **ஸபா⁴ப்⁴யஃ** | - | கூட்டமாக அமர்ந்திருப்பவர்களும், |
| **ஸபா⁴பதிப்⁴யஶ்ச** | - | அக்கூட்டத்தலைவர்களுமான, |
| **வ:** | - | தங்களுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**नमो अश्वेभ्योश्वपतिभ्यश्च वो नमः ॥ १७**

**நமோ அஶ்வேப்⁴யோஶ்வபதிப்⁴யஶ்ச வோ நமஃ ॥ 17**

| | | |
|---|---|---|
| **அஸ்வேப்⁴ய:** | - | குதிரை உருவங்கொண்டவர்களும், அல்லது நாளைக்கென்று பொருளை சேகரிக்காதவர்களும், |
| **அஸ்வபதிப்⁴யஶ்ச** | - | குதிரைமேல் ஏறிச் செல்லுகின்றவர்களும், அல்லது பல குதிரைகளையுடைய ஸ்ரீமான்களுமான, |
| **வ:** | - | தங்களுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். **(17)** |

இந்த 17 அவாந்தரயஜுர் மந்த்ரங்களடங்கிய மூன்றுவது அனுவாகம் முழுவதும் ஒரே மந்த்ரம், இதற்கு ரிஷி, தேவதை இரண்டும் பகவான் பரமேச்வரனே. சந்தஸ் - ப்ருஹதீ.

**த்யானம்:**

रूपयौवनसंपन्ना मूर्तेव वनदेवता ।
पुष्पितानेक पुत्रा- सहकार शिशूपमः ॥
पञ्चविंशतिनक्षत्र मायूरकृत शेखरः ।
अकलं - कशरत् पूर्णचन्द्र बिम्ब समाननः ॥
प्रातर्विबुद्धपद्माभं वसानं चर्म कोमलम् ।
सव्यापसव्य विधृतकृत मालाविभूषितः ॥
धराकम्बपुन्जेन   नाभिदेशप्रलम्बिना ।
आजङ्कं प्रेक्षणीयेन प्रेक्षणीयोपि शत्रुभिः ॥
भूधरस्य च चार्बी कन्यालंकारशोभिता।
आदर्श- मूर्ति शोभानामन्या नारीव निर्मला ।
तस्या हस्ते धनुर्दत्वा शरसेकं च निर्मलम् ॥
तदीयसंसमालंब्याश्लिष्टं वामेन बाहुना ।
सुगन्धिपुष्पस्तबक माध्रायाध्राय पाणिना ॥
कीज्यमानो मन्द- भन्दं वनपल्लवशाखया ।
समावृतो बालकैश्च स्वभिस्शाभि मनोहरैः ॥
गच्छद्भिरप्रतो दृप्तैः ध्यातव्यो जगतां गुरुः ।
एवं रूपो महातेजा किरातवपुरीश्वरः ॥

ரூபயௌவனஸம்பன்ன மூர்தேவ வனதே³வதா ।
புஷ்பிதானேக புத்ரா- ஸஹகார ஶிஶூபமः ॥
பஞ்சவிம்ஶதிநக்ஷத்ர மாயூரக்ருத ஶேக²ரः ।
அகலம் கஶரத் பூர்ணசந்த்³ர பி³ம்ப³ ஸமானனः ॥
ப்ராதர் விபு³த்³த⁴ பத்³மாப⁴ம் வஸானம் சர்ம கோமலம் ।
ஸவ்யாபஸவ்ய வித்⁴ருதக்ருத மாலாவிபூ⁴ஷிதः ॥
த⁴ராகம்ப³புன்ஜேன நாபி⁴தே³ஶப்ரலம்பி³ன ।
ஆஜங்கம் ப்ரேக்ஷணீயேன ப்ரேக்ஷணீயோபி ஶத்ருபி⁴ः ॥
பூ⁴த⁴ரஸ்ய ச சார்பீ³ கன்யாலங்காரஶோபி⁴தா ।
ஆத³ர்ஶ- மூர்தி ஶோபா⁴நாமன்யா நாரீவ நிர்மலா ।
தஸ்யா ஹஸ்தே த⁴னுர்த³த்வா ஶரஸேகம் ச நிர்மலம் ॥
ததீ³யஸம்ஸமாலம்ப்³யாஶ்லிஷ்டம் வாமேன பா³ஹுன।
ஸுக³ந்தி⁴புஷ்பஸ்தப³க மாத்⁴ராயாத்⁴ராய பாணின ॥
கீஜ்யமானோ மந்த³- ப⁴ந்த³ம் வனபல்லவஶாக²யா ।
ஸமாவ்ருதோ பா³லகைஶ்ச ஸ்வபி⁴ஸ்ஶாபி⁴ மனோஹரைः ॥
க³ச்ச²த்³பி⁴ரப்ரதோ த்³ருப்தைः த்⁴யாதவ்யோ ஜக³தாம் கு³ருः ।
ஏவம் ரூபோ மஹாதேஜா கிராதவபுரீஶ்வரः ॥

**(இதன் பொருள்)** யௌவனமும், அழகும் நிரம்பிய வன தேவதையே உருவெடுத்து வந்தவர் போல் இருப்பவரும், புஷ்பங்களுடன் கூடிய புன்னுகம், மா இவற்றின் கன்றுகளுக்கொப்பானவரும், மயில் தோகையை சிரஸில் அணிந்தவரும், (இங்கு "பஞ்சவிம்சதி நக்ஷத்ர" என்பது மொழி பெயர்க்கப்படவில்லை) கலங்கமற்ற ஸம்பூர்ண சந்திரபிம்பம் போன்ற முகத்தையுடையவரும், காலையில் மலர்ந்த தாமரை போன்ற அழகிய தோலை வஸ்திரமாக அணிந்தவரும், இடது பக்கத்திலும் வலது பக்கத்திலும் தரிக்கப்பட்ட கொன்றைப்புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட வரும், இடையிலிருந்து கணுக்கால் வரை தொங்குகின்ற அழகிய கதம்பபுஷ்பங்க ளால், எதிரிகள் கூட கண்டுகளிக்கக் கூடியவராயும், அழகிற்கே உதாரணமான ஸ்திரீபோல் ஆபரணங்களால் விளங்குகின்றவளும், அழகிய உடலையுடையவளு மான பார்வதியின் கையில் ஒரு வில்லையும் அம்பையும் கொடுத்து, இடது கையை அவள் தோள் மேல் போட்டு, ஆலிங்கனம் செய்துகொண்டவரும், வேறொரு கையி னுல் வாசனையுள்ள பூங்கொத்தை முகர்ந்து முகர்ந்து பார்த்துக்கொண்டு, வனத்திலு ள்ள தளிர் அடர்ந்த கிளைகளால் மெல்ல மெல்ல வீசப்படுகின்றவரும், முன்பு செல் லுகின்ற திமிர் கொண்ட அழகிய நாய்களாலும் சிறுவர்களாலும் சூழப்பட்டவரும், இவ்வித வேஷத்துடன் வேட உருவங்கொண்டவரும், மஹாதேஜஸ்வியாயும், ஜகத்குருவுமான பரமேச்வரன் த்யானம் செய்யப்பட வேண்டும்.

இராஜ்யம் முழுவதும் பரவியுள்ள தொத்து வியாதிகளின் நாசம், பிறருடைய அபிசாரகர்மநாசம், சத்ருநாசம் முதலியவை, ப்ராஜாபத்யகிருச்ர அனுஷ்டானம் செய்து ஐயாயிரம் தடவை இந்த மந்த்ரத்தை ஜபிப்பதால் ஏற்படக்கூடிய பயன்களாம்.

**மூன்றுவது அனுவாகம் முற்றிற்று.**

---

## நான்காவது அனுவாகம்

**नम आव्याधिनीभ्यो विविध्यन्तीभ्यश्च वो नमः ॥ १**

**நம ஆவ்யாதி⁴னீப்⁴யோ விவித்⁴யந்தீப்⁴யஶ்ச வோ நம꞉ ॥ 1**

| | | |
|---|---|---|
| **ஆவ்யாதி⁴னீப்⁴ய:** | - | நான்கு பக்கங்களிலும் அடிக்கும் திறமைவாய்ந்த ஸ்திரீகள் ஸ்வரூபமாயும், |
| **விவித்⁴யந்தீப்⁴யஶ்ச** | - | பலவிதமாக அடிக்கும் திறமை வாய்ந்த ஸ்திரீகள் ஸ்வரூபமாயுமிருக்கின்ற, |
| **வ:** | - | தங்களுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

முன் அனுவாகம் போல் இந்த அனுவாகத்திலும் பகவான் எல்லா வடிவ மாகவும் (ஸர்வாத்மக:) இருக்கின்றார் என்று கூறி வணங்கப்படுகின்றார். **(1)**

**नम उगणाभ्यस्तृँहतीभ्यश्च वो नमः । २**

**நம உக3ணாப்4யஸ்த்ரும்ஹதீப்4யஸ்ச வோ நம: | 2**

**உக3ணாப்ய:** - உத்க்ருஷ்டகணங்களான ஸப்த மாத்ருகைகள் முதலியவர்களின் ஸ்வரூபமாயும்,
**த்ருஹும் ஹதீப்4ய:** - ஹிம்ஸிப்பதில் திறமைவாய்ந்த துர்க்கை முதலிய உக்ரமான தேவதா ஸ்வரூபமா யுமிருக்கின்ற,
**வ:** - தங்களுக்கு,
**நம:** - நமஸ்காரம். (2)

## नमो गृत्सेभ्यो गृत्सपतिभ्यश्च वो नमः । ३

**நமோ க்3ருத்ஸேப்4யோ க்3ருத்ஸபதிப்4யஸ்ச வோ நம: | 3**

**க்3ருத்ஸேப்4ய:** - விஷயங்களில் பற்றுள்ளவர்கள் ஸ்வரூபமாயும்,
**க்3ருத்ஸப்திப்4ய: ச** - அவர்களை இரக்ஷிக்கின்றவர்கள் ஸ்வரூபமாயுமிருக்கின்ற,
**வ:** - தங்களுக்கு,
**நம:** - நமஸ்காரம்.

**க்3ருத்ஸா:** - என்றால் புத்திசக்தியைக் கொண்டு ஜீவிக்கும் மேதாவிகள் என்றும் பொருள் கூறப்பட்டிருக்கிறது. (3)

## नमो व्रातेभ्यो व्रातपतिभ्यश्च वो नमः । ४

**நமோ வ்ராதேப்4யோ வ்ராதபதிப்4யஸ்ச வோ நம: | 4**

**வ்ராதேப்4ய:** - பலவித தொழில்களையுடைய பல வகுப்பினர்களுடைய கூட்டமாகவும்,
**வ்ராதபதிப்4யஸ்ச** - அவர்களை இரக்ஷிக்கின்றவர்களுமான,
**வ:** - தங்களுக்கு,
**நம:** - நமஸ்காரம். (4)

## नमो गणेभ्यो गणपतिप्यश्च वो नमः । ५

**நமோ க3ணேப்4யோ க3ணபதிப்யஸ்ச வோ நம: | 5**

**க3ணேப்3ய:** - ப்ரமதகணங்களாயும் (பரமேச்வரனைத் தொடர்ந்து செல்லும் பூதகணங்களாயும்),
**க3ணபதிப்4யஸ்ச** - அவர்களை இரக்ஷிக்கின்றவர்களுமான,
வ: - தங்களுக்கு,
நம: - நமஸ்காரம். (5)

## नमो विरूपेभ्यो विश्वरूपेभ्यश्च वो नमः । ६

**நமோ விரூபேப்⁴யோ விஶ்வரூபேப்⁴யஶ்ச வோ நம꞉ | 6**

| | | |
|---|---|---|
| **விருபேப்⁴ய:** | - | விகாரமான உருவத்தையுடைய கணங்கள் ஸவரூபமாயும், |
| **விஸ்வரூபேப்⁴ய:** | - | யாஜை, குதிரை போன்ற பலவித உருவங்கஜைக் கொண்ட கணங்கள் ஸ்வரூபமாயுமிருக்கின்ற, |
| **வ:** | - | தங்களுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

உண்மையில் எவ்வித உருவமுமற்றவர். ஆதலால் "விரூபர்." ஆரோபிதமான பலவித உருவங்கஜைக் கொண்டவர். ஆதலால் "விச்வரூபர்" என்றும் கூறலாம். **(6)**

## नमो महद्भ्यः क्षुल्लकेभ्यश्च वो नमः । ७

**நமோ மஹத்³ப⁴ய꞉ க்ஷுல்லகேப்⁴யஶ்ச வோ நம꞉ | 7**

| | | |
|---|---|---|
| **மஹத்³ப்⁴ய:** | - | அணிமாதி ஐச்வர்யங்கஜைப்பெற்ற மஹான்களாயும், |
| **க்ஷுல்லகேப்⁴யஶ்ச** | - | அவ்விதப் பெருமையற்றவர்களாயுமிருக்கின்ற, |
| **வ:** | - | தங்களுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். **(7)** |

## नमो रथिभ्योऽरथेभ्यश्च वो नमः । ८

**நமோ ரதி²ப்⁴யோ(அ)ரதே²ப்⁴யஶ்ச வோ நம꞉ | 8**

| | | |
|---|---|---|
| **ரதி²ப்⁴யோ** | - | இரதத்தில் ஏரிக்கொண்டிருப்பவர்களும், |
| அரதே2ப்4ய: | - | அவ்விதமில்லாமல் காலால் நடந்து செல்லுகின்றவர்களுமான, |
| **வ:** | - | தங்களுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். **(8)** |

## नमो रथेभ्यो रथपतिभ्यश्च वो नमः । ९

**நமோ ரதே²ப்⁴யோ ஸ்த²பதிப்⁴யஶ்ச வோ நம꞉ | 9**

தேர் ஸ்வரூபமாயும், தேரில் வீற்றிருக்கும் யஜமானன் ஸ்வரூபமாயுமிருக்கும் தங்களுக்கு நமஸ்காரம். **(9)**

(இந்த ஒன்பதாவது மந்த்ரம் முதல் 17 வது மந்த்ரம் முடிய சொற்களின் அர்த்தங்கள் எளிதில் விளங்கக் கூடுமெனக் கருதி இரு பாஷ்யங்களில் வியாக்யானம் செய்யப்படவில்ஜை. பட்டபாஸ்கர பாஷ்யத்தில் மட்டும் அர்த்தம் கூறப்பட்டி

ருக்கிறது. அதைத் தழுவி 17 வது மந்த்ரம் முடிய பொழிப்புரை மட்டும் இங்கு எழுதப்பட்டிருக்கிறது.)

**नमस्सेनाभ्यः सेनानिभ्यश्च वो नमः । १०**

**நமஸ்ஸேநாப்⁴ய: ஸேனனிப்⁴யஶ்ச வோ நம:** | 10

சேஜனகளாகவும், சேஜனத்தஜலவர்களாகவும் இருக்கும் தங்களுக்கு நமஸ்காரம். **(10)**

**नमः क्षत्तभ्यः संग्रहीतृभ्यश्च वो नमः । ११**

**நம: க்ஷத்தப்⁴ய: ஸங்க்³ரஹீத்ருப்⁴யஶ்ச வோ நம:** | 11

தேரை ஒழுங்குபடுத்தி ஓட்டுகின்றவர்களாயும், தேரில் உள்ள குதிரைகஜள இழுத்துப்பிடித்து நிறுத்துகின்றவர்களாயுமுள்ள. தங்களுக்கு நமஸ்காரம். **(11)**

**नमस्तक्षभ्यो रथकारेभ्यश्च वो नमो नमः । १२**

**நமஸ்தக்ஷப்⁴யோ ரத²காரேப்⁴யஶ்ச வோ நமோ நம:** | 12

மரவேஜல செய்யும் தச்சர்களாயும் அல்லது சிற்பிகளாயும், நன்றாகத் தேரை நிர்மாணம் செய்கின்வர்களாயுமுள்ள தங்களுக்கு நமஸ்காரம். **(12)**

**नमः कुलालेभ्यः कर्मा रेभ्यश्च वो नमः । १३**

**நம: குலாலேப்⁴ய: கர்மா ரேப்⁴யஶ்ச வோ நம:** | 13

குயவர்களாயும் கொல்லர்களாயுமிருக்கும் தங்களுக்கு நமஸ்காரம். **(13)**

**नमः पुञ्जिष्टेभ्यो निषादे भ्यश्च वो नमः ॥ १४**

**நம: புஞ்ஜிஷ்டேப்⁴யோ நிஷாதே³ ப்⁴யஶ்ச வோ நம:** || 14

பக்ஷிகஜளப் பிடிக்கின்றவர்களாயும், மீன்கஜளப் பிடிக்கும் செம்படவர்களாயுமுள்ள தங்ககளுக் நமஸ்காரம். **(14)**

**नम इषुकृद्भ्यो धन्वकृद्भ्यश्च वो नमः ॥ १५**

**நம இஷுக்ருத்³ப்⁴யோ த⁴ன்வக்ருத்³ப்⁴யஶ்ச வோ நம:** || 15

நன்கு அம்புகஜளச் செய்கின்றவர்களாயும், வில்லுகஜளச்செய்கின்றவர்களாயுமுள்ள தங்களுக்கு நமஸ்காரம். **(15)**

**नमो म्रुगयुभ्यः श्वनिभ्यश्च वो नमः || १६**

**நமோ ம்ருக³யுப்⁴ய: ஶ்வனிப்⁴யஶ்ச வோ நம: || 16**

மிருகங்களை வேட்டையாடுகின்றவர்களாகும், கழுத்தில் கயிற்றைக்கட்டி நாய்களை இழுத்துச் செல்லுகின்றவர்களாயுமிருக்கின்ற தங்களுக்கு நமஸ்காரம்.**(16)**

**नमः श्वभ्यः श्वपतिभ्यश्च वो नमः || १७**

**நம: ஶ்வப்⁴ய: ஶ்வபதிப்⁴யஶ்ச வோ நம: || 17**

நாய் ஸ்வரூபத்தைதரிப்பவர்களாயும், அவற்றை இரக்ஷிக்கின்றவர்களாயுமிருக்கின்ற தங்களுக்கு நமஸ்காரம். **(17)**

**(கருத்துரை)** இங்கு "நமோ ஹிரண்யபாஹவே" என்று ஆரம்பிக்கும் இரண்டாவது அனுவாகம், பரமேச்வரன் லீலையாக எடுத்துக்கொண்ட பல ஸ்வரூபங்களையே முக்கியமாக துதிப்பதற்காக ஏற்பட்டது என்றும், "நமஸ்ஸஹமானாய" என்று ஆரம்பிக்கும் மூன்றாவது அனுவாகம், சோரர்களின் உருவங்களைக் கொண்ட பரமேச்வரனை முக்கியமாக துதிப்பதற்கு ஏற்பட்டதென்றும், "நம ஆவ்யாதிநீப்ய:" என்று ஆரம்பிக்கும் இந்த நான்காவது அனுவாகம் பலவித பிராணிகளாக இருக்கும் ஸ்ரீ பரமேச்வரனை முக்கியமாக வர்ணிப்பதன் பொருட்டு ஏற்பட்டது என்றும் ஸாயணபாஷ்யத்தில் கூறப்பட்டிருக்கிறது.

"இஷுமத்ப்ய:" என்பதுமுதல் இதுவரை 26 அவாந்தர மந்த்ரங்களால் ஸ்ரீ பரமேச்வரனே சேதனுசேதன ஸ்வரூபமான ஸமஸ்த பிரபஞ்சமாக இருக்கின்றார் என்று வர்ணிக்கப்பட்டது. "நமோ ஜ்யேஷ்டாயச" என்பது முதலும் "ஸர்வாத்மத்வம்" வர்ணிக்கப்படப்போகின்றது. இதனுல் "சிவாத்வைதம்", அதாவது ஆத்மாத்வைதமே நிரூணபம் செய்யப்பட்டதாக ஆகிறது. ஆத்மாவிற்கு ஸமஸ்தசேதனத்வைதம் என்பது "அஹம் ப்ருஹ்மாஸ்மி" "தத்வமஸி" முதலிய பல ப்ரமாண வசனங்களால் சித்திக்கின்றது. ஆத்மாவிற்கு ஸமஸ்த அசேதனத்வைதம் என்பது ஆத்மா ஸமஸ்த அசேதனத்யாஸத்திற்கும் அதிஷ்டானமானதால் அத்யஸ்தமான பதார்த்தத்திற்கு அதிஷ்டானமே ஸ்வரூபம் என்பதை 'சுக்திரஜத' ஸ்தலத்தில் கண்டிருக்கின்றபடியால், சித்திக்கின்றது என்று ப்ருஹ்மமீமாம்ஸையில் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

இவ்வாறு ஸர்வாத்வைதம் நிரூபணம் செய்யப்பட்டிருப்பதால் இந்தப் பிரகரணத்திற்கும் அதுவே தாத்பர்யமானதால் ஸர்வோத்கிருஷ்டமான ஈசனை நாய் என்றும் வேடன் என்றும் ச்ருதி மிக நீசர்களுடன் எப்படி ஐக்யத்தை போதிக்கலாம் என்ற சங்கைக்கு இடமே இல்லை. "சவப்ய:" "சவபதிப்ய:" முதலியவற்றிற்கு நாய் உடலும் பரமேச்வரனும் ஒன்று என்று அர்த்தமல்ல. நாய் உடலில் வியாபித்திருக்கும் சைதன்யமும் பரமேச்வரசைதன்யமும் ஒன்று என்பதுதான் பொருள். "ச்வா" என்பதற்கு நாய் உடலை அர்த்தமாகக் கூறுங்காலத்தில் அது சைதன்யத்தில் கற்பிதமானதால் அதிஷ்டானமான சைதன்யத்தைத்தவிர ஆரோபிதமான நாய் உடல் என்பது தனியாக இல்லை என்கிற தாத்பர்யத்தில் இவ்வாறு கூறப்பட்டதாகக்

கொள்ளவேண்டும். கங்கை, குட்டைகள் முதலியவற்றில் பிரதிபிம்பிக்கும் சூர்யனிடம் கங்கையின் புனிதத்தன்மையோ, கள்ளின் தோஷமோ சம்பந்தப்படுவது இல்லை. அதுபோல் நாய் முதலிய நீசமான பிராணிகளின் உடலில் வியாபித்திருக்கும் ஆத்மசைதன்யத்தில், நீசமான பிராணிகளின் தோஷங்களோ உயர்ந்த பிராணிகளின் குணங்களோ சம்பந்தப்படுவதில்லை. இந்த அபிப்ராயத்தைத்தான்

**विद्याविनयसंपने ब्राह्मणे गवि हस्तिनि ।**
**शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः ॥**

**வித்³யாவினயஸம்பனே ப்³ராஹ்மணே க³வி ஹஸ்தினி ।**
**ஶுனி சைவ ஶ்வபாகே ச பண்டி³தாঃ ஸமத³ர்ஶினঃ ॥**

என்ற கீதா வாக்யமும்

**किं गङ्गाम्बुनि बिम्बितेम्बरमणौ चण्डालवापीपयः**
**पूरेण्यन्तरमस्ति काञ्चनघटीमृत्कुम्भयोश्चान्तरें ॥**

**கிம் க³ங்கா³ம்பு³னி பி³ம்பி³தேம்ப³ரமணௌ சண்டா³லவாபீபயঃ।**
**பூரேண்யந்தரமஸ்தி காஞ்சனக⁴டீம்ருத்கும்ப⁴யோஶ்சாந்தரேம் ॥**

முதலிய வாக்யங்களும் விளக்கிக்கூறுகின்றன. (கங்கா ஜலத்தில் பிரதிபிம்பிக்கும் சூரியனுக்கும் சண்டாளனுடைய குட்டையில் பிரதிபிம்பிக்கும் சூரியனுக்கும் வித்தியாசமுண்டோ? பொற்குடத்தில் உள்ள ஆகாயத்திற்கும் மண்குடத்தில் உள்ள ஆகாயத்திற்கும் வித்தியாசமுண்டோ? என்பது இதன் பொருள்.)

இந்த 14 அவாந்தரமந்த்ர ஸமுதாயமான நான்காவது அனுவாகத்திற்கு ரிஷி - துர்வாஸஸ், சந்தஸ் - மஹா விராட். தேவதை - சம்பு. **த்யானம்:**

**भस्मोद्धूलितसर्वाङ्ग जटामण्डलमण्डितम् ।**
**ध्यायेदेवं वृषारूढं गणेश्वरयुतं हरम् ॥**

**ப⁴ஸ்மோத்³தூ⁴லிதஸர்வாங்க³ ஜடாமண்ட³லமண்டி³தம் ।**
**த்⁴யாயேதே³வம் வ்ருஷாரூட⁴ம் க³ணேஶ்வரயுதம் ஹரம் ॥**

(**இதன் பொருள்**) எல்லா அங்கங்களிலும் விபூதியை உத்தூளனம் செய்து கொண்டவரும், ஜடாமண்டலத்தால் அலங்கரிக்கப்பட்டவரும், கணேச்வரனுடன் கூடியவரும், விருஷபாரூடருமான ஹரனை தியானம் செய்யவேண்டும்.

இம்மந்த்ர ஜபம் காசம், ஜ்வரம், ஸந்நிபாதம், குஷ்டம் முதலிய மகாரோகங்களை பரிஹாரம் செய்யக்கூடியதாகும்.

**நான்காவது அனுவாகம் முற்றிற்று.**

## ஐந்தாவது அனுவாகம்

### नमो भवाय च रुद्राय च । १

**நமோ ப⁴வாய ச ருத்³ராய ச** | 1

| | | |
|---|---|---|
| **ப⁴வாய ச** | - | ஜகத்தின் உற்பத்திக்குக் காரணமான பரமேச்வர னின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம், |
| **ருத்³ராய ச** | - | ஸம்ஸாரதுக்கத்தை அகற்றி மோக்ஷத்தையளிக் கும் பரமேச்வரனின் பொருட்டு நமஸ்காரம். |

**(கருத்துரை)** இப்பொழுது ஸ்ரீ பரமேச்வரனுக்கே உரிய பல மஹிமைகளை அனுஸந்தானம் செய்து வணங்குவதற்கு ஆரம்பிக்கின்றார். இது முதல் **த்ராபே** என்பது வரை எல்லா மந்த்ரங்களும் ஆதியில் மட்டும் "நம:" என்ற சொல்லை யுடையவை; ஆதலால் இவையெல்லாம் **அந்யதோ நமஸ்கார மந்த்ரங்கள்** எனப்படும். இந்த அனுவாகங்களில் "நம:" என்பதுமுதல் அடுத்த "நம:" என்பதற்கு முன்பு வரை ஒரு மந்த்ரம் எனக்கொள்ளவேண்டும். அதாவது **நமோ ப⁴வாய ச ருத்ராய ச** என்பது ஒரு மந்த்ரம். **நம: ஶர்வாயச பஶுபதயே ச** - என்பது அடுத்த மந்த்ரம். இவ்வாறே மேலே உள்ள மந்த்ரங்கள் எல்லாம். "நமா" என்பது ஒவ்வொரு சொல்லோடும் தனித்தனியாக அன்வயிக்கின்றது என்பதைக் குறிப்பிடுவதற்காக ஒவ்வொரு சொல்லோடும் "ச" என்பது உச்சரிக்கப்படுகின்றது. **(1)**

### नमश्शर्वाय च पशुपतये च ॥ २

**நமஶ் ஶர்வாய ச பஶுபதயே ச** || 2

| | | |
|---|---|---|
| **ஶர்வாய ச** | - | எல்லாவற்றையும் ஹிம்ஸித்து ஸம்ஹாரம் செய்யும் பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம், |
| **பஶுபதயே ச** | - | பசு எனப்படும் ஜீவர்களுக்கெல்லாம் பதியான பரமேச்வரனின் பொருட்டு,. |

**(கருத்துரை)** இவ்விரு மந்த்ரங்களாலும், ஸ்ருஷ்டி - ஸ்திதி - ஸம்ஹாரம் - திரோதனம் - அனுக்கிரஹம் என்ற ஐந்து காரியங்களையும் செய்யும் பரமேச்வரன் வணங்கப்படுகின்றார். **பவாய** - என்பதால் ஸ்ருஷ்டி காரணம் என்றும், **ருத்ராய** என்பதால் மோக்ஷ காரணம் என்றும், **சர்வாய** என்பதால் ஸம்ஹார காரணம் என்றும், **பசுபதயே** என்பதால் "பந்தம்" 'ஸ்திதி' என்ற இவ்விரண்டிற்கும் காரணம் என்றும் தெரிவிக்கப்படுகின்றது. "திரோதானம்" என்றால் பந்தம், "அனுக்ரஹம்" என்றால் மோக்ஷம். **(2)**

### नमो नीलग्रीवाय च शितिकण्ठाय च || ३

**நமோ நீலக்³ரீவாய ச ஶிதிகண்டா²ய ச || 3**

| | | |
|---|---|---|
| **நீலக்³ரீவாய ச** | - | (கால கூட விஷத்தை விழுங்கியதற்குப்பின்) கருப்பான கழுத்தையுடையவரான பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம், |
| **ஶிதிகண்டா²ய ச** | - | (அதற்குமுன்) வெளுத்த கழுத்தையுடையவரின் பொருட்டு நமஸ்காரம். |

தன் கழுத்தில் ஏற்படக்கூடியவிகாரத்தைக்கூட பொருட்படுத்தாமல் விஷத்தை உண்டு உலகத்தை இரக்ஷித்த ஸ்ரீ பரமேச்வரனது கருணை இதனுல் வெளியிடப்பட்டதாக ஆகிறது. **(3).**

## नमः कपर्दिने च व्युप्तकेशाय च ॥ ४

**நமः கபர்தி³னே ச வ்யுப்தகேஶாய ச || 4**

| | | |
|---|---|---|
| **கபர்தி³னே ச** | - | ஜடாதாரியான பரமேச்வரனுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம், |
| **வ்யுப்தகேஶாய ச** | - | முழுவதும் வபனம் செய்யப்பட்ட கேசங்களையுடைய ஸந்நியாசி ஸ்வரூபமான பரமேச்வரனின் பொருட்டு நமஸ்காரம். |

**(கருத்துரை)** “கபர்தீ" என்பதற்கு மிகவும் போற்றத் தகுந்த ஜடையையுடையவர் என்று பொருள். தக்ஷ யக்ஞத்தை அழித்த “வீரபத்ரன்" என்ற வீரன் ஸ்ரீ பரமேச்வரனுடைய ஜடையின் ஓர் அம்சம்தான் என்ற மஹிமை இதனுல் ஞாபகமூட்டப் படுகின்றது. பரமஹம்ஸர்கள் எனக் கூறப்படும் ஸந்நியாசிகள் "தலையில் சிகையற்றவர்களாக இருப்பர். இருப்பர். ஒரே காஷாய வஸ்த்ரத்தையே அணிந்து கொள்ளுவர். ஆத்மஞானத்தையே சிகையாகவும் யஜ்ஞோபவீத மாகவும் உடையவர்” என்றெல்லாம சுருதியில் லக்ஷணம் கூறப்பட்டிருக்கிறது. தத்தாத்ரேயர், துர்வாஸஸ் முதலியவர்கள் முன் யுகங்களில் இந்த லக்ஷணப்படி இருந்தவர்கள். இக்கலியில்

## चतुर्भिस्सद्वितः शिष्यैश्शङ्करोवतरिष्यति

**சதுர்பி⁴ஸ்ஸத்³வித: ஶிஷ்யைஶ்ஶங்கரோவதரிஷ்யதி**

(நான்கு சிஷ்யர்களுடன் ஸ்ரீபரமேச்வரன் அவதரிக்கப்போகின்றார்) என்ற வசனப்படி ஸ்ரீபரமேச்வரனுடைய அவதாரமான ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்ய ஸ்வாமிகளும் ஷை லக்ஷணப்படி இருந்தவர்கள். இவர்களுடைய ஸ்வரூபமாக விளங்குவதெல்லாம் ஸ்ரீபரமேச்வரன் தான் என்பதை **வ்யுப்தகேசாய ச** என்ற சொல் அறிவிக்கின்றது.

**ब्रह्माधिपतिर्ब्रह्मणो धिपतिः ப்³ரஹ்மதி⁴பதிர்ப்³ரஹ்மணோ தி⁴பதி:** என்ற ச்ருதியில் ஸ்ரீபரமேச்வரன் ப்ருஹ்மவித்யாஸம்பிரதாயப்ரவர்த்தகர் எனக் கூறப் பட்டிருக்கின்றது. ஸ்ரீ சங்கராசாரியர் முதலியவர்களாகத் தோன்றி ப்ருஹ்மவித்யாப்ரவர்த்தகராக ஆனர் என்பது இதிலிருந்து தெரிய வருகிறது. **(4)**

## नमस्सहस्राक्षाय च शतधन्वने च ॥ ५

**நமஸ்ஸஹஸ்ராக்ஷாய ச ஶதத⁴ன்வனே ச** ॥ 5

| | | |
|---|---|---|
| **ஸஹஸ்ராக்ஷாய ச** | - | பல கண்களையுடைய, அதாவது எல்லாவற்றையும் நேரில் அறியுந்திறமையுடைய ஸர்வஜ்ஞரான பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம், |
| **ஶதத⁴ன்வனே ச** | - | பல வில்லுகளையுடையவருமான பரமேச்வரனுக்கு நமஸ்காரம். |

ப்ரணவம், வேதம், மேருபர்வதம், பிநாகம் முதலிய பல வில்லுகள் ஸ்ரீ பரமேச்வரனுக்கு உண்டு. திருபுரஸம்ஹாரம் செய்யுங்காலத்தில் மேருபர்வதத்தை வில்லாகவும், விஷ்ணுவை பாணமாகவும் வைத்துக்கொண்டார் என்றும், ஓங்காரத்தை வில்லாகவும் ஸாவித்ரியை நாண்கயிறாகவும் வைத்துக் கொண்டார் என்றும் மஹாபாரதத்தில் கூறப்பட்டிருக்கிறது. **(5)**

## नमो गिरिशाय च शिपिविष्टाय च ॥ ६

**நமோ கி³ரிஶாய ச ஶிபிவிஷ்டாய ச** ॥ 6

| | | |
|---|---|---|
| **கி³ரிஶாய ச** | - | கைலாஸமலையில் வசிப்பவரான பரமேச்வரனுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம், |
| **ஶிபிவிஷ்டாய (விஷ்ணு ஶிபிவிஷ்ட:)** | - | என்ற வேதவாக்கியப்படி) விஷ்ணுரூபமாக இருக்கும் பரமேச்வரனுக்கு நமஸ்காரம். **(6)** |

## नमो मीढुष्टमाय चेषुमते च ॥ ७

**நமோ மீடு⁴ஷ்டமாய சேஷுமதே ச** ॥ 7

| | | |
|---|---|---|
| **மீடு⁴ஷ்டமாய ச** | - | உலகத்தை ஸ்ருஷ்டி செய்யும் ஹிரண்யகர்ப்ப ஸ்வரூபமாயும், அல்லது.மிக அதிகமாக மழையைப் பொழியும் மேகஸ்வரூபமாயும் இருக்கின்ற பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம், |
| **சேஷுமதே ச** | - | சிறந்த பாணத்தையுடையவரின் பொருட்டு நமஸ்காரம். |

"கிரிச - சிபிவிஷ்ட - மீடுஷ்டம" என்ற மூன்று பதங்களாலும், முறையே 'ருத்ர - விஷ்ணு - ப்ரஹ்மா' என்ற மூர்த்தித்ரய ஸ்வரூபமாக இருப்பவர் என்பது கூறப்பட்டதாக ஆகிறது. **(7)**

## नमो ह्रस्वाय च वामनाय च ॥ ८

**நமோ ஹ்ரஸ்வாய ச வாமனாய ச** || 8

| | | |
|---|---|---|
| **ஹ்ரஸ்வாய ச** | - | சிறிய உருவத்தை உடைய பரமேச்வரனுக்கு நமஸ்காரம், |
| **வாமனாய ச** | - | சிறிய அவயவங்களை உடையவருக்கு நமஸ்காரம். |

"ஹ்ரஸ்வ" என்பதால் தஹரோபாஸ்யமூர்த்தி என்றும் "வாமந" என்பதால் மஹாகணபதி ஸ்வரூபமாக இருப்பவர் என்றும் கூறப்பட்டதாக'வும் கொள்ளலாம். **(8)**

## नमो बृहते च वर्षीयसे च ॥ ९

**நமோ ப்³ருஹதே ச வர்ஷீயஸே ச** || 9

| | | |
|---|---|---|
| **ப்³ருஹதே ச** | - | உருவத்தால் பெரியவரான பரமேச்வரனுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம், |
| **வர்ஷீயஸே ச** | - | நற்குணங்கள் நிறம்பியவரின் பொருட்டு நமஸ்காரம். |

**बृहत्** - **ப்³ருஹத்** என்பதற்கு எக்காலத்திலும் எல்லா தேசத்திலும் எல்லாமாகவும் இருக்கும் பரப்ருஹ்ம ஸ்வரூபமாக இருப்பவர் என்றும், பொருள் கூறப்பட்டிருக்கிறது. **(9)**

## नमो व्रुद्धाय च संवृध्वने च ॥ १०

**நமோ வ்ருத்³தா⁴ய ச ஸம்வ்ருத்⁴வனே ச** || 10

| | | |
|---|---|---|
| **வ்ருத்³தா⁴ய ச** | - | வயோவ்ருத்தராயும், |
| **ஸம்வ்ருத்⁴வனே ச** | - | தனக்கே உரிய ஸ்தோத்திரங்களாலும், நமஸ்காரங்களாலும் விசேஷமாகப் போற்றப்படுகின்ற வருமான பரமேச்வரனுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**(கருத்துரை) வ்ருத்³த⁴:** என்பதற்கு மற்ற அனைவராலும் வணங்கப்படுவதாலும், அவர் மற்றவரை வணங்காததாலும் அவர் மிகவும் விருத்தர் என்று பொருள். பிறந்து பல பருஷங்கள் சென்றுவிட்டன என்று பொருள் அல்ல. **ஸம்வ்ருத்⁴வா** மற்ற தேவதைகளிடம் பொருந்தாத, அவருக்கே உரிய பல ஸ்தோத்திரங்களால்

போற்றப்பட்டு அபிவிருத்தியடைகின்றவர் என்று பொருள். பக்தர்களுக்கு வேண்டியவற்றை அளித்து வளர்க்கின்றார் என்றும் அர்த்தம் கூறப்பட்டிருக்கிறது.

(10)

## नमो अग्रियाय च प्रथमाय च ॥ ११

**நமோ அக்³ரியாய ச ப்ரத²மாய ச** ॥ 11

**அக்³ரியாய ச** - உலகம் உற்பத்தியாவதற்கு முன்பே இருப்பவராயும்,
**ப்ரத²மாய ச** - மற்ற அனைவரையும்விட முதல்வராயுமுள்ள ஈச்வரனின் பொருட்டு,
**நம:** - நமஸ்காரம்

ஜகத்தின் உற்பத்திக்கு முன் ஹிரண்யகர்ப்பர் இருந்ததாக **हिरण्यगर्भस्समवर्तताग्रे** - **ஹிரண்யக³ர்ப⁴ஸ்ஸமவர்த்ததாக்³ரே** முதலிய சுருதி கூறுகின்றபடியால், அவருக்கும் காரணமாக பரமேச்வரன் இருந்தார் என்பதைத் தெரிவிப்பதற்காக **प्रथमाय ப்ரத²மாய** என்றும் கூறப்பட்டிருக்கிறது. இதனால் பரமேச்வரன் ஸர்வஜகத்காரணம் என்று உரைக்கப்பட்டதாக ஆகிறது. **नमो भवाय च நமோ ப⁴வாய ச** என்பதால் ஜகத் காரணத்வம் போதிக்கப்பட்டபோதிலும், ஜகத்காரணம் என்று கருதப்படும் ஹிரண்யகர்ப்பனுக்கும் காரணம் உரைக்கப்படுகின்றது. **(11)**

## नम आशवे चाजिराय च ॥ १२

**நம ஆஶவே சாஜிராய ச** ॥ 12

**ஆஶவே ச** - எங்கும் வியாபித்திருப்பவரும்,
**ஆஜிராய ச** - செல்லுவதில் திறமையுள்ளவருமான பரமேச்வரனுக்கு,
**நம:** - நமஸ்காரம். **(12)**

## नमशीघ्रयाय च शीभ्याय च || १३

**நமஶீக்⁴ரயாய ச ஶீப்⁴யாய ச** ॥ 13

**ஶீக்⁴ரயாய ச** - வேகமாகச் செல்லும் ஜலத்தில் இருப்பவரும்,
**ஶீப்⁴யாய ச** - பெரிய ஜலப்பிரவாஹத்தில் இருப்பவருமான ஈசனுக்கு,
**நம:** - நமஸ்காரம்.

## नम् ऊर्म्याय चावस्वन्याय च ॥ १४

**நம் ஊர்ம்யாய சாவஸ்வந்யாய ச** ॥ 14

| | | |
|---|---|---|
| **ஊர்ம்யாய ச** | - | அலைகளில் இருப்பவரும், |
| **அவஸ்வந்யாய ச** | - | சத்தமில்லாத ஜலத்தில் இருப்பவருமான பரமேச்வரனுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

### नमः स्त्रोतस्याय च द्वीप्याय च ॥ १५

**நம꞉ ஸ்ஸ்ரோதஸ்யாய ச த்³வீப்யாய ச** || 15

| | | |
|---|---|---|
| ஸ்ரோதஸ்யாய ச | - | சிறியபிரவாஹத்தில் இருப்பவரும், |
| **த்³வீப்யாய ச** | - | ஜலம் இரண்டு பிரிவாகச் செல்லுமிடத்தில் அல்லது "ஜம்பூத்வீபம்" முதலியவற்றில் இருப்பவருமானபரமேச்வரனுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

ஸ்ரீ பரமேச்வரன் எல்லா இடங்களிலும் வியாபித்திருக்கிறார். அவருடைய சக்திதான் எங்கும் நிறம்பியிருக்கிறது என்பதே 14-15 - வது மந்த்ரங்களின் முக்கிய தாத்பர்யம். (15)

**ஐந்தாவது அனுவாகம் முற்றிற்று.**

---

## ஆறுவது அனுவாகம்

### नमो ज्येष्ठाय च कनिष्ठाय च ॥ १

**நமோ ஜ்யேஷ்டா²ய ச கநிஷ்டா²ய ச** || 1

| | | |
|---|---|---|
| **ஜ்யேஷ்டா²ய ச** | - | வயது, படிப்பு முதலியவற்றால் சிறந்தவர்கள் ஸ்வரூபமாயும், |
| **கநிஷ்டா²ய ச** | - | அவ்வித சிறப்பற்றவர்கள் ஸ்வரூபமாயுமிருக்கிற பரமேச்வரனின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். **(1)** |

### नमः पूर्वजाय चापरजाय च ॥ २

**நம꞉ பூர்வஜாய சாபரஜாய ச** || 2

| | | |
|---|---|---|
| **பூர்வஜாய ச** | - | முன்பே உண்டான காரண ரூபமாயும், |
| **அபரஜாய ச** | - | பின்பு உண்டான கார்யரூபமாயும் இருக்கும் ஈச்வரனுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

ஸ்ருஷ்டி ஆரம்பத்தில் முதல் முதலில் ஹிரண்ய கர்ப்பனத் தோன்றியவர் என்றும், கடைசீ காலத்தில் காலாக்னி ரூபமாகத் தோன்றியவர் என்றும் பொருள் கூறப்பட்டிருக்கிறது. **(2)**

## नमो मध्यमाय चापगल्भाय च ॥ ३

**நமோ மத்⁴யமாய சாபக³ல்பா⁴ய ச** ॥ 3

**மத்⁴யமாய ச** - யௌவனப் பருவத்தில் உள்ளவராகவும்,
**ஆபக³ல்பா⁴ய ச** - சிறுவன் வடிவத்தில் இருப்பவருமான ஈச்வரனுக்கு,
**நம:** - நமஸ்காரம்.

ஸ்ருஷ்டி - ஸம்ஹாரம் இவ்விரண்டிற்கும் மத்திய காலத்தில் உள்ள பல பிராணிகள் ரூபமாக இருப்பவர் என்றும் என்பதற்கு பொருள் கூறப்பட்டிருக்கிறது.**(3)**

## नमो जघन्याय च बुध्नियाय च | ४

**நமோ ஜக⁴ந்யாய ச பு³த்⁴னியாய ச** | 4

**ஜக⁴ந்யாய ச** - பசு முதலியவற்றின் பின் புறத்தில் தோன்றிய கன்று முதலியவை ஸ்வரூபமாயிருப்பவரும்,
**பு³த்⁴னியாய ச** - மரம் முதலியவற்றின் அடிபாகத்தில் தோன்றிய வேர் முதலியவைகளாக இருப்பவருமான ஈச்வரனுக்கு,
**நம:** - நமஸ்காரம் **(4)**

## नमस्सोभ्याय च प्रतिसर्याय च ॥ ५

**நமஸ்ஸோப்⁴யாய ச ப்ரதிஸர்யாய ச** ॥ 5

**ஸோப்⁴யாய ச** - மனுஷ்யலோகத்தில் உதித்தவராயும்,
**ப்ரதிஸர்யாய ச** - ஜங்கமப்பிரபஞ்சத்தில் இருப்பவருமான ஈச்வரனுக்கு,
**நம:** - நமஸ்காரம்.

**उभाभ्यामेव मनुष्यलोकम्** - **உபா⁴ப்⁴யாமேவ மனுஷ்யலோகம்** என்ற வேதவாக்யப்படி புண்ணியம் பாவம் இரண்டுடன் கூடியிருக்கின்றபடியால் மனுஷ்ய லோகத்திற்கு, **सोभः ஸோப⁴:** என்று பெயர், மஹாபாரதத்தில், **शाल्वः सोभमधिष्ठाय** **ஶால்வ: ஸோப⁴மதி⁴ஷ்டா²ய** என்று காணப்படுகின்றபடியால், **सोभः ஸோப⁴:** என்பது ஓர் கந்தர்வநகரத்தை குறிக்கும் என்றும் கூறப்பட்டிருக்கிறது, **प्रतिसरः ப்ரதிஸர:** என்பதற்கு ஓரிடத்திலிருந்து மற்றெரு இடத்திற்குத் தானுகச்

செல்லக்கூடிய ஜங்கமப் பிரபஞ்சம் என்றும், விவாஹம் முதலிய சுபகாரியங்களில் கையில் கட்டப்படும் ரக்ஷாபந்தனம் என்றும் இருவித பொருள்கள் உண்டு. அவ்விடங்களில் எல்லாம் அந்தர்யாமியாக ஸ்ரீ பரமேச்வரன் இருக்கிறார் என்பது தாத்பர்யம். **(5)**

## नमो याम्याय च क्षेम्याय च ॥ ६

**நமோ யாம்யாய ச க்ஷேம்யாய ச** || 6

| | | |
|---|---|---|
| **யாம்யாய ச** | - | யமலோகத்தில் இருப்பவரும், |
| **க்ஷேம்யாய ச** | - | ஸுவர்க்கலோகத்தில் இருப்பவருமான ஈச்வரனுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**यमः யம:** என்பதற்கு ப்ராணவியோககாலம் என்றும் **क्षेमः க்ஷேம:** என்பதற்கு இரகைஷ, மோக்ஷம், இரகசிய ஸ்தானம் என்றும் அர்த்தம் செய்துகொண்டு கடைசி காலத்தில் தோன்றுகின்றவர், இரக்ஷிக்கின்றவர், மோக்ஷத்தையளிப்பவர், இரகசிய ஸ்தானத்தில் இருப்பவர் என்றெல்லாம் பொருள் கூறப்பட்டிருக்கிறது. **(6)**

## नम उर्वर्याय च खल्याय च ॥ ७

**நம உர்வர்யாய ச க²ல்யாய ச** || 7

| | | |
|---|---|---|
| **உர்வர்யாய ச** | - | எல்லாப்பயிர்களும் நிரம்பிய பூமியில் இருப்பவரும், |
| **க²ல்யாய ச** | - | களத்தில் இருப்பவருமான பரமேச்வரனுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். **(7)** |

## नमः श्लोक्याय चावसान्याय च ॥ ८

**நம: ஶ்லோக்யாய சாவஸாந்யாய ச** || 8

| | | |
|---|---|---|
| **ஶ்லோக்யாய ச** | - | (கர்மகாண்டத்தில் உள்ள) வேத மந்த்ரங்களால் கொண்டாடப்பட்டவரும், |
| அவஸன்யாய ச | - | வேதங்களின் முடிவான உபநிஷத்துக்களால் நிரூபிக்கப்பட்டவருமான ஈச்வரனுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

எல்லா சுலோகங்களாலும் கொண்டாடப்படுகின்றவர் என்றும், எல்லா பொருள்களும் முடிவடையுங்காலத்தில் இருக்கின்றவர் என்றும் ஷை இரு சொற்களின் அர்த்தம் கூறப்பட்டிருக்கிறது. **(8)**

## नमो वन्याय च कक्ष्याय च ॥ ९

**நமோ வந்யாய ச கக்ஷ்யாய ச** || 9

**வந்யாய ச** - காட்டில் மரம் முதலியவைகளாக இருப்பவரும்,
**கக்ஷ்யாய ச** - புதர்களில் கொடி, செடி முதலியவைகளாக இருப்பவருமான ஈச்வரனுக்கு,
**நம:** - நமஸ்காரம். **(9)**

## नमः श्रवाय च प्रतिश्रवाय च ॥ १०

**நம: ஶ்ரவாய ச ப்ரதிஶ்ரவாய ச** || 10

**ஶ்ரவாய ச** - சப்தமாயும்,
**ப்ரதிஶ்ரவாய ச** - எதிரொலியாயுமிருக்கும் ஈச்வரனுக்கு,
**நம:** - நமஸ்காரம்.

எல்லா இடங்களிலும் பிரஸித்தராயும், ப்ரதி வசனம் (பதில்) ஸ்வரூபமாயு மிருப்பவர் என்றும் பொருள் கூறப்பட்டிருக்கிறது. **(10)**

## नम आशुषेणाय चाशुरथाय च ॥ ११

**நம ஆஶுஷேணாய சாஶுரதா$^{2}$ய ச** || 11

**ஆஶுஷேணாய ச** - விரைவில் செல்லும் சேஊனயையுடையவரும்,
**அஶுரதா$^{2}$ய ச** - விரைவில் செல்லும் தேரையுடையவருமான ஈச்வரனுக்கு,
**நம:** - நமஸ்காரம். **(11)**

## नमश्शूराय चावभिन्दते च ॥ १२

**நமஶ்ஶூராய சாவபி$^{4}$ந்த$^{3}$தே ச** || 12

**ஶூராய ச** - சூரராயும்,
**அவபி$^{4}$ந்த$^{3}$தே ச** - தர்மத்தைக் கெடுக்கின்றவர்கஊளப் பிளக்கின்றவ ராயுமுள்ள ஈச்வரனுக்கு,
**நம:** - நமஸ்காரம். **(12)**

## नमो वर्मिणे च वरूथिने च ॥ १३

**நமோ வர்மிணே ச வரூதி$^{2}$னே ச** || 13

**வர்மிணே ச** - கவசத்தையணிந்தவரும்,

| | | |
|---|---|---|
| **வரூதி²னே ச** | - | தேர்பாகனை இரக்ஷிக்கக்கூடிய இடத்தைக் காப்பவராயுமுள்ள பரமேச்வரனுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

ஆபத்து நேரிடுங்காலத்தில் தேர்பாகனைக் காப்பதற்கென்று தேரில் ஒரு ஸ்தலம் உண்டு. அதற்கு என்று பெயர். சிறந்த கிருஹம் என்றும் இச்சொல்லிற்குப் பொருள் உண்டு. அதை யுடையவர் என்றும் பொருள் கூறப்பட்டிருக்கிறது. **(13)**

## नमो बिल्मिने च कवचिने च ॥ १४

**நமோ பி³ல்மினே ச கவசினே ச** || 14

| | | |
|---|---|---|
| **பி³ல்மினே ச** | - | போர் செய்யுங்காலத்தில் தலையை இரக்ஷிக்கும் தலைப்பாகை முதலியவற்றுடன் கூடியவரும், |
| **கவசினே ச** | - | சரீரரக்ஷையுடன் கூடியவருமான ஈச்வரனுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**वर्म வர்ம** இடைவரை அணியப்படும் சட்டை முதலியவை. **कवचम् கவசம்** குதிகால் வரை அணியப்படும் சட்டை முதலியவை. அல்லது ஒன்று, உடலில் அணியப்படும் பொருளையும், மாற்றொன்று சரீர ரக்ஷைக்காக கூறப்படும் மந்த்ரம் முதலியவற்றையும் குறிப்பிடுகின்றது என இரு சொற்களுக்கும் வித்தியாசத்தை அறியவேண்டும். **(14)**

## नमः श्रुताय च श्रुतसेनाय च ॥ १४

**நம: ஶ்ருதாய ச ஶ்ருதஸேனாய ச** || 14

| | | |
|---|---|---|
| **ஶ்ருதாய ச** | - | வேதங்களில் பிரஸித்தராயும், |
| **ஶ்ருதஸேனாய ச** | - | பிரஸித்தமான சேனைகளையுடையவருமான ஈச்வரனுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம் **(15)** |

இந்த ஐந்தாவது ஆறாவது அனுவரகங்களுக்கு ரிஷியும் தேவதையும் பரமேச்வரன். ஐந்தாவது அனுவாகத்திற்கு சந்தஸ் - மஹாவிராட், ஆறாவது அனுவாகத்திற்கு - மஹா பங்க்தி.

**த்யானம்:**

**गौरीकराम्बुजन्यस्तस्वर्णशैलशरासनम् ।**
**इषुद्दस्तं रथारूढं नरनारीतनुं स्मरेत् ॥**

**கௌ[3]ரீகராம்பு[3]ஜன்யஸ்தஸ்வர்ணஶைலஶராஸனம் |**
**இஷுத்[3]த[3]ஸ்தம் ரதா[2]ரூட[4]ம் நரநாரீதனும் ஸ்மரேத் ||**

**(இதன் பொருள்)** பார்வதியின் கையில் கொடுக்கப்பட்ட மேருபர்வுதமாகிற வில்லையுடையவரும், தன் கையில் அம்பையுடையவரும், இரதத்தில் வீற்றிருப்ப வரும், பாதி உடல் புருஷனுகவும், பாதி உடல் ஸ்திரீயாயுமுள்ள அர்த்தநாரீச்வர ஸ்வரூபத்தை ஸ்மரிக்க வேண்டும். அர்த்தநாரீச்வர ஸ்வரூபத்தில் ஒரு கை பார்வ தியைச் சேர்ந்ததானதால் அந்தக்கையில் வில் தரிக்கப்படுகின்றது என்பது தாத் பர்யம்.

சத்ருஜயம், நீண்ட ஆயுள், இராஜ்யவ்ருத்தி, ஸத்புத்ரலாபம் முதலியவை இந்த மந்த்ர ஜபத்தின் பயன் என்றும், மூன்று நாள் சருபோஜனம் செய்து பதினேறு தினங்கள் இடைவிடாமல் இதை ஜபித்து வந்தால் ஸித்தி ஏற்படும் என்றும் கூறப் பட்டிருக்கிறது.

**(ஆறுவது அனுவாகம் முற்றிற்று.)**

---

## ஏழாவது அனுவாகம்

### नमो दुन्दुभ्याय चाहनन्याय च ॥ १

**நமோ து[3]ந்து[3]ப்[4]யாய சாஹனந்யாய ச || 1**

| | | |
|---|---|---|
| **து[3]ந்து[3]ப்[4]யாய ச** | - | பேரீவாத்தியத்தில் இருகின்றவரும், |
| **ஆஹனந்யாய ச** | - | மேற்படி வாத்தியத்தை அடிக்கும் தண்டத்தில் இருக்கின்றவரும். **(1)** |

இந்த ஏழாவது அனுவாகத்திலும் "ஸர்வாந்தர்யாமி" என்றும் "ஸர்வாத்மகர்" என்றும் கூறி ஸ்ரீ பரமேச்வரன் வணங்கப்படுகிறார்.

(இனி புதிதான சொற்களுக்குமட்டும் தமிழ் அர்த்தம் எழுதப்படுகின்றது. முன் அனுவாகம் போல் 'அப்படிப்பட்ட பரமேச்வரனுக்கு நமஸ்காரம்' என்று அந்தந்த மந்த்ரங்களில் சேர்த்துக்கொள்ளவும்.)

### नमो धृष्णवेच प्रमृशाय च ॥ २

**நமோ த்[4]ருஷ்ணவேச ப்ரம்ருஶாய ச || 2**

| | | |
|---|---|---|
| **த்[4]ருஷ்ணவே ச** | - | யுத்தத்தில் புறங்காட்டி ஓடாதவரும், |
| **ப்ரம்ருஶாய ச** | - | எதிரி சேனைகளின் விருத்தாந்தங்களை நன்கு அறிகின்றவரும். **(2)** |

**नमो दूताय च प्रहिताय च ॥ ३**

**நமோ தூ³தாய ச ப்ரஹிதாய ச** || 3

**தூ³தாய ச** - அந்நியர்களுக்கு தன் விஷயத்தைத் தெரிவிப்பதிலும் பிறருடைய விஷயத்தை நன்கு அறிந்து கொண்டு வருவதிலும் தேர்ச்சி பெற்றவரும்,
**ப்ரஹிதாய ச** - யஜமானனுல் ஒரு காரியத்தைச் செய்து கொண்டு வருவதற்காக அனுப்பப்பட்டவராயும். (3)

**नमो निषङ्गिणे चेषुधि मते च ॥ ४**

**நமோ நிஷங்கி³ணே சேஷுதி⁴ மதே ச** || 4

**நிஷங்கி³ணே ச** - கத்தியையுடையவரும்,
சேஷுதி⁴ மதே ச - அம்பறுத்தூணியையுடையவரும். (4)

**नम स्तीक्ष्णेषवे चायुधिने च ॥ ५**

**நம ஸ்தீக்ஷ்ணேஷவே சாயுதி⁴னே ச** || 5

**தீக்ஷ்ணேஷவே ச** - கூர்மையான அம்புகளை யுடையவரும்,
**ஆயுதி⁴னே ச** - மிகச் சிறந்த அல்லது பல ஆயுதங்களையுடையவராயும். (5)

**नमः स्वायुधाय च सुधन्वने च ॥ ६**

**நமः ஸ்வாயுதா⁴ய ச ஸுத⁴ன்வனே ச** || 6

**ஸ்வாயுதா⁴ய ச** - சிறந்த ஆயுதத்தை உடையவராயும்.
**ஸுத⁴ன்வனே ச** - சிறந்த வில்லையுடையவராயும். (6)

**नमः स्रुत्याय च पथ्याय च ॥ ७**

**நமः ஸ்ருத்யாய ச பத்²யாய ச** || 7

**ஸ்ருத்யாய ச** - ஒத்தையடிப்பாதையில் இருப்பவரும்,
**பத்²யாய ச** - தேர் முதலியவை செல்லக்கூடிய ராஜ மார்க்கத்தில் இருப்பவரும். (7)

**नमः काट्याय च नीप्याय च ॥ ८**

**நமः காட்யாய ச நீப்யாய ச** || 8

**காட்யாய ச** - சொற்பஜலம் ஓடும் சிறிய வாய்க்காலில்

| | | | |
|---|---|---|---|
| | | இருப்பவரும், | |
| **நீப்யாய ச** | - | அருவிவிழும் இடத்திலிருப்பவரும். | **(8)** |

**नमस्सूद्याय च सरस्याय च ॥ ९**

**நமஸ்ஸூத்³யாய ச ஸரஸ்யாய ச ||** 9

| | | | |
|---|---|---|---|
| **ஸூத்³யாய ச** | - | சேருள்ள இடத்தில் இருப்பவரும், | |
| **ஸரஸ்யாய ச** | - | குளத்தில் இருப்பவரும். | **(9)** |

**नमो नाद्याय च वैशन्ताय च ॥ १०**

**நமோ நாத்³யாய ச வைஶந்தாய ச ||** 10

| | | | |
|---|---|---|---|
| **நாத்³யாய ச** | - | நதிகளில் இருப்பவரும், | |
| **வைஶந்தாய ச** | - | சிறிய குட்டைகளில் இருப்பவரும். | **(10)** |

**नमः कूप्याय चावट्याय च ॥ ११**

**நமः கூப்யாய சாவட்யாய ச ||** 11

| | | | |
|---|---|---|---|
| **கூப்யாய ச** | - | கிணற்றிலிருப்பவரும், | |
| **அவட்யாய ச** | - | பள்ளத்திலிருப்பவரும். | **(11)** |

**नमो वर्ष्यायचावर्ष्याय च ॥ १२**

**நமோ வர்ஷ்யாய சாவர்ஷ்யாய ச ||** 12

| | | | |
|---|---|---|---|
| **வர்ஷ்யாய ச** | - | மழைஜலத்தில் இருப்பவரும், | |
| **அவர்ஷ்யாய ச** | **-** | மழை இல்லாமையில் இருப்பவரும். | **(12)** |

பிராணிகளின் கர்மாக்களுக்கேற்றவாறு மழைக்கும், அது இல்லாமைக்கும் ஈச்வரனே காரணம் என்று ஏற்படுகின்றது. **அவர்ஷ்யாய** என்பதற்கு மழையை எதிர்பாராத ஸமுத்ரஜலத்தில் இருப்பவர் என்றும் பொருள் கூறப்பட்டிருக்கிறது.

**(12)**

**नमोमेघ्याय च विद्युत्याय च || १३**

**நமோ மேக்⁴யாய ச வித்³யுத்யாய ச ||** 13

| | | | |
|---|---|---|---|
| **மேக்⁴யாய ச** | - | மேகத்திலிருப்பவரும், | |
| **வித்³யுத்யாய ச** | - | மின்னலிலிருப்பவரும். | **(13)** |

**नम ईध्रियाय चातप्याय च ॥ १४**

**நம ஈத்⁴ரியாய சாதப்யாய ச ||** 14

**ஈத்⁴ரியாய ச** - நிர்மலமான சரத்கால மேகத்திலிருப்பவரும்,
**ஆதப்யாய ச** - வெய்யிலிருப்பவரும்.

**नमो वात्याय च रेष्मियाय च ॥ १५**

**நமோ வாத்யாய ச ரேஷ்மியாய ச** || 15

**வாத்யாய ச** - காற்றிலிருப்பவரும்,
**ரேஷ்மியாய ச** - பிரளயகாலத்திலிருப்பவரும். **(15)**

**नमो वास्तव्याय च वास्तुपाय च ॥ १६**

**நமோ வாஸ்தவ்யாய ச வாஸ்துபாய ச** || 16

**வாஸ்தவ்யாய ச** - பசு குதிரை முதலிய வஸ்துக்களில் இருப்பவரும்,
**வாஸ்துபாய ச** - வீடு கட்டுவதற்கு உரிய பூமியை (மனையை) காப்பாற்றுகின்றவருமான பரமேச்வரனுக்கு,
**நம:** - நமஸ்காரம். **(16)**

இந்த பதினாறு அவாந்தர மந்த்ரங்கள் சேர்ந்த ஏழாவது அனுவாகம் ஒரே மஹாமந்த்ரம். இதன் ரிஷி ரோமசர். சந்தஸ் - மஹாநுஷ்டுப். தேவதை - ருத்ரன்.

**த்யானம்:**

**जटाभिलम्बमानाभिर्नृत्यन्तमभयप्रदम् ।**
**देवं शुचिस्मितं ध्यायेद्व्याघ्रचर्मपरिष्कृतम् ॥**

**ஜடாபி⁴லம்ப³மாநாபி⁴ர்ந்ருத்யந்தமப⁴யப்ரத³ம் ।**
**தே³வம் ஶுசிஸ்மிதம் த்⁴யாயேத்³வயாக்⁴ரசர்மபரிஷ்க்ருதம் ॥**

**(இதன் பொருள்)** தொங்கும் ஜடைகளுடன் நர்த்தனம் செய்கின்றவரும், அபயத்தை அளிக்கின்றவரும், புலித்தோலையணிந்தவரும், மந்தஹாஸத்துடன் கூடியவருமான மஹாதேவனை த்யானம் செய்ய வேண்டும்.

இந்த மந்த்ர ஆவிருத்தியால், புத்தி, ஆயுள், ஆரோக்யம், ஐச்வர்யம், புத்ரன், வித்யை மோக்ஷம் முதலிய பயன்கள் சித்திக்கும்.

**(ஏழாவது அனுவாகம் முற்றிற்று)**

## எட்டாவது அனுவாகம்

### नमस्सोमाय च रुद्राय च ॥ १

**நமஸ்ஸோமாய ச ருத்³ராய ச** ॥ 1

| | | |
|---|---|---|
| **ஸோமாய ச** | - | உமையுடன் கூடியவரும், |
| **ருத்³ராய ச** | - | ஸம்ஸாரதுக்கத்தை நிவிருத்தி செய்கின்ற வருமான பரமேச்வரனுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**(கருத்துரை)** இந்த எட்டாவது அனுவாகத்தில், பரமேச்வரன் அனைவராலும் உபாஸிக்கத்தகுந்தவர் என்பதை நிரூபிக்கும், பரமேச்வரனிடம் மட்டுமுள்ள சில குணங்களையும், 'பரமேச்வரன் ஸர்வாந்தர்யாமி' என்பதையும் எடுத்துக்கூறி பதினேழு அவாந்தர மந்த்ரங்களால் ஸ்ரீ பரமேச்வரன் வணங்கப்படுகின்றார்.

ஸம்ஸாரதுக்கத்தை நிவிருத்தி செய்ய பரமேச்வரனே தகுதியுள்ளவர் என்பது "ருத்ர" என்ற சொல்லிலிருந்து கிடைக்கின்றது. **रुतं संसार दुःखं द्रावयतीति रुद्रः** **ருதம் ஸம்ஸார து³:க²ம் த்³ராவயதீதி ருத்³ர:** ஸம்ஸாரதுக்க நிவிருத்தி ஸ்ரீ பரமேச்வர ஞானத்தால்தான் ஏற்படும் என்று ச்வேதாச் வதர உபனிஷத்தில் கூறப்பட்டிருக்கிறது.

(எப்பொழுது மனிதர்கள் ஆகாயத்தை தோலைப் போல் சுற்றுவார்களோ ஆப்பொழுதுதான் சிவனை அறியாமல் ஸம்ஸார நிவிருத்தி ஏற்படும். ஆகாயத்தை எப்படி ஒருபொழுதும் சுற்றமுடியாதோ, அவ்விதமே சிவனை அறியாமல் ஸம்ஸார துக்க நிவிருத்தியும் ஒருபொழுதும் ஏற்படாது) (ச்வேதாச்வதரம்)

பரமேச்வரனுக்கு இவ்விதம் ஸம்ஸாரதுக்கத்தை நிவிருத்தி செய்யும் பெருமை உமையுடன் கூடியிருப்பதால்தான் ஏற்படுகின்றது என்பதை நிரூபிக்கா **सोमाय ஸோமாய** என்ற விசேஷணம் கொடுக்கப்பட்டிருக்கிறது. "உமா" என்ற சொல்லில் பிரணவத்தின் எழுத்துக்கள் மாறுபட்டிருக்கின்றன. ஆக பிரணவத்தின் பொருளாகிய பராசக்தியே "உமா" என்ற சொல்லின் பொருளாகும். "பராசக்தி" என்றும் "சிச்சக்தி" என்றும் வழங்கப்படும், ஸ்ரீ பரமேச்வர சக்தியே ப்ருஹ்மவித்யைக்கு அதிஷ்டான தேவதையாகும். ஆதலால் அத்தகைய சக்தியுடன் கூடிய பரமேச்வரன் ஆத்மஞானத்தை அளித்து ஸம்ஸார துக்கத்தை நிவிருத்தி செய்கின்றார் என்று ஸித்திக்கின்றது. உமானுக்கிரஹத்தால்தான் மஹரிஷிகளுக்கு ஆத்மஞானம் ஏற்பட்டது என்று

### ते ध्यानयोगानुमता अपश्यम्. देवात्मशक्तिं स्वगुणैर्निगूढाम्

**தே த்⁴யானயோகா³னுமதா அபஶ்யம்**
**தே³வாத்மஶக்திம் ஸ்வகு³ணைர்னிகூ³டா⁴ம்**

முதலிய ச்வேதாச்வதர உபனிஷத் வாக்கங்களிலிருத்து தெரியவருகிறது. தலவகார உபனிஷத், சைவபுராணம், கூர்மபுராணம் முதலியவற்றிலும் இதே விஷயம் விரிவாகக் கூறப்பட்டிருக்கிற்து. ஆதலால் தான்

**उमस्तिहायम् परमेश्वरम् प्रपुम् त्रिलोचनम् नीलकण्टम् प्रशान्तम्**
**त्वाल्पा मुऩीर् मच्चति पूतयोऩिम्**
**साम स्व साक्षित्वमसः परस्त्मत् ||**

**உமஸ்திஹாயம் பரமேஶ்வரம் ப்ரபு⁴ம் த்ரிலோசனம் நீலகண்டம் ப்ரஶாந்தம்**
**த்⁴வால்பா⁴ முனீர் மச்²ச³தி பூ⁴தயோனிம்**
**ஸாம ஸ்வ ஸாக்ஷித்வமஸ: பரஸ்த்மத் ||**

என்ற கைவல்யோபனிஷத் வாக்கியத்திலும்,

**पार्वती परमा देवी ब्रह्मविद्याप्रदायिनी ।**
**तस्मात्सह तथा शक्त्या हृदि पश्यन्ति ये शिवम् ।**
**तेषां शाश्वतिकी सिद्धितरेषामिति श्रुतिः ।**

**பார்வதீ பரமா தே³வீ ப்³ரஹ்மவித்³யாப்ரதா³யினீ ।**
**தஸ்மாத்ஸஹ ததா² ஶக்த்யா ஹ்ரு'தி³ பஶ்யந்தி யே ஶிவம் ।**
**தேஷாம் ஶாஶ்வதிகீ ஸித்³தி⁴தரேஷாமிதி ஶ்ருதி: ॥**

முதலிய புராணங்களிலும் உமையுடன் கூடி இருத்தலால்தான் பரமேச்வரன் மோக்ஷத்தை அளிப்பவராக ஆகின்ருர் எனக் கூறப்பட்டிருக்கிறது. **(1)**

**नमस्ताम्राय चारुणाय च । २**

**நமஸ்தாம்ராய சாருணய ச । 2**

| | | |
|---|---|---|
| **தாம்ராய ச** | - | உதய காலத்தில் மிகவும் சிவந்த வர்ணத்தையுடைய சூரியரூபமாக இருப்பவர். |
| **அருணய ச** | - | சற்றுநேரம் சென்றபின் கொஞ்சம் சிவப்பாக இருக்கும் சூரியனுக இருப்பவர். |

உலகில் பலகாலம் பல நியமங்களுடன் உபாஸித்தபின் தேவதை, உபாஸகன் முன்தோன்றும். ஆனல் ஆதித்யனேவெனில் பிரதிதினம் பிரஜைகளுக்கெதிரில் தோன்றி வேண்டிய வரன்களையளிக்கவும் காத்துக்கொண்டிருக்கிறான். அப்படிப் பட்ட ஆதித்யனை ஸ்ரீ பரமேச்வரன் எனத் த்யானம்செய்து வணங்கினல் போதும். ஸமஸ்த சிரேயஸ்ஸுகளையும் அடைந்துவிடலாம். **उद्यन्तमस्तं यन्तमादित्य मभिध्यायन्** **உத்³யந்தமஸ்தம் யந்தமாதி³த்ய மபி⁴த்⁴யாயன் என்ற** ச்ருதி உதய காலத்திலும் அஸ்தமன காலத்திலும் ஆதித்யனை ப்ருஹ்மமாகத் த்யானம் செய்

தால் அபீஷ்டங்களையெல்லாம் அடைகின்றனர் என்று கூறுகிறது. ஆனால் மிகக்கருணையுடன் கூடிய இந்த ருத்ரோபனிஷத் அக்காலத்தில் அவ்வாறு த்யானம் செய்யத் தவறிவிட்டாலும், முடியாதபோனாலும், உதய காலத்திற்குப்பின் சூரியன் சற்று சிவந்த வர்ணமாக இருக்கையிலும் சூரியனை ப்ருஹ்மமாக த்யானம் செய்து சிரேயஸ்ஸுகளைப் பெறலாம் எனக்கூறுகிறது.

ஆதித்யனாகத் தோற்றமளித்து அனைவருக்கும் மிக சுலபமாக ஸகல சிரேயஸ் ஸையும் அளிக்கின்றபடியால் ஸ்ரீபரமேச்வரனே உபாஸிக்கத்தகுந்தவர் என்று இம் மந்த்ரத்தின் கருத்து. **(2)**

## नमश्शङ्गाय च पशुपतये च । ३

**நமஶ்ஶங்கா³ய ச பஶுபதயே ச** | 3

**ஶங்கா³ய ச** - ப்ரஜைகளுக்கு ஸுகத்தையடைவிக்கின்றவர்,
**பஶுபதயே ச** - ப்ருஹ்மா முதலிய ஸமஸ்த பிரஜைகளுக்கும் இரக்ஷகர்.

இரக்ஷிக்கப்படுகின்றவர்களின் ஸுகம் இரக்ஷகரின் அதீனமாக இருக்கின்ற படியால், **शङ्गः ஶங்க³ः** என்பதற்கு, **पशुपतिः பஶுபதிः** என்பது காரணத்தைக் கூறுகிறது.

அனைவருக்கும் ஸுகத்தை அளிக்கின்றபடியால் பரமேச்வரனே உபாஸிக்கத் தகுந்தவர் என்பது இதன் கருத்து. **(3)**

## नम उग्राय च भीमाय च । ४

**நம உக்³ராய ச பீ⁴மாய ச** | 4

**உக்³ராய ச** - அனைவரையும்விடச் சிறந்தவராயும்,
**பீ⁴மாய ச** - பயத்தை அளிக்கின்றவராயும்.

"உக்ர" (சிறந்தவர்) என்றுமட்டும் கூறி யாரை விட என்று கூறாததால் அனை வரையும்விடச் சிறந்தவர், எனக் கிடைக்கின்றது. **भीषास्माद्वातः पवते பீ⁴ஷாஸ்மாத்³வாதः பவதே** முதலிய ச்ருதிகளிலிருந்து மஹான்களான இந்திரன் அக்னி முதலியவர்கள்கூட ஸ்ரீ பரமேச்வரனுக்கு பயந்து அவரவர்கள் காரியத்தை ஒழுங்காகச் செய்கின்றபடியால் பரமேச்வரன் அனைவரையும் விடச் சிறந்தவர் என்று சித்திக்கின்றது.

அனைவரையும்விடச் சிறந்தவராதலால் ஸ்ரீபரமேச்வரனே அனைவராலும் உபாஸிக்கத்தகுந்தவர் என இந்த மந்த்ரத்தின் தாத்பர்யம்.

"உக்ர" என்பதற்கு விரோதிகளிடம் கடுமையாயிருப்பவர் என்றும் பொருள் கூறப்பட்டுள்ளது.

**नमो अग्रेवधाय च दूरेवधाय च । ५**

**நமோ அக்[3]ரேவதா[4]ய ச தூ[3]ரேவதா[4]ய ச | 5**

| | | |
|---|---|---|
| **அக்[3]ரேவதா[4]ய ச** | - | போர்க்களத்தில் தம் பக்தர்களுக்கெதிரில் நின்று எதிரிகளைக் கொல்லுகின்றவர். |
| **தூ[3]ரேவதா[4]ய ச** | - | வெகுதூரத்தில் இருக்கும் பக்தவிரோதிகளின் பலம் பராக்ரமம் முதலியவற்றை போர் ஆரம்பத் திற்கு முன்பே அழிக்கின்றவர். |

"பக்தர்களுக்கெதிரில் நின்று போர் புரிகின்றார்" என்பது மஹாபாரதத்தில் துரோணபாவத்தில் அர்ஜுனனால் அடியிற்கண்டவாறு வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

**संग्रामे शात्रवेनीकं शरौघैर्विमृदन्नहम् ।**
**अग्रतो लक्षये यान्तं पुरुषं पावकप्रभम् ॥**

**ज्वलन्तं शूलमुद्यम्य या दिश प्रतिपद्यते ।**
**तस्यां दिशि विशीर्यन्त शत्रवो मे महामंते ॥**

**ततो धान सर्वान पृष्ठतोनुवहाम्यहम् ।**
**तेन भग्नांमरिंगणान् मान्मन्यते जनः ॥**

**ஸங்க்[3]ராமே ஶாத்ரவேனீகம் ஶரௌகை[4]ர்விம்ருத[3]ன்னஹம் |**
**அக்[3]ரதோ லக்ஷயே யாந்தம் புருஷம் பாவகப்ரப[4]ம் ||**

**ஜ்வலந்தம் ஶூலமுத்[3]யம்ய யா தி[3]ஶ ப்ரதிபத்[3]யதே |**
**தஸ்யாம் தி[3]ஶி விஶீர்யந்த ஶத்ரவோ மே மஹாமந்தே ||**

**ததோ தா[4]ன ஸர்வான ப்ருஷ்ட[2]தோனுவஹாம்யஹம் |**
**தேன ப[4]க்[3]னாம்மரிங்க[3]ணான் மான்மன்யதே ஜனः ||**

**(இதன் பொருள்)** போர்க்களத்தில் எதிரிகளை அம்புகளாலடித்து வீழ்த்திக் கொண்டிருக்கையில் எதிரில் ஒரு புருஷனைப் பார்க்கின்றேன். கையில் ஒரு சூலத் துடன் அக்னிபோல் அவன் ஜ்வலித்துக் கொண்டிருக்கின்றான். அவன் எந்த எந்த திசையில் சென்றானோ, அந்த திசையில் உள்ள என் விரோதிகள் அனைவரும் அவனாலேயே எரிக்கப்பட்டு மாண்டு விடுகின்றனர். அவன் பின்னாலேயே சென்று

அவனுல் அடிக்கப்பட்டவர்களேயே நானும் தொடர்ந்து அடிக்கின்றேன். ஜனங்கள் இந்த உண்மையை அறியாமல் விரோதிகள் என்னுலேயே அடிக்கப்பட்டு வீழ்த்தப் படுகின்றனர் எனக் கருதுகின்றனர்,

போர் ஆரம்பத்திற்கு முன்பே தூரத்தில் இருக்கும் விரோதிகளின் பலம் முதலியவற்றை அபஹரித்து விரோதிகளே வீழ்த்திவிடுகின்முர் என்பதும் சாந்தி பர்வத்தில் மோக்ஷதர்மப்ரகரணத்தில் ஸ்ரீகிருஷ்ணனுல் அர்ஜுனனுக்கு எடுத்துரை க்கப்பட்டிருக்கிறது.

**यस्तु तेह्यक्रतो याति युद्धे संप्रत्युपस्थिते।**
**तं विद्धि रुद्रं कौन्तेय** என்று தொடங்கி
**निहतान् तेन वै पूर्व हृतवानसि वै रिपून्।**
**अप्रमेयप्रभाव तं देवदेवमुमापतिम्।**
**भजस्व प्रयतो नित्यं विश्वेशं हरमव्ययम्॥**

**யஸ்து தேஹ்யக்[3]ரதோ யாதி யுத்[3]தே[4] ஸம்ப்ரத்யுபஸ்தி[2]தே ।**
**தம் வித்[3]தி[4] ருத்[3]ரம் கௌந்தேய** என்று தொடங்கி
**நிஹதான் தேன வை பூர்வ ஹ்ருதவானஸி வை ரிபூன் ।**
**அப்ரமேயப்ரபா[4]வ தம் தே[3]வதே[3]வமுமாபதிம் ।**
**ப[4]ஜஸ்வ ப்ரயதோ நித்யம் விஶ்வேஶம் ஹரமவ்யயம் ॥**

எனக் கூறுகின்முர்.

**(இதன் பொருள்)** ஏ அர்ஜுனு! போர் நடக்குங்காலத்தில் உனக்கு முன் ஒருவர் சென்முரே, அவர் தான் "ருத்ரன்" என்று அறிந்துகொள். முதலில் அவரால் அடித்து அழிக்கப்பட்ட விரோதிகளேயே பிறகு நீ அடித்துக்கொன்முய். ஆதலால் அப்படிப்பட்ட அளவு கடந்த மஹிமைகளேயுடைய தேவதேவனுன உமாபதியை எப்பொழுதும் சுத்தனுக இருந்து கொண்டு போற்றிவா.

தாமும் பரமேச்வரனும் ஒன்று என்ற அபிப்பிராயத்தால் கீதாசார்யன் கீதையில் (என்னுலேயே இந்த விரோதிகள் கொல்லப்பட்டனர்) எனக்கூறுகிறார். ஆதலால் மோக்ஷதர்மத்தில் கூறியதற்கும் கீதையில் கூறியதற்கும் முரண்பாடி ல்லெ.

ஜயத்திற்கு பரமேச்வரனே காரணமாதலால் ஜயத்தை விரும்பும் அனேவரா லும் ஸ்ரீபரமேச்வரனே உபாஸிக்கப்படவேண்டும் என்பது இம்மந்த்ரத்தின் கருத்து. (5)

**नमो हन्त्रे च हनीयसे च। ६**

**நமோ ஹந்த்ரே ச ஹனீயஸே ச । 6**

**ஹந்த்ரே ச** - ("நானே சிறந்தவன்" என்ற கர்வத்தால் தம்மை அலக்ஷியம் செய்கின்றவர்களை) ஹிம்ஸிக்கின்றவர்.

**ஹனீயஸே ச** - (த்வேஷத்தால் நிந்தைகளையும் செய்து அலக்ஷியம் செய்கின்றவர்களை) மிகவும் ஹிம்ஸிக்கின்றவர்.

பரமேச்வரன் **ஹந்தா** என்பதற்கு இராவணனை உதாரணமாகக் கூறலாம். புஜபலத்திலும் ஐச்வர்யத்திலும் நானே சிறந்தவன் என்ற கர்வத்தால் பரமேச்வரனை இலக்ஷியம் செய்யாமல், அவருடைய வாஸஸ்தலமாகிய கைலாஸமலையைப் பெயர்ப்பதற்காக கைகளை அதன் அடியில் கொடுத்தான். அதை அறிந்த பரமேச்வரன் கால் கட்டைவிரலால் கொஞ்சம் அழுத்தினார். அதனால் அவன் கைகள் நசுங்குண்டு வெகுகாலம் வரை வேதனை தாங்காமல் வருந்தினான். கடைசியில் அவனிடம் தயை புரிந்து அவரே அவனை விடுவித்தார்.

பரமேச்வரன் **ஹநீயாந்** என்பதற்கு தக்ஷனை உதாரணமாகக் கூறலாம். அவன் பரமேச்வரனிடம் த்வேஷங்கொண்டு அவரைப் பலவாறாக நிந்தித்து அவருக்கு ஹவிர்பாகத்தை அளிக்காமலே யாகத்தைச் செய்தான். அப்பொழுது வீரபத்ரன் தோன்றி தக்ஷன் தலையை வெட்டி வீழ்த்தினார். யாகசாலை எரிக்கப்பட்டது. அக்னி குண்டங்களை அசுத்தியாக்கி அக்னிகளும் அணைக்கப்பட்டன. யூபங்கள் பெயர்க்கப் பட்டு அவற்றாலேயே அங்கு வந்திருந்த தேவர்கள் அடிக்கப்பட்டனர். ரித்விக்குகளுக்கு சாட்டையடி. ப்ருகுவின் மீசையும், பூஷாவின் பற்களும், பகனின் கண்களும் பிடுங்கப்பட்டன. அந்தோ என்ன கஷ்டம்! அச்சமயத்தில் அங்கு அவர்களை இரக்ஷிக்கக்கூடியவர் யாருமில்லை.

ஆதலால் பரமேச்வர நிந்தையும் அனாதரவும், பல துன்பங்களை உண்டு பண்ணும் எனத்தெரியவருகின்றபடியால் அனைவரும் பரமேச்வரனை உபாஸிக்க வேண்டும் என்பது இம்மந்த்ரத்தின் கருத்து. **(6)**

### नमो वृक्षेभ्यो हरिकेशेभ्यः । ७

**நமோ வ்ருக்ஷேப்⁴யோ ஹரிகேஶேப்⁴ய:** | 7

**ஹரிகேஶேப்⁴ய:** - பச்சை நிறமான (கேசங்கள் போன்ற) இலைகளையுடைய,

**வ்ருக்ஷேப்⁴யோ** - மரங்கள் ஸ்வரூபமாக இருப்பவரும்.

கேசங்கள் கணக்கிட முடியாதவைகளாகவும், தலையை இரக்ஷிப்பவைகளாகவும் இருப்பதுபோல் இலைகளும் ஏராளமாகவும் மரத்தை இரக்ஷிக்கின்றவைகளாகவும் இருக்கின்றபடியால் இலைகளே இங்கு கேசங்கள் எனக் கூறப்பட்டிருக்கின்றன.

பரமேச்வரன், பலாசம், வில்வம், அரசு முதலிய மரங்களாகவிருந்து இந்த உலகத்தில் எல்லா யாகங்களையும் நிறைவேற்றிவைக்கின்றபடியாலும், மேல் உலகத்தில் கல்பக விருக்ஷமாகவிருந்து ஸகல போகங்களையும் அளிக்கின்ற படியாலும், அவற்றை விரும்பும் அனைவராலும் ஸ்ரீ பரமேச்வரன் உபாஸிக்கப்பட வேண்டும் என்பது இந்த மந்த்ரத்தின் தாத்பர்யம்.

## नमस्तराय | ८

**நமஸ்தராய | 8**

**தாராய ச** - ப்ரணவஸ்வரூபமான.

ப்ரணவத்தின் பொருள் ஸ்ரீபரமேச்வரன் என்று வேதத்திலும் சிவபுராணங்களிலும் கூறப்பட்டிருக்கின்றது. சொல்லுக்கும் பொருளுக்கும் அதாவது வாசகத்திற்கும் வாச்யத்திற்கும் பேதமில்லை என்ற அபிப்ராயத்தில் ஸ்ரீ ருத்ரனே ப்ரணவஸ்வரூபம் என்று கூறலாம்.

ஜீவர்களை ஸம்ஸார ஸமுத்ரத்திலிருந்து கரையேற்றி, முக்தியை அடைவிக்கின்றார் என்றும், **तार: தார:** என்பதற்கு பொருள் கூறலாம்.

மோக்ஷத்திற்காகவும் ஸ்ரீபரமேச்வரனே உபாஸிக்கப்பட வேண்டுமென்று இம்மந்த்ரத்தின் கருத்து.

## नमश्शंभवेच मयोभवेच । ९

**நமஸ் ஶம்ப⁴வேச மயோப⁴வேச | 9**

**ஶம்ப⁴வேச** - ஐஹிக (இவ்வுலகில் ஏற்படும்) ஸுகத்திற்குக் காரணமாயும்,

**மயோப⁴வேச** - ஆமுஷ்மிக (மேல் உலகத்தில் ஏற்படக்கூடிய) ஸுகத்திற்குக் காரணமாயும்.

இவ்வுலகிலும் மேல் உலகிலும் ஏற்படும் ஸமஸ்த ஸுகத்திற்கும் ஸ்ரீ பரமேச்வரனே காரணமானதால் அதை விரும்பும் அனைவராலும் அவரே உபாஸிக்கப்பட வேண்டுமென்பது இதன் கருத்து.

## नमशङ्कराय च मयस्कराय च | १०

**நமஶங்கராய ச மயஸ்கராய ச | 10**

**ஶங்கராய ச** - (தாய் தந்தை முதலியவர்கள் ஸ்வரூபமாக இருந்து கொண்டு) ஐஹிக ஸுகத்தை அளிக்கின்றவர்.

| | | |
|---|---|---|
| **மயஸ்கராய ச** | - | ஆசார்யன், சாஸ்த்ரம் முதலிய ஸ்வரூபமாக இருந்து கொண்டு, மேல் உலகஸுகம், மோக்ஷ ஸுகம், இவற்றை அளிக்கின்றவர். |

முன் மந்த்ரத்திற்கு, தானே ஸுகத்தை அளிக்கின்றவர் என்றும், இந்த மந்த்ரத்திற்கு பிறர் மூலமாக ஸுகத்தை அளிக்கின்றவர் என்றும், பொருள் கூற வேண்டும். ஆதலால் "புநருக்தி* என்ற குற்றமில்லை. **(10)**

## नमश्शिवाय च शितवराय च । ११

**நமஶ்ஶிவாய ச ஶிதவராய ச** | 11

| | | |
|---|---|---|
| **ஶிவாய ச** | - | ஸகல சிரேயஸ்ஸையும் அளிக்கின்றவராயும், |
| ஶிதவராய ச | - | சிரேயஸஸை அளிப்பவர்களுள் மிகச் சிறந்தவராயும், |

**शिव एकोध्येयश्शिवंकरः - ஶிவ ஏகோத்⁴யேயஶ்ஶிவங்கரः** என்ற ச்ருதியில் சிவ சப்த வியாக்யானமாக "சிவங்கர:" என்றசொல் ஏற்பட்டிருக்கிறது. ஆதலால் இங்குள்ள "சிவ" என்ற. சொல்லிற்கும் சிரேயஸ்ஸை அளிக்கின்றவர் என்றே பொருள் கூறப்பட்டது. புராணங்களில் கூறப்பட்ட வேறுவிதமான அர்த்தங்கள் எல்லாம் வேதோக்தமான "சிவங்கர" என்ற அர்த்தத்திலேயே முடிவடையும். **पावको अस्मभ्यं शिवो भव பாவகோ அஸ்மப்⁴யம் ஶிவோ ப⁴வ** என்று வேதத்தில் அக்னியும், **पन्थानस्सन्तु ते शिवाः பந்தா²னஸ்ஸந்து தே ஶிவாः** என்று உலகத்தில் வழியும்கூட "சிவ" என்று கூறப்பட்டிருக்கின்றபடியால் **शिवतरः ஶிவதரः** என்று இங்கு பரமேச்வரனுக்கு விசேஷணம் கொடுக்கப்பட்டிருக்கிறது. உலகத்திலோ வேத த்திலோ "சிவ:" என்று எவையெல்லாம் கூறப்பட்டிருக்கின்றனவோ அவையெல்லா வற்றையும்விட சிரேயஸ்ஸை அளிப்பதில் மிகவும் சிறந்தவர் ஸ்ரீ பரமேச்வரன், அவற்றிற்கும் சிரேயுஸ்ஸை அளிக்கவல்லவர் என்று இதன் பொருள்.

ஆதலால் சிரேயஸ்ஸை விரும்புகின்றவர்கள் ஸ்ரீபரமேச்வரனையே உபாஸிக்க வேண்டும் என இம்மந்த்ரத்தின் தாத்பர்யம். இவ்விஷயம் உபனிஷத் தில்

## शिव एको ध्येयः शिवङ्करः सर्वमन्यत्परित्यज्य

**ஶிவ ஏகோ த்⁴யேயः ஶிவங்கரः ஸர்வமன்யத்பரித்யஜ்ய**

என ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருக்கிறது.

இந்த மந்த்ரம், வேதமாகிற தாய் அணிந்து கொண்டிருக்கும் ருத்ரோபனிஷத் தாகிற முத்துமாலையின் நடுவில் விளங்கும் நாயகமணிபோன்றதாகும்.

**विद्यासु श्रुतिरुत्कृष्टा रुद्रैकादशिनी श्रुतौ।**
**तत्र पञ्चाक्षरी तस्यां शिव इत्यक्षरद्वयम्॥**

**வித்³யாஸு ஶ்ருதிருத்க்ருஷ்டா ருதை³காத³ஶினீ ஶ்ருதௌ |**
**தத்ர பஞ்சாக்ஷரீ தஸ்யாம் ஶிவ இத்யக்ஷரத்³வயம் ||**

எனக்கூறப்பட்டிருக்கிறது.

(இதன் பொருள்) வித்யைகளுள் வேதம் சிறந்தது. அதில் பதினோறு அனுவாகங்கள் கொண்ட **"ஸ்ரீருத்ரம்"** மிகச் சிறந்தது. அதில் **நம: சிவாய** என்ற பஞ்சாக்ஷரம் மிகச் சிறந்தது. அதிலும் **சிவ** என்ற இரு அக்ஷரங்கள் மிகவும் சிறந்தன.

ஆகமங்களில் **சிவ** என்ற சொல் **ஜீவரத்னம்** என்று வழங்கப்படுகிறது. இந்த நாமாவின் பெருமைகளை சிவபுராணங்கள் மிக விரிவாகக் கூறியிருக்கின்றன.

## नमस्तीर्थ्याय च कूल्याय च। १२

**நமஸ்தீர்த்²யாய ச கூல்யாய ச | 12**

| | | |
|---|---|---|
| **தீர்த்²யாய ச** | - | கங்கை முதலிய புனிதமான தீர்த்தங்களில் இருப்பவர், |
| **கூல்யாய ச** | - | கரையில் இருப்பவர். |

இதுவரை ஸ்ரீபரமேச்வரன் அனைவராலும் உபாஸிக்கத் தகுந்தவர் என்பதற்குரிய பல காரணகளைக்கூறி வணங்கிவிட்டு, இனி இந்த அனுவாகத்தின் முடிவு வரை "ஸர்வாந்தர்யாமி" என்பதை விளக்கிக்கூறி வணங்குகின்றார். **(12)**

## नमः पार्याय चावार्याय च। १३

**நம: பார்யாய சாவார்யாய ச | 13**

| | | |
|---|---|---|
| **பார்யாய ச** | - | நதியின் அக்கரையில் இருப்பவர். |
| **அவார்யாய ச** | - | நதியின் இக்கரையில் இருப்பவர். |

முமுக்ஷுக்களால் த்யானம் செய்யத் தகுந்தவராய் ஸம்ஸார ஸமுத்ரத்திற்கு அக்கரையில் இருக்கின்றார் என்றும், காம்யபலன்களை அளிப்பவராய் ஸ்ம்ஸார ஸமுத்ரத்தின் மத்தியிலேயே இருக்கின்றார் என்றும் இவ்விரு சொற்களுக்கும் வேறு பொருளும் கூறப்பட்டிருக்கிறது. **(13)**

## नमः प्रतरणाय चोत्तरणाय च। १४

**நம: ப்ரதரணாய சோத்தரணாய ச | 14**

| | | |
|---|---|---|
| **ப்ரதரணாய ச** | - | சிறந்த மந்த்ர ஜபம் முதலிய வடிவமாக இருந்து கொண்டு, பாபத்தைக் கடந்துசெல்லக்காரணமாக இருப்பவர், |
| உத்தரணாய ச | - | சிறந்த ஞானஸ்வரூபமாக இருந்துகொண்டு ஸம் ஸாரஸாகரத்தையே தாண்டுவதற்கு ஸாதனமாக இருப்பவர். **(14)** |

### नम आतार्याय चालाद्याय च। १५

**நம ஆதார்யாய சாலாத்[3]யாய ச** | 15

| | | |
|---|---|---|
| **ஆதார்யாய ச** | - | திரும்பிவருமிடத்தில் இருப்பவர், |
| **அலாத்[3]யாய ச** | - | பூர்ணமாக கர்மபலத்தை அனுபவித்துவரும் ஜீவனுக்கு ப்ரேரகனுக இருப்பவர். |

**आतार्याय च** - **ஆதார்யாய ச** என்பதற்கு தத்வஞானத்தைப் பெறுமல், காம்ய கர்மாக்களையே அனுஷ்டித்து ஸம்ஸாரஸமுத்ரத்திற்கே திரும்பத் திரும்ப வந்து கொண்டிருக்கும் ஜீவர்களுக்கும் அருள்புரிகின்றவர் என்றும் அர்த்தம் கூறப்பட்டிருக்கிறது.

### अलं पूर्ण यथा भवति तथा कर्मफलमत्तीति - अलौंदः –
### जीवः तत्र भवः - अलाद्यः

**அலம் பூர்ண யதா[2] ப[4]வதி ததா[2] கர்மப[2]லமத்தீதி - அலௌந்த[3]: -**
**ஜீவ: தத்ர ப[4]வ: - அலாத்[3]ய:**

என்று இந்த சொல் விவரிக்கப்பட்டிருக்கிறது. **(15)**

### नमः शष्प्याय च फेन्याय च। १६

**நம: ஶஷ்ப்யாய ச பே[2]ந்யாய ச** | 16

| | | |
|---|---|---|
| **ஶஷ்ப்யாய ச** | - | இளம்புற்களில் இருப்பவர், |
| **பே[2]ந்யாய ச** | - | நுறைகளில் இருப்பவர். **(16)** |

### नमः सिकत्याय च प्रवाह्याय च। १७

**நம: ஸிகத்யாய ச ப்ரவாஹ்யாய ச** | 17

| | | |
|---|---|---|
| **ஸிகத்யாய ச** | - | மணல்களில் இருப்பவரும், |
| **ப்ரவாஹ்யாய ச** | - | ப்ரவாஹத்தில் இருப்பவருமான ருத்ரனுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். **(17)** |

**எட்டாவது அனுவாகம் முற்றிற்று.**

## ஒன்பதாவது அனுவாகம்

### नम इरिण्याय च प्रपथ्याय च । १

**நம இரிண்யாய ச ப்ரபத்²யாய ச | 1**

| | | |
|---|---|---|
| **இரிண்யாய ச** | - | ஊஷரபூமியில் இருப்பவரும், |
| **ப்ரபத்²யாய ச** | - | பலர் நடந்து தேய்ந்தமார்க்கத்தில் இருப்பவருமான ஈச்வரனுக்கு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

இந்த ஒன்பதாவது அனுவாகத்திலும் பரமேச்வரன் ஸர்வாந்தர்யாமி (எல்லா இடங்களிலும் உள்ளவர்) என்பதாகக்கூறப்பட்டு வணங்கப்படுகின்றார். **(1)**

### नमः किँशिलाय च क्षयणाय च । २

**நம: கிஹும்ஶிலாய ச க்ஷயணாய ச | 2**

| | | |
|---|---|---|
| **கிஹும்ஶிலாய ச** | - | சிறிய கற்களையுடைய பிரதேசத்திலிருப்பவர், அல்லது கற்களா? அல்லது ஸ்படிகம் முதலிய வைகளா? என்று சந்தேகம் ஏற்படும் பிரதேசத்தில் இருப்பவர். |
| **க்ஷயணாய ச** | - | வாஸத்திற்கு உசிதமான ப்ரதேசத்தில் இருப்பவர். **(2)** |

### नमः कपर्दिने च पुलस्तये च । ३

**நம: கபர்தி³னே ச புலஸ்தயே ச | 3**

| | | |
|---|---|---|
| **கபர்தி³னே ச** | - | ஜடைகளை தரித்துக்கொண்டிருப்பவரும், |
| **புலஸ்தயே ச** | - | பக்தர்களுக்கெதிரில் நிற்கின்றவரும் அல்லது அழகிய கேசங்களை தரித்துக் கொண்டிருப்பவரும். |

பக்தர்களுக்கு முன் தோன்றுங்காலத்தில் சில சமயம் ஜடைகளுடனும், சில சமயம் கூந்தல்களுடனும் ஈச்வரன் காக்ஷியளிக்கின்றார் என்பதை இந்த இரு சொற்களும் குறிப்பிடுகின்றன. **(3)**

### नमो गोष्ठ्याय च गृह्याय च। ४

**நமோ கோ³ஷ்ட்²யாய ச க்³ருஹ்யாய ச | 4**

| | | |
|---|---|---|
| **கோ³ஷ்ட்²யாய ச** | - | பசுக்கள் கட்டும் கொட்டிலில் இருப்பவரும், |
| **க்³ருஹ்யாய ச** | - | வீட்டில் இருப்பவரும். **(4)** |

**नमस्तल्प्याय च गेह्याय च । ५**

**நமஸ்தல்ப்யாய ச கே$^{3}$ஹ்யாய ச | 5**

**தல்ப்யாய ச** - கட்டில் முதலியவற்றில் இருப்பவரும்,
**கே$^{3}$ஹ்யாய ச** - மாடியில் இருப்பவரும். **(5)**

**नमः काट्याय च गह्वरेष्ठाय च । ६**

**நம: காட்யாய ச க$^{3}$ஹ்வரேஷ்டா$^{2}$ய ச | 6**

காட்யாய ச - முள், கொடி, செடி முதலியவை நிரம்பி இருப்பதால் பிரவேசிக்கமுடியாத இடத்திலிருப்பவரும்,
**க$^{3}$ஹ்வரேஷ்டா$^{2}$ய ச** - மலையின் குகை முதலிய வற்றிலிருப்பவரும். **(6)**

**नमो हृदय्याय च निवेष्प्याय च | ७**

**நமோ ஹ்ருத$^{3}$ய்யாய ச நிவேஷ்ப்யாய ச | 7**

**ஹ்ருத$^{3}$ய்யாய ச** - ஆழமான மடுக்களில் இருப்பவரும்,
**நிவேஷ்ப்யாய ச** - பனிநீரில் இருப்பவரும். **(7)**

**नमः पाँसव्याय च रजस्याय च । १०**

**நம: பாஹும்ஸவ்யாய ச ரஜஸ்யாய ச | 10**

**பாஹும்ஸவ்யாய ச** - கண்ணுக்குப்புலப்படாத பரமாணுபோன்ற தூளிகளில் இருப்பவரும்,
**ரஜஸ்யாய ச** - கண்ணால் பார்க்கக்கூடிய பெரிய தூளிகளில் இருப்பவரும். **(8)**

**नमः शुष्क्याय च हरित्याय च । ९**

**நம: ஶுஷ்க்யாய ச ஹரித்யாய ச | 9**

**ஶுஷ்க்யாய ச** - காய்ந்த மரங்களில் இருப்பவரும்,
**ஹரித்யாய ச** - ஈரமான பசுமையுள்ள மரங்களிலிருப்பவரும்.

**नमो लोप्याय चोलप्याय च । १०**

**நமோ லோப்யாய சோலப்யாய ச | 10**

**லோப்யாய ச** - புல் முதலியவை முளைக்காத கெட்டியான தரையில் இருப்பவரும்,
**சோலப்யாய ச** - மிக அற்பமான புற்களிலிருப்பவரும். **(10)**

## नम ऊर्व्याय च सूर्म्याय च ॥ ११

**நம ஊர்வ்யாய ச ஸூர்ம்யாய ச** || 11

ஊர்வ்யாய ச - பூமியிலிருப்பவரும்,
ஸூர்ம்யாய ச - அழகிய அலைகளையுடைய நதிகளில் இருப்ப வரும். **(11)**

## नमः पर्ण्याय च पर्णशद्याय च ॥ १२

**நமः பர்ண்யாய ச பர்ணஶத்³யாய ச** || 12

**பர்ண்யாய ச** - இலைகளில் இருப்பவரும்,
**பர்ணஶத்³யாய ச** - உலர்ந்த இலைகளின் குவியல்களிலிருப்பவரும். **(12)**

## नमोऽपगुरमाणाय चाभिघ्नतेच । १३

**நமோ(அ)பகு³ரமாணாய சாபி⁴க்⁴னதேச** | 13

**அபகு³ரமாணாய ச** - (தண்டிக்கவேண்டிய பாபிகளை தண்டிப்பதற்காக) ஆயுதங்களை கையில் தூக்கிக் கொண்டு இருப்ப வரும்,
**அபி⁴க்⁴னதே ச** - அவர்களை அடிக்கின்றவராயும். **(13)**

## नम आक्खिदते च प्रक्खिदते च । १४

**நம ஆக்கி²த³தே ச ப்ரக்கி²த³தே ச** | 14

**ஆக்கி²த³தே ச** - சொற்ப துன்பத்தை உண்டுபண்ணுகின்றவரும்,
**ப்ரக்கி²த³தே ச** - மிகவும் துன்பத்தை உண்டுபண்ணுகின்றவருமான ருத்ரனுக்கு,
**நம:** - நமஸ்காரம். **(14)**

13, 14 இரு மந்த்ரங்களாலும் பாபிகளை சிக்ஷிக்கும் பகவானுடைய அம்சமான ருத்ரமூர்த்திகள் வணங்கப்படுகின்றனர். பாபிகளுடைய பாபத்திற் கேற்றவாறு சில ருத்ரமூர்த்திகள் கையில் ஆயுதங்களை மட்டும் தரித்துக்கொண்டு இருக்கின்றனர். சிலர் அடிக்கின்றனர். சிலர் அடித்து சொற்ப துன்பத்தையளிக்கின்றனர். சிலர் கடுமை யாகத் தாக்கி மிகவும் துன்பத்தை உண்டுபண்ணுகின்றனர். இந்த நான்கு விதமான ஸ்வரூபங்களும்.

## अपगुरमाणाय, अभिघ्नते, आक्खिदते, प्रक्खिदते

**அபகு³ரமாணாய, அபி⁴க்⁴னதே, ஆக்கி²த³தே, ப்ரக்கி²த³தே**

என்ற நான்கு சொற்களாலும் குறிப்பிடப்படுகின்றன.

"நமஸ்ஸோமாய" முதல் இதுவரை மொத்தம் 31 அவாந்தர மந்த்ரங்கள் கொண்ட ஓர் மஹா மந்த்ரத்திற்கு ரிஷியும் தேவதையும், ஸ்ரீருத்ரன். சந்தஸ் - அனுஷ்டுப், மூன்றாவது அனுவாகத்தில் கூறப்பட்ட முதலியவைகளே இங்கும் த்யானச்லோகங்களாகக் கொள்ளவேண்டும் என்று அபிநவசங்கரபாஷ்யத்தில் உரைக் கப்பட்டிருக்கிறது.

பட்டபாஸ்கரபாஷ்யத்தில் அடியிற்கண்ட த்யானச்லோகம் காணப்படுகிறது.

**पिनाकपाणि भूतेशमुद्यत्सूर्यायुतद्युतिम् ।**
**भूषितं भुजगैयेत्कण्ठेकालं कपर्दिनम् ॥**

**பிஞகபாணி பூ⁴தேஶமுத்³யத்ஸூர்யாயுதத்³யுதிம் ।**
**பூ⁴ஷிதம் பு⁴ஜகை³யேத்கண்டே²காலம் கபர்தி³னம் ॥**

**(இதன் பொருள்)** பதிஞயிரம் சூரியோதயத்திற்கொப்பான காந்தியையுடை யவரும், 'பிநாகம்' என்ற வில்ஸை கையில் ஏந்தியவரும், ஸர்ப்பங்களால் அலங்கரிக் கப்பட்டவரும், ஜடைகஸை தரித்துக்கொண்டிருப்பவரும், கழுத்தில் கரிய நிறங் கொ ண்டவரும், பூதங்களுக்கு ஈசனுமான பரமேச்வரஸை த்யானம் செய்ய வேண்டும்.

ஸாம்ராஜ்யம், ஐச்வர்யம், சிவபதம் முதலியவை இந்த மந்த்ர ஆவிருத்தி யால் சித்திக்கும் பயன்களாம். **(14)**

**नमोवः किरिकेभ्यो देवना हृदयेभ्यः । १५**

**நமோவः கிரிகேப்⁴யோ தே³வஞ ஹ்ருத³யேப்⁴யः । 15**

| | | |
|---|---|---|
| **தே³வஞ ஹ்ருத³யேப்⁴யः** | - | தேவர்களுடைய மனதிற்கு மட்டும் புலப் படக்கூடிய (நம்மால் அறியமுடியாத), |
| **கிரிகேப்⁴யோ** | - | தன் விருப்பப்படி பாபிகஸை ஹிம்ஸிக்கி ன்ற ருத்ரகணங்களின் பொருட்டு, |
| **நம:** | - | நமஸ்காரம். |

**(கருத்துரை)** இது முதல் ஐந்து மந்த்ரங்களால், மனிதர்கள் அறியமுடியாமல் மறைந்து நின்று துஷ்டர்கஸை நிக்ரஹம் செய்யும் ருத்ரகணங்கள் வணங்கப்படு கின்றனர். "தேவர்களுக்குமட்டும் புலப்படக்கூடிய" என்ற பொருள்கொண்ட **देवानां हृदयेभ्य தே³வாஞம் ஹ்ரு'த³யேப்⁴ய** என்ற இரு சொற்கஸையும் **विक्षीणकेभ्यः, विचिन्वत् केभ्यः விக்ஷீணகேப்⁴யः, விசின்வத் கேப்⁴யः** முதலிய மற்ற நான்கு மந்த் ரங்களிலும் சேர்த்துக் கொள்ளவேண்டும். ஏனென்றால் இந்த ஐந்து மந்த்ரங்களிலும்

கூறப்படும் ஐந்துவித ருத்ரகணங்களும் தேவர்களுக்குமட்டும் புலப்படக்கூடியவர்கள். மனிதர்களால் அறிய முடியாதவர்கள். **(15)**

**नमो विक्षीणकेभ्यः (देवानाँ हृदयेभ्यः) १६**

**நமோ விக்ஷீணகேப்⁴ய: (தே³வானுஹும் ஹ்ருத³யேப்⁴ய:) 16**

**விக்ஷீணகேப்⁴ய:** - பலவிதமாகத்துன்புறுத்துகின்ற (ருத்ரகணங்களின் பொருட்டு நமஸ்காரம்.) **(16)**

**नमो विचिन्वत्केभ्यो (देवानाँ हृदयेभ्यः) १७**

**நமோ விசின்வத்கேப்⁴யோ (தே³வானுஹும் ஹ்ருத³யேப்⁴ய:) 17**

**விசின்வத்கேப்⁴யோ** - (சிக்ஷிப்பதற்காக பாபிகளையும், அனுக்ரஹிப்பதற்காக புண்யசாலிகளையும் தேடிப் பிடிக்கும் (ருத்ர கணங்களுக்கு நமஸ்காரம்). **(17)**

**नम आनिर्हतेभ्यः (देवानाँ हृदयेभ्यः) १८**

**நம ஆநிர்ஹதேப்⁴ய: (தே³வனுஹும் ஹ்ருத³யேப்⁴ய:) 18**

**ஆநிர்ஹதேப்⁴ய:** - பாபிகளுடைய பாபத்திற்கேற்றவாறு நிச்சயமாக ஹிம்ஸையை உண்டுபண்ணும் (ருத்ரகணங்களின் பொருட்டு நமஸ்காரம்). **(18)**

**नम आमीवत्केभ्यः (देवानाँ हृदयेभ्यः) १९**

**நம ஆமீவத்கேப்⁴ய: (தே³வானுஹும் ஹ்ரு'த³யேப்⁴ய:) 19**

ஆமீவத்கேப்⁴ய: - பாபிகளை எங்கும் வளைத்துத் தாக்குவதன் பொருட்டு எங்கும் வ்யாபித்துக் கொண்டிருக்கும் (ருத்ரகணங்களின் பொருட்டு நமஸ்காரம்). **(19)**

**नमोवः किरिकेभ्यः நமோவ: கிரிகேப்⁴ய:** முதல் இதுவரை உள்ள ஐந்து அவாந்தர மந்த்ரங்கள் சேர்ந்த ஓர் மஹாமத்த்ரத்திற்கு ரிஷி - அக்னி : சந்தஸ் - த்ருஷ்டுப். தேவதை - ருத்ரன்.

**த்யானம்:**

**विश्वतः पाणिपाद तं विश्वतोक्षिशिरोमुखम् ।**
**ज्वलन्तं विश्वमावृत्य तेजोराशिं शिवं स्मरेत् ॥**

**விஶ்வத꞉ பாணிபாத³ தம் விஶ்வதோக்ஷிஶிரோமுக²ம் ।**
**ஜ்வலந்தம் விஶ்வமாவ்ருத்ய தேஜோராஶிம் ஶிவம் ஸ்மரேத் ॥**

**(இதன் பொருள்)** எல்லா இடங்களிலும், கைகளுடனும், கால்களுடனும், கண்களுடனும், தலைகளுடனும், முகங்களுடனும் கூடியவராயும், உலகம் முழுவதும் வியாபித்து ஜ்வலிக்கும் ஒளிமயமாயுமுள்ள சிவனை ஸ்மரிக்க வேண்டும்.

இந்த மந்த்ரத்தின் பலவித ப்ரயோகங்களால் உலகத்திற்கே அதிபதியாக இருத்தல், ஏராளமான ஸ்வர்ணலாபம், சிறந்தகவித்வம், உயர்ந்தபோகங்கள் சிவஸாக்ஷாத்காரம் முதலிய பலவித பயன்கள் ஸித்திக்குமெனக் கூறப்பட்டிருக்கிறது.

இந்த மந்த்ரங்களின் ப்ரயோகம், புரச்சரணம் அவற்றின் பயன்கள் எல்லாம் “ருத்ரகல்பம்" என்ற நூலில் விரிவாக விளக்கப்பட்டிருக்கின்றன. அவற்றை குரு முகமாக அறிந்து முறைப்படி அனுஷ்டிக்கவேண்டும்.

**ஒன்பதாவது அனுவாகம் முற்றும்.**

---

## பத்தாவது அனுவாகம்.

**द्रापे अन्धसस्पते दरिद्रनीललोहित ।**
**एषां पुरुषाणामेषां पशूनां माभेर्मारो मो एषां किञ्च नाममत् ।**

**த்³ராபே அந்த⁴ஸஸ்பதே த³ரித்³ரநீலலோஹித ।**
**ஏஷாம் புருஷாணாமேஷாம் பஶூனாம் மாபே⁴ர்மாரோ**
**மோ ஏஷாம் கிஞ்ச நாமமத் ।**

| | | |
|---|---|---|
| **த்³ராபே** | - | வெறுக்கத்தக்க நிலையை அடைவிக்கின்றவரே! |
| **அந்த³ஸ:** | - | அன்னத்திற்கு, |
| **பதே** | - | யஜமானனாக இருப்பவரே! (உணவை அளிப்பவரே), |
| **த³ரித்³ரத்** | - | எவ்வித பொருளும் அற்று ஏழையாக இருப்பவரே! எதிலும் பற்றற்றவரே! |
| **நீலலோஹித** | - | பாதி உடல் கருப்பாயும், பாதி உடல் சிவப்பாயுமிருப்பவரே! |
| **ஏஷாம்** | - | (என்னைச்சேர்ந்த) இந்த, |
| **புருஷாணாம்** | - | பிள்ளை, பேரன் முதலிய மனிதர்களுக்கும், |
| **ஏஷாம்** | - | (என்னைச் சேர்ந்த) இந்த, |
| **பசூனாம்** | - | ஆடு, மாடு முதலிய மிருகங்களுக்கும், |
| **மாபே4:** | - | பயத்தையளிக்காதீர்கள், |
| **ஏஷாம்** | - | இவற்றுள், |

**கிஞ்சன** - எதுவும்,
**மார:** - அழியாமல் இருக்கவேண்டும்,
**மோ ஆமமத்** - வியாதியால் பீடிக்கப்பட்டதாகவும் ஆகவேண்டாம்.

**(கருத்துரை)** இரண்டாவது அனுவாகம் முதல் ஒன்பதாவது, அனுவாகம் வரை ஸ்ரீ பரமேச்வரஜ்ன வணங்கிவிட்டு இந்த அனுவர்கத்தால் பரமேச்வரனிடம் வேண்டிக்கொள்ளப்படுகிறது.

இங்கு பூர்வார்த்தத்தில் உள்ள நான்கு சொற்களும் ஸ்ரீபரமேச்வர ஸம்போதன ங்கள். தஜனகள், வறுமை, மற்றும் பலவித கஷ்டங்கள் முதலிய வெறுக்கத்தக்க நிஜலமைகஜள அவரவர்களுடைய பாபத்திற்கேற்றவாறு ஸ்ரீபரமேச்வரனே அளிக்கின் றபடியால் அவர் **द्रापि: த்³ராபி:** என்று இங்கு கூறப்படுகின்றுர். உணவை அளித்து உலகத்தை இரக்ஷிக்கின்றவரும் அவரே. ஆகையால் **अन्धसस्पते அந்த⁴ஸஸ்பதே** என்று இங்கு அழைக்கப்படுகின்றார். இவ்விதம் நிக்ரஹம் அநுக்ரஹம் இவ்விரண் டையும் செய்யும் பரமேச்வரனுக்கு ஒருவரிடம் த்வேஷம், மற்றவரிடம் பிரியம் என்ற கெட்டகுணத்தின் ஸம்பந்தமே இல்ஜல என்பதை குறிப்பிடுவதற்காக **दरिद्रत् த³ரித்³ரத்** என்ற ஸம்போதனம். **नीललोहित நீலலோஹித** என்ற ஸம்போதனத்தி ற்கு இரு விதமாகப் பொருள் கூறலாம். கழுத்தில் கருப்பு நிறமுடையவர் மற்ற உடல் எல்லாவற்றிலும் சிவந்த நிறமுடையவர். அல்லது அர்த்தநாரீச்வர் உருவத்தில் தேவியின் பகுதி கருப்பாயும், ஈச்வரனின் பகுதி சிவப்பாயுமுள்ளதால் அதையே இச்சொல் குறிப்பிடுவதாகவும் கொள்ளலாம்.

உத்தரார்த்தத்தில் நம்மைச் சேர்ந்த மனித வர்கத்திற்கும், மிருக வர்க்கத்தி ற்கும் அபயத்தையும், ஆரோக்யத்தையும் அளித்து வளர்க்கவேண்டுமென்று வேண் டிக்கொள்ளப்படுகிறது. இவ்வித வேண்டுகோளுக்கு ஏற்றவாறு பூர்வார்த்தத்தில் ஸம்போதனங்கள் செய்யப்பட்டிருக்கின்றன எவர் பாபத்தின் பயனுக பயம், ரோகம், முதலியவற்றை யளித்து வெறுக்கத்தக்க நிஜலமையை உண்டு பண்ணுகின்றாரோ, எவர் உணவுகஜளயளித்து இரக்ஷிக்கின்றாரோ, அவரிடம் தானே அபயத்தையும், ஆரோக்கியத்தையும் யாசிக்கவேண்டும். தயா ரூபிணியான உமையுடன் கூடியிருப்ப தால் அபயம், ஆரோக்கியம் முதலியவற்றை அவசியம் அளித்தே தீருவார்.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷி - புலஸ்த்யர், சந்தஸ் - ஆஸ்தாரபங்க்தி, தேவதை - பைரவருத்ரன்.

**த்யானம்:**

**आगुल्फासित कञ्चुको डमरुकाश्लिष्टो लसत्कुण्डली**
**शूली कुण्डलितश्रवाः सतिलको मञ्जुकणन्नूपुरः ।**

**श्रीमन्निर्मलदन्तप ङ्क्तिकिरण श्वेतायमानाननो**
**देवो भैरववेषभूषिततनुध्येयो मृडानीपतिः ॥**

**ஆகு³ல்பா²ஸித கஞ்சுகோ ட³மருகாஶ்லிஷ்டோ லஸத்குண்ட³லீ**
**ஶூலீ குண்ட³லிதஶ்ரவாः ஸதிலகோ மஞ்ஜுகணந்நூபுரः ।**
**ஸ்ரீமந்நிர்மலத³ந்தப டி3க்தகிரண ஶ்வேதாயமாநனனோ**
**தே³வோ பை⁴ரவவேஷபூ⁴ஷிததனுத்⁴யேயோ ம்ருடா³னீபதிः ॥**

**(இதன் பொருள்)** குதிகால்வரை கருத்த சட்டை, ஒரு கையில் டமருகம், மற்றொரு கையில் சூலம், காதுகளில் அழகிய குண்டலங்கள், நெற்றியில் திலகம், பாதங்களில் இனிமையாக சப்தம் செய்யும் பாதச் சிலம்புகள், சுத்தமான அழகிய பற்கள், வெளுத்த முகம் இத்தகைய பைரவவேஷத்துடன் கூடிய உடலையுடைய பார்வதீபதியான தேவன் த்யானம் செய்யப்பட வேண்டும்.

ஒரு நாள் உபவாஸமிருந்து பதினாயிரம் தடவை ஜபம் செய்தால் இந்த மந்த்ரஸித்தி ஏற்படும்.

எல்லா பூதங்களிலிருந்துமுண்டாகும் பயமும், எல்லாவித ஜ்வரங்களும் சாந்தியடைந்து, ஐச்வர்ய லாபமும், பைரவமூர்த்தியின் ஸாக்ஷாத்காரமும் இந்த மந்த்ரஜபத்தின் பயனும். **(1)**

**या ते रुद्र शिवा तनूः शिवा विश्वाहभेषजी ।**
**शिवा रुद्रस्य भेषजी तया नो मृड जीवसे ॥**

**யா தே ருத்³ர ஶிவா தனூः ஶிவா விஶ்வாஹபே⁴ஷஜீ ।**
**ஶிவா ருத்³ரஸ்ய பே⁴ஷஜீ தயா நோ ம்ருட³ ஜீவஸே ॥**

| | | |
|---|---|---|
| **ருத்³ர** | - | ஏ பரமேச்வர! |
| **விஶ்வாஹபே⁴ஷஜீ** | - | எக்காலத்திலும் ரோகம், வறுமை முதலியவற்றை நீக்கும் மருந்து போன்றதும், (ஆதலால்) |
| **ஶிவா** | - | "சிவா" என்று கூறப்படுகின்றதும், |
| **ஶிவா** | - | மிக மங்களகரமாவுமுள்ள, |
| **யா** | - | எந்த, |
| **தே** | - | தங்களுடைய, |
| **தனூः** | - | உடல் இருக்கின்றதோ, |
| **ருத்³ரஸ்ய** | - | ஸம்ஸாரமென்னும் ரோகத்தை நிவிருத்தி செய்யும் வைத்யராகிய தங்களுடையதாயும், |
| **பே⁴ஷஜீ** | - | மருந்துபோன்றதும், |
| **ஶிவா** | - | மங்களகரமுமான (எந்த உடல் இருக்கின்றதோ), |
| **தயா** | - | அதனாலும், |
| **நः** | - | எங்களை, |

**ஜீவஸே** - வாழ்வதன்பொருட்டு,
**ம்ருட**[4] - ஸுகமாக இருக்கும்படி செய்யுங்கள்.

**(கருத்துரை)** பரமேச்வரனுக்கு "சிவா" என்றும், "கோரா" என்றும் இரு உடல்கள் உண்டு. அவற்றுள் "சிவா" என்பதையும் இரண்டுவிதமாகக் கூறலாம். எப்பொழுதும் எல்லோருக்கும் எல்லாவித ரோகங்களையும், வறுமை முதலிய பலவித துன்பங்களையும் அழித்து ஸுங்கத்தையளிக்கக்கூடிய தொன்று, ஆத்ம ஞானத்தை யளித்து ஜனனம், மரணம் முதலிய ஸம்ஸாரதுக்கத்தை அழித்து மோக்ஷ ஸுகத்தையே அளிக்கக்கூடியது மற்றொன்று. **"விச்வாஹபேஷஜீ"** என்பது முதலாவதாகக் கூறப்பட்டதையும், **"ருத்ரஸ்யபேஷஜீ"** என்பது இரண்டாவதாகக் கூறப்பட்டதையும் குறிப்பிடுகின்றது. அப்படிப்பட்ட இருவித உடல்களாலும் எங்களுக்கு ஸுகமான வாழ்க்கையை அளியுங்கள் என இங்கு வேண்டிக்கொள்ளப்படுகிறது.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷியும், தேவதையும் ஸுப்ரமண்ய உருவங்கொண்ட ஸ்ரீ பரமேச்வரன், சந்தஸ் - அனுஷ்டுப்.

**த்யானம்:**

**द्रुतचामीकरप्रख्यं शक्तिपाणिं षडाननम् ।**
**मयूरवाहनारूढं स्कन्दरूपं शिवं स्मरेत् ॥**

**த்[3]ருதசாமீகரப்ரக்[2]யம் ஶக்திபாணிம் ஷடா[3]னனம் ।**
**மயூரவாஹனாரூட[4]ம் ஸ்கந்த[3]ரூபம் ஶிவம் ஸ்மரேத் ॥**

**(இதன் பொருள்)** உருக்கின தங்கம்போல் பிரகாசிப்பவரும், சக்தி (வேல்) என்ற ஆயுதத்தை கையில் தரித்துக்கொண்டிருப்பவரும், ஆறு முகங்கள் உள்ளவரும், மயில் வாஹனத்தில் வீற்றிருப்பவருபான ஸ்ரீ ஸுப்ரமண்ய உருவங்கொண்ட் பரமேச்வரனை த்யானம் செய்யவேண்டும்.

நூற்றெட்டு தடவை ப்ராணாயாமம் செய்து ஐயாயிரம் தடவை இந்த மந்த்ரத்தை ஜபம் செய்தால் ஸித்தி ஏற்படும்.

இந்த மந்த்ரஜபத்தால் நல்ல குழந்தைகள் புஷ்டி, ஆரோக்யம், ஐச்வர்யம் இவையெல்லாம் ஸித்திக்கும். **(2)**

**इमा ँ रुद्राय तवसे कपर्दिने क्षयद्वीराय प्रभरामहे मतिम् ।**
**यथा नः शमसद्द्विपदे चतुष्पदे विश्वं पुष्टं ग्रामे अस्मिन्ननातुरम् ॥ ३**

**இமாஹும் ருத்[3]ராய தவஸே கபர்தி[3]னே க்ஷயத்[3]வீராய**
**ப்ரப[4]ராமஹே மதிம் ।**
**யதா[2] ந: ஶமஸத்[3]விபதே[3] சதுஷ்பதே[3] விஶ்வம் புஷ்டம்**
**க்[3]ராமே அஸ்மின்னனாதுரம் ॥ 3**

| | | |
|---|---|---|
| **தவஸே** | - | பலமுள்ளவரும், |
| **கபர்தி³னே** | - | ஜடாதாரியாயும், |
| **க்ஷயத்³வீராய** | - | கண்டவுடனேயே நாசமடைகின்ற எதிரிகளையுடையவரும், |
| **ருத்³ராய** | - | ஸம்ஸார துக்கத்தை நிவ்ருத்தி செய்கின்றவருமான பரமேச்வரனின்பொருட்டு, |
| **இமாம்மதிம்** | - | மானஸிகமான த்யானம், பூஜை இவற்றை, |
| **ப்ரப⁴ராமஹே** | - | விசேஷமாகச் செய்கின்றோம். |
| **யதா²** | - | எந்தப்பிரகாரமாகச் செய்தால், |
| **ந:** | - | எங்களைச் சேர்ந்த, |
| **த்³விபதே³** | - | இரண்டுகால் பிராணிகளுக்கும், |
| **சதுர்பதே³** | - | நான்குகால் பிராணிகளுக்கும், |
| **ஶம்** | - | ஸுகம், |
| **அஸத்** | - | உண்டாகுமோ, |
| **அஸ்மின்க்³ராமே** | - | (நாங்கள் வசிக்கும்) இந்தக்கிராமத்தில் உள்ள, |
| **விஶ்வம்** | - | எல்லாப் பிராணிகளும், |
| **புஷ்டம்** | - | புஷ்டியுள்ளவைகளாயும், (குறை அற்றவைகளாயும்), |
| **அனாதுரம்** | - | வியாதியற்றவைகளாயும், |
| **அஸத்** | - | இருக்மோ (அவ்விதம் மானஸிகமாக த்யானம், பூஜை இவற்றைச் செய்கின்றோம்.) |

**(கருத்துரை)** இங்கு தன்னைச் சேர்ந்த மனிதவர்க்கங்களும், மிருகவர்க்கங்களும் ஸுகமாக இருப்பதுடன், தன் கிராமத்தில் உள்ள பிராணிகள் அனைவரும் ஸுகமாக இருப்பதற்காக ஸ்ரீபரமேச்வரனை மனதில் போற்றுகின்றோம் எனக் கூறப்படுகின்றது. கிராமத்திலோ நகரத்திலோ ஒருவன் ருத்ரபாராயணம் செய்து வருவானேயாகில் அங்குள்ள அனைவருக்கும் வியாதியோ, வறுமையோ, திருடர்களுடைய உபாதையோ உண்டாகாது என அடியிற் கண்ட புராண வசனத்திலிருந்து தெரிய வருகிறது.

**रुद्राध्यायी वसेद्यत्र ग्रामे वा नगरेपि वा ।**
**व्याधिदुर्भिक्षचोरादिबाधा तत्र न जायते ॥**

**ருத்³ராத்⁴யாயீ வஸேத்³யத்ர க்³ராமே வா நக³ரேபி வா ।**
**வ்யாதி⁴து³ர்பி⁴க்ஷசோராதி³பா³தா⁴ தத்ர ந ஜாயதே ॥**

ஸமஸ்த பிராணிகளுக்கும் ஸமஸ்த ஸுகங்களையும் அளிக்கும் திறமையுள்ளவர். ஸ்ரீ பரமேச்வரன் என்பதை **ருத்ராய**, **தவஸே** முதலிய நான்கு விசேஷணங்கள் தெரிவிக்கின்றன.

**रुद्राय ருத்³ராய** ஜனனம், மரணம் என்னும் ஸம்ஸார துக்கத்தையே நிவிருத்தி செய்கின்றவருக்கு வாழ் நாளில் ஏற்படும் சில துன்பங்களை நிவிருத்தி செய்வதில் சிரமமுண்டோ!

**तवसे தவஸே** அதற்கேற்ற பலமுள்ளவர் என்று பட்ட பாஸ்கர ஸாயண பாஷ்யங்களில் வியாக்யானம் செய்யப்பட்டிருக்கிறது. அபிநவசங்கரபாஷ்யத்தில் **तपसे தபஸே** என்ற பாடத்தை வைத்துக்கொண்டு "ஞான சக்தியுடன் கூடியவர்" என்று பொருள் கூறப்பட்டிருக்கிறது. **कपर्दिने கபர்தி³னே** மற்ற எவராலும் செய்ய முடியாத காரியங்களைச் செய்து முடிக்கின்றார் என்பது இச்சொல்லிலிருந்து கிடைக்கின்றது.

**कं - गङ्गाजलं पर्दयति - पालयतीति - कपर्दः -**
**जटाजूटः सः अस्यास्तीति कपर्दी**

**கம் - க³ங்கா³ஜலம் பர்த³யதி - பாலயதீதி - கபர்த³: -**
**ஜடாஜூட: ஸ: அஸ்யாஸ்தீதி கபர்தீ³**

வேறுயாராலும் தாங்கமுடியாத, ஆகாயத்திலிருந்து விழுந்த கங்காப்ரவாஹத்தை பரமேச்வரன் ஒருவனே சிரஸில் தாங்கி ஜடைகளால் அதை கிரஹித்தார்.

**क्षयद्वीराय க்ஷயத்³வீராய** என்பதால் நிகரற்ற வீர்யமுள்ளவர் என்பது கிடைக்கின்றது.

இவ்வளவு மஹிமைகளுடன் கூடிய பரமேச்வரனிடம் அனைவருக்கும் ஸுகம் ஏற்படவேண்டும் என்று வேண்டிக்கொள்வது மிகவும் பொருத்தமானதே. **(3)**

**मृडानो रुद्रोत नो मयस्कृधि क्षयद्वीराय नमसा विधेम ते**
**यच्छं च योश्च मनुरायजे पिता तदश्याम तव रुद्र प्रणीतौ ॥ ४**

**ம்ருடா³னோ ருத்³ரோத நோ மயஸ்க்ருதி⁴ க்ஷயத்³வீராய நமஸா விதே⁴ம தே**
**யச்ச²ம் ச யோஶ்ச மனுராயஜே பிதா தத³ஶ்யாம தவ ருத்³ர ப்ரணீதௌ ॥ 4**

| | | |
|---|---|---|
| **ருத்³ர** | - | ஏ பரமேச்வர! |
| **ந:** | - | எங்களை, |
| **ம்ருட³** | - | வேண்டியவற்றை அளித்து இவ்வுலகில் ஸுகமாக இருக்கும்படி செய்யுங்கள், |
| **உத** | - | மேலும், |
| **ந:** | - | எங்களுக்கு, |
| **மய:** | - | மோக்ஷஸுகத்தை, |
| **க்ருதி⁴** | - | அளியுங்கள், |

| | | |
|---|---|---|
| **க்ஷயத்3வீராய** | - | மிகவும் வீர்யமுள்ள எங்கள் பாபத்தை அழித்த, |
| **தே** | - | தங்களுக்கு, |
| **நமஸாவிதே4ம** | - | நமஸ்காரங்களைச் செய்து போற்றுகின்றோம், |
| **பிதா** | - | எங்களுக்கு தகப்பனைப்போன்ற, |
| **மனு:** | - | மனுவானவர், |
| **யத் ஸம் ச** | - | யாதொரு விஷய ஸுகத்தையும், |
| **யோஷ்ச** | - | துக்கஸம்பந்தமற்ற மோக்ஷஸுகத்தையும், |
| **தவ ப்ரணீதௌ** | - | தங்களுடைய அருள் ஏற்பட்டகாலத்தில், |
| **ஆயஜே** | - | ஸம்பாதித்தாரோ, |
| **தத்** | - | அதையெல்லாம், |
| **ருத்3ர** | - | ஏ பரமேச்வர! |
| **அஸ்யாம்** | - | (தங்களுடைய அருளால்) நாங்களும் அடைகின்றோம். |

**योः यूथते दुःखेन विनाभूयते इति योः**
**दुःखासंभिनं सुखं - मोक्ष इत्यर्थः**

**யோ: யூத2தே து3:கே2ன விநாபூ4யதே இதி யோ:**
**து3:கா2ஸ்பி4னம்’ ஸுக2ம்’ - மோக்ஷ இத்யர்த2:**

**(கருத்துரை)** ஏ பரமேச்வர! பசு, புத்திரன், தனம், தான்யம் முதலியவற்றை அளித்து இவ்வுலகில் எங்களை ஸுகமாக வாழும்படி செய்யவேண்டும். அத்துடன் மட்டுமில்லாமல், மோக்ஷஸுகத்தையுமளிக்கவேண்டும். "பாபங்களைச் செய்த இவர்களுக்கு மோக்ஷத்தை எப்படி அளிக்கமுடியும்” என்று ஆலோசிக்கவேண்டாம். நாங்கள் தங்களை வணங்கிப் போற்றுகின்றோம். நாங்கள் செய்த பாபம் எவ்வளவு கொடியதாக இருந்தாலும், தங்களை வணங்கியபின் அது எங்களைவிட்டு அகன்று விடாதோ? **க்ஷயத்வீராய** - என்பதற்கு, பரமேச்வரனைக் கண்டவுடனேயே விரோதிகள் அழிந்துவிடுகின்றனர் என்று முன்பு பொருள் கூறப்பட்டது. அல்லது அவரை வணங்கியவுடன் மிக வீர்யமுள்ள பாபங்கள் எல்லாம் அழிந்துவிடுகின்றன என்றும் பொருள் கொள்ளலாம். பரமேச்வரனுடைய அருளால் ஐஹிக ஆமுஷ்மிக ஸுகங்கள் எல்லாம் பெறப்படுகின்றன என்பது பரம்பராப்ராப்தமல்லாமல், இன்று நேற்று ஏற்பட்டதல்ல எனக் கூறுகின்றனர். ஸமஸ்தப் பிரஜைகளுக்கும் தகப்பனும், வர்ணாச்ரமதர்மங்களை யெல்லாம் பிரஜைகளுக்கு உபதேசித்தவருமான மனு, பரமேச்வரனுடைய அருளால் எவ்வித ஐஹிக -ஆமுஷ்மிகஸுகத்தை அடைந்தாரோ, அதையெல்லாம் நாங்களும் அடைய வேண்டும் என வேண்டிக்கொள்ளப்படுகிறது.

மூன்று, நான்கு இவ்விரண்டு ரிக்குகளும் ஒரே மந்த்ரம். இதற்கு ரிஷி - மார்க்கண்டேயர். சந்தஸ் - ஜகதீ. தேவதை - ருத்ரன்.

**த்யானம்:**

**दिव्य सिंहासनासीनं स्तूयमानं महर्षिभिः ।**
**प्रसन्नवदनं ध्यायेत् सोमं सोमार्धशेखरम् ॥**

**தி3வ்ய ஸிம்ஹாஸனாஸீனம் ஸ்தூயமானம் மஹர்ஷிபி4:**
**ப்ரஸன்னவத3னம் த்4யாயேத் ஸோமம் ஸோமார்த4ஶேக2ரம் ॥**

**(இதன் பொருள்)** திவ்ய சிங்காசனத்தில் வீற்றிருப்பவரும், மஹரிஷிகளால் துதிக்கப்படுகின்றவரும், மலர்ந்த முகத்துடன் கூடியவரும், அர்த்தசந்திரனை சிரஸில் அணிந்தவருமான பார்வதியுடன் கூடிய பரமேச்வரனை த்யானம் செய்ய வேண்டும்.

பசு, பக்ஷி முதலியவற்றின் நன்மைகளே இதன் முக்கிய பயனும். **(4)**

**मानो महान्तमुतमानो अर्भकं मान उक्षन्तसुत मा न उक्षितम् ।**
**मानोवधीः पितरं मोत मातरं प्रिया मानस्तनुवो रुद्र रीरिषः ॥**

**மானோ மஹாந்தமுதமானோ அர்ப4கம் மான உக்ஷந்தஸுத மா ந உக்ஷிதம் ।**
**மானோவதீ4: பிதரம் மோத மாதரம் ப்ரியா மானஸ்தனுவோ ருத்3ர ரீரிஷ: ॥**

| | | |
|---|---|---|
| **ருத்3ர** | - | ஏ பரமேச்வர! |
| **ந:** | - | எங்களைச் சேர்ந்த, |
| **மஹாந்தம்** | - | வயதான மனிதரையும், |
| **உத** | - | மேலும், |
| **ந:** | - | எங்களுடைய, |
| **அர்ப4கம்** | - | குழந்தைகளையும், |
| **ந:** | - | எங்களைச் சேர்ந்த, |
| **உக்ஷந்தம்** | - | யௌவனப்பருவத்தில் உள்ளவனையும், |
| **உத** | - | மேலும், |
| **ந:** | - | எங்களைச் சேர்ந்த, |
| **உக்ஷிதம்** | - | கர்ப்பத்தில் உள்ள சிசுவையும், |
| **மாரீரிஷம்** | - | வியாதி முதலியவற்றால் ஹிம்ஸிக்காதீர்கள், |
| **ந:** | - | எங்களுடைய, |
| **பிதரம்** | - | தந்தையை, |
| **மாவதி4:** | - | பீடிக்காதீர்கள், |
| **உத** | - | மேலும், |
| **மாதரம்** | - | தாயை, |
| **மாவதீ:** | - | பீடிக்காதீர்கள், |
| **ந:** | - | எங்களுடைய, |
| **ப்ரியா:** | - | பிரியமான, |
| **தனுவ:** | - | உடல்களை, |

**மாரீரிஷ:** - ஹிம்ஸை செய்யாதீர்கள்.

**(கருத்துரை)** தன்ஊனச் சேர்ந்த கிழவர், பாலன், வாலிபன், கர்ப்பத்தில் உள்ள சிசு, தந்தை, தாய் இவர்கஊள ஹிம்ஸிக்கலாகாது என்பதுடன் தன்ஊனச் சேர்ந்தவர் களின் கிழவர் முதலியவர்கஊயும் ஹிம்ஸிக்கலாகாது என வேண்டிக்கொள்வதன் பொருட்டு **नः நः** என்று பஹுவசனப் பிரயோகம் செய்யப்பட்டு இருக்கிறது. இந்த மந்த்ரத்தில் **मा नः மா நः** என்று ஒரு தடவை இருந்தாலே அஊனவரையும் ஹிம்ஸிக் கலாகாது என்று கிடைக்கக்கூடும். இருந்தாலும் தன்ஊனச் சேர்ந்தவர்களிடமுள்ள அதிக பிரியத்தால் **महान्तं, अर्भकं மஹாந்தம், அர்ப⁴கம்** எனக் முதலிய உறவினர் கஊக் குறிப்பிடும் எல்லா சொற்களுடனும் **मा नः மா நः** என்று போடப்பட்டிருக் கிறது.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷி - பிருகு. சந்தஸ் - ஜகதீ. தேவதை - நந்தீச்வர உருவ ங்கொண்ட ஸ்ரீருத்ரன்.

**த்யானம்:**

**बालेन्दुमकुटं देवं तरुणादित्य विग्रहम् ।**
**ध्याये नन्दीश्वराकारं गणेश्वरसमावृतम् ॥**

**பா³லேந்து³மகுடம் தே³வம் தருணாதி³த்ய விக்³ரஹம் ।**
**த்⁴யாயே நந்தீ³ஶ்வராகாரம் க³ணேஶ்வரஸமாவ்ருதம் ॥**

**(இதன் பொருள்)** இளம் பிறையை சிரஸில் அணிந்தவரும், சூரியஊனப்போல் பிரகாசிக்கும் உடஊலயுடையவரும், கணாதிபதிகளால் சூழப்பட்டவருமான, நந்திகே ச்வரன் உருவங்கொண்ட பரமேச்வரஊன த்யானம் செய்யவேண்டும்.

இந்த மந்த்ரஜபத்தால் தன்ஊனச் சேர்ந்தவர்களுக்கு எல்லாவற்றிலும் அமைதி உண்டாகும். **(5)**

**मानस्तोके तनये मान आयुषि मानो गोषु मानो अश्वेषु रीरिषः**
**वीरान्मानो रुद्र भामितो वधीर्हविष्मन्तो नमसा विधेम ते ॥ ६**

**மானஸ்தோகே தனயே மான ஆயுஷி மானோ கோ³ஷு மானோ**
**அஶ்வேஷு ரீரிஷः**
**வீரான்மானோ ருத்³ர பா⁴மிதோ வதீ⁴ர்ஹவிஷ்மந்தோ**
**நமஸா விதே⁴ம தே ॥ 6**

**ருத்³ர** - ஏ பரமேச்வர!

| | |
|---|---|
| **பா4மித:** | - (செய்ய வேண்டியவற்றைச் செய்யாத எங்களிடம்) கோபங் கொண்ட தாங்கள், |
| **ந:** | - எங்களுடைய, |
| **தோகே** | - குழந்தைகளிடமும், |
| **தநயே** | - பிள்ளைகளிடமும், |
| **மரீரிஷம்** | - எவ்வித ஹிம்ஸையையும் செய்யாதீர்கள், |
| **ந:** | - எங்களுடைய, |
| **ஆயுஷி** | - ஆயுள் விஷயத்திலும், |
| **மரீரிஷ:** | - ஹிம்ஸை செய்யாதீர்கள், |
| **ந:** | - எங்களுடைய, |
| **கோ3ஷு** | - பசுக்கள் விஷயத்திலும், |
| **(மரீரிஷ:) ந: அஷ்வேஷு** | - எங்கள் குதிரைகள் விஷயத்திலும், |
| **மரீரிஷம் ந:** | - எங்களுடைய, |
| **வீரான்** | - ஊழியர்களை, |
| **மாவதீ4:** | - ஹிம்ஸிக்காதீர்கள், |
| **ஹவிந்மந்த:** | - சரு, புரோடாசம் முதலிய ஹவிஸ்ஸுடன், அல்லது பக்தியுடன் அளிக்கப்படும் வஸ்துவுடன் கூடியவர்களாக இருந்துகொண்டு, |
| **தே** | - தங்களுக்கு, |
| **நமஸா** | - நமஸ்காரம் செய்து, |
| **விதே4ம** | - பணிவிடை செய்கின்றோம். |

**(கருத்துரை)** ஏ பரமேச்வர! நாங்கள் எவ்வளவு குற்றம் செய்திருந்தபோதிலும், பக்தியுடன் நாங்கள் அளிக்கும் சரு, புரோடாசம் முதலியவற்றையும், மற்ற வஸ்து வையும் ஏற்றுக்கொண்டு, நாங்கள் செய்யும் நமஸ்காரம், மற்ற பணிவிடைகள் முதலியவற்றால் திருப்தியடைந்து எங்களை மன்னித்து எங்களைச் சேர்ந்த யாரையும் ஹிம்ஸிக்காமல் இருக்க வேண்டும்.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷியும், தேவதையும் ஸ்ரீபரமேச்வரனே. சந்தஸ் - ஜகதீ.

த்யானம்:

**दधानमेकादशधा विभज्य देहं विशुद्धस्फटिक प्रकाशम् ।**
**तेजोमयं शूलिनमिन्दुमौलिं विचिन्तयेदत्र सदैव रुद्रम् ॥**

**த3தா4னமேகாத3ஶதா4 விப4ஜ்ய தே3ஹம் விஶுத்3த4ஸ்ப2டிக ப்ரகாஶம் ।**
**தேஜோமயம் ஶூலினமிந்து3மௌலிம் விசிந்தயேத3த்ர ஸதை3வ ருத்3ரம் ॥**

**(இதன் பொருள்)** பதினோறுவிதமாக தன் உடலைப் பிரித்துக்கொண்டிருப்பவ ரும், சுத்தமான ஸ்படிகம்போல் பிரகாசிப்பவரும், ஒளிமயமாய், சூலத்தைக் கையில் தரிப்பவராயும், சந்திரனை சிரஸில் அணிந்து கொண்டும் விளங்கும் ருத்ரனை எப்பொ ழுதும் த்யானம் செய்யவேண்டும்.

ஆயுள், ராஜ்யம் இவற்றின் விருத்தி, நல்ல மழை, வியவஹாரம், சூதாட்டம், இவற்றில் ஜயம், ஸ்வர்ணலாபம், மஹாபாப நிவிருத்தி, ஸர்வஜன ஜயம் முதலிய வை இம்மந்த்ரத்தின் பயனுகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. **(6)**

**आराते गोघ्न उत पूरुषघ्ने क्षयद्वीराय सुम्नमस्मे ते अस्तु ।**
**रक्षा च नो अधि च देव ब्रूह्यथा च नः शर्म यच्छ द्विबर्हाः ॥ ७**

**ஆராதே கோ3க்4ன உத பூருஷக்4னே க்ஷயத்3வீராய ஸும்நமஸ்மே தே அஸ்து ।**
**ரக்ஷா ச நோ அகி4 ச தே3வ ப்3ரூஹ்மதா2 ச நঃ ஶர்ம யச்ச2 த்3விப3ர்ஹாঃ ॥ 7**

| | | |
|---|---|---|
| **கோ3க்4ன** | - | (பாபிகளுடைய) பசுக்களை அழிக்கின்றவரும், |
| **உத** | - | மேலும், |
| **பூருஷக்4னே** | - | பிள்ளை, பேரன் முதலியவர்களைக் கொல்லுகின்ற வரும், |
| **க்ஷயத்3வீராய** | - | எல்லா வீரர்களையும் அழிக்கின்றவருமான, |
| **தே** | - | தங்களுடைய, |
| **ஸும்நம** | - | சாந்தஸ்வரூபம், |
| **அஸ்மே** | - | எங்களுக்கு, |
| **ஆராத்** | - | சமீபத்தில், |
| **அஸ்து** | - | இருக்கட்டும். |
| **ச** | - | மேலும், |
| **நঃ** | - | எங்களை, |
| **ரக்ஷ** | - | காப்பாற்றுங்கள், |
| **ச** | - | மேலும், |
| **தே3வ** | - | ஏ பரமேச்வர! |
| **அதி4ப்3ரூஹி** | - | எங்களுக்காகப் பரிந்து பேசுங்கள், |
| **அதா2ச** | - | மேலும், |
| **த்3விப3ர்ஹாঃ** | - | இந்த உலகிலும், மறு உலகிலும் ஸுகத்தை விருத்தி செய்யக்கூடியவரே! அல்லது ஐஹிக - ஆமுஷ்மிக ஸுகத்தை அபிவிருத்தி செய்யக்கூடி யவரே! |
| **நঃ** | - | எங்களுக்கு, |
| **ஶர்ம** | - | விஷயஸுகத்தையும், மோக்ஷ ஸுகத்தையும், |
| **யச்ச2** | - | கொடுங்கள். |

**(கருத்துரை)** பரமேச்வரனுக்கு கோரமாயும், சாந்தமாயும், இரு உருவங்கள் உண்டு என்று முன்னமே கூறப்பட்டிருக்கிறது. பாபம் செய்கின்றவர்களுக்கு கோர மான உருவத்துடனேயே காக்ஷியளிப்பார். அவர்களுடைய பசுக்கள், பிள்ளை, பேரன் முதலியவர்களையும் ஹிம்ஸிப்பார். உலகத்திலுள்ள எல்லா வீரர்களையும் கடைசீ காலத்தில் அழிக்கின்ற பரமேச்வரனுக்கு பாபிகளையும், அவர்களைச் சேர்ந்தவர்வர் களையும் ஹிம்ஸித்தல் என்பது ஒரு பெரியகாரியமல்ல. ஆனுல் இங்கு, ஏ பரமேச் வர! தங்களுடைய சாந்தமான உருவம் ஒன்றுதான் எப்பொழுதும் எங்கள் சமீபத்தில்

இருக்கவேண்டும். கோரமான உருவம் வெகு தூரத்தில் இருக்கட்டும். மேலும், சாந்தமான உருவத்துடன் எங்கள் அருகிலேயே இருந்துகொண்டு எங்களை இரக்ஷிக்கவேண்டும். "பாபியான இவனை எப்படி இரக்ஷிக்கலாம்? என்று தேவர்களோ மற்றவர்களோ கேட்குங்கால், எங்களுக்காகப் பரிந்து பேசவும் வேண்டும். அவ்வளவு மட்டுமா? ஐஹிகஸுகங்களையெல்லாம் அளித்து மோக்ஷஸுகத்தையும் கொடுத்தருள வேண்டும்" என வேண்டிக்கொள்ளப்படுகிறது.

இந்த மந்த்ரத்தில் **गोघ्ने, पूरुषघ्ने, क्षयद्वीराय கோ³க்⁴னே, பூருஷக்⁴னே, க்ஷயத்³வீராய** என்ற மூன்று சொற்களிலும் உள்ள சதுர்தீவிபக்தி, ஷஷ்டி விபக்தியின் அர்த்தத்தைக் குறிப்பிடுகின்றன. **ते தே** என்பதற்கு இந்த மூன்று சொற்களும் விசேஷணங்கள்.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷி - அத்ரி. சந்தஸ் - திருஷ்டுப். தேவதை - சம்பு.

**த்யானம்:**

**कुर्वाणं सन्निधौ देव्या देवमानन्दताण्डवम् ।**
**हुताशनधरं ध्यायेत्तप्तकाञ्चनसन्निभम् ॥**
**குர்வாணம் ஸந்நிதௌ⁴ தே³வ்யா தே³வமானந்த³தாண்ட³வம் ।**
**ஹுதாஶனத⁴ரம் த்⁴யாயேத்தப்தகாஞ்சனஸன்னிப⁴ம் ॥**

**(இதன் பொருள்)** தேவியின் ஸன்னிதியில், கையில் அக்னியை வைத்துக் கொண்டு ஆனந்ததாண்டவம் ஆடுகின்றவரும், உருக்கின தங்கம்போல் பிரகாசிப்பவருமான பரமேச்வரனை த்யானம் செய்யவேண்டும்.

இந்த மந்த்ர ஜபத்தால் ஆயுளும், ஐச்வர்யமும் விருத்தி அடையும். **(7)**

**स्तुहिं श्रुतं गर्तसदं युवानं मृगं न भीममुपहनुमुग्रम् ।**
**मृडा जरिने रुद्रस्तवानो अन्यन्ते असन्निवपन्तु सेनाः ॥**
**ஸ்துஹிம் ஶ்ருதம் க³ர்தஸத³ம் யுவானம் ம்ருக³ம் ந பீ⁴மமுபஹனுமுக்³ரம் ।**
**ம்ருடா³ ஜரினே ருத்³ரஸ்தவானோ அன்யந்தே அஸன்னிவபந்து ஸேனாः ॥**

(ஏ வாக்கே! அல்லது அந்தராத்மாவே!)

| | | |
|---|---|---|
| **ஶ்ருதம்** | - | 'பரமேச்வரன்' என்று எங்கும் பிரஸித்தி பெற்றவரும், |
| **க³ர்தஸத³ம்** | - | நமது ஹ்ருதயகுகையில் வசிப்பவரும், |
| **யுவானம்** | - | எப்பொழுதும் வாலிபராய் மிக வழகாக இருப்பவரும், |

| | | |
|---|---|---|
| **உபஹத்னும்** | - | துஷ்டர்களை ஸம்ஹாரம் செய்கின்றவரும், |
| **ம்ருக$^{3}$ம் ந** | - | சிங்கம்போல், |
| **பீ$^{4}$மம்** | - | பயங்கரராயும், |
| **உக்$^{3}$ரம்** | - | மிக உக்ரராயும் (வேறு யாராலும் ஜயிக்க முடியாதவராயும்) இருக்கின்ற பரமேச்வரனை, |
| **ஸ்துஹி** | - | ஸ்தோத்ரம் செய், |
| **ருத்$^{3}$ர** | - | ஏ பரமேச்வர! |
| **ஸ்தவானம்** | - | ஸ்தோத்ரம் செய்யப்பட்ட (தாங்கள்), |
| **ஜரித்ரே** | - | அழியக்கூடிய இவ்வுடலில் (இருக்கின்ற எங்களை), |
| **ம்ருட$^{3}$** | - | ஸுகமுள்ளவர்களாகச் செய்யுங்கள், |
| **ஸேனா:** | - | எங்கள் ஸுகத்தைக் கெடுக்கும்) தங்களுடைய சேனைகள், |
| **அஸ்மத் அந்யம்** | - | (எங்களைக்காட்டிலும் வேறான) எங்கள் எதிரிகளை அல்லது எங்களுடைய பாபங்களை, |
| **னிவபந்து** | - | அழிக்கட்டும். |

**(கருத்துரை)** இது வாகிந்த்ரியத்தையோ அல்லது அந்தராத்மாவையோ குறித்து கூறப்படும் மந்த்ரம்; எங்கும் புகழ் பெற்றவனைத்தான் துதிக்கமுடியும். பரமேச்வரனே எல்லா வேதங்களிலும், உலகங்களிலும் "ஈவரன்" என்று மிகவும் பிரசித்திபெற்றவர் என்பதை "ச்ருதம்" என்ற சொல் குறிப்பிடுகின்றது. அவ்வளவு பிரசித்திபெற்ற மஹானுக்கு நம்முடைய ஸ்தோத்ரம் செவியில் படுமோ? என சந்தேகம் வேண்டாம். ஏனென்றால் அவர் **கர்தஸத:** நம்முடைய ஹ்ருதய குஹையிலேயே வசிக்கின்றவர். அவர் மிகவும் பெருமை வாய்ந்தவர் என்ற காரணத்தால் மட்டும் அவர் துதிக்கப்படவேண்டியவர் அல்ல. எப்பொழுதும் யௌவனப் பருவத்திலேயே இருந்து கொண்டு மிக அழகிய அற்புதமான உடலுடன் கூடியிருப்பதாலும்கூட துதிக்கத் தகுந்தவர் என்பதை **யுவாநம்** என்ற சொல் குறிப்பிடுகின்றது. இவ்வாறு விதிக்கப்பட்ட ஸ்தோத்ரத்தைச் செய்யாமலும், மற்ற உரிய தர்மங்களை அநுஷ்டிக்காமலும், ஸ்ரீ பரமேச்வரனுடைய ஆஜ்ஞையை மீறுகின்றவர்களை அவர் நிச்சியமாக ஹிம்ஸிப்பார் என்பது **உபஹத்நும்** - என்பதன்பொருள். துஷ்டர்களை ஹிம்ஸிக்குங்காலத்தில், யானையின் தலையைப் பிளப்பதற்காகப் பாயும் சிங்கம் போல் மிக பயங்கரமாக இருக்கின்றார் என்பதை **ம்ருகம் ந பீமம்** என்ற சொற்கள் குறிப்பிடுகின்றன. இங்கு "ந" என்ற சொல் "இவ" என்பதுபோல் உபமானத்தை அர்த்தமாகக்கொண்டது. சிங்கத்தை அடக்கும் சரபம் போல் பரமேச்வரனைவிட பலமுள்ள வேறுஒருவர் இருக்கக்கூடுமோ என்ற சங்கையை நிவிருத்தி செய்வதன்பொருட்டு **"உக்ரம்"** என்று போடப்பட்டிருக்கிறது. **"नवा ओजीयो रुद्र त्वदस्ति" "तमीश्वराणां परमं महेश्वरम्"** **"நவா ஓஜீயோ ருத்$^{3}$ர த்வத$^{3}$ஸ்தி" "தமீஸ்வராணும் பரமம் மஹேஸ்வரம்"** முதலிய ப்ரமாணவசனங்களிலிருந்து, ஈச்வரர்களுக்கெல்லாம் ஈச்வரனன அவரைவிட அதிகபலமுள்ளவர் வேறு யாருமே இல்லை எனத்தெரிய வருகிறது.

இவ்வாறு பரமேச்வரனைத்துதிக்காதவர்களுக்கு ஏற்படும் தீங்கைக் கூறிவிட்டு துதித்தால் விளையும் நன்மைகளை முதலியவற்றால் வர்ணிக்கிறார். எங்களுடைய துதியைக் கேட்டுத் திருப்தியடைந்த தாங்கள் எங்கள் உடல் அழியக்கூடியதானாலும், வியாதியற்றவர்களாகவும், திருடமான சரீரம் உள்ளவர்களாகவுமிருக்கும்படி அருள் புரிந்து கடைசியில் மோக்ஷ ஸுகத்தையும் அளிக்கவேண்டும். எங்கள் ஸுகத்திற்கு விரோதிகளான தங்கள் சேனைகள் எங்கள் எதிரிகளான பாபங்களை அழிக்கட்டும்.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷி - வையாக்ரர். சந்தஸ் - த்ருஷ்டுப். தேவதை - ஸ்ரீருத்ரன்.

**த்யானம்:**

**उद्यद्भास्करकोटिप्रकाशमाकाशगं भीमम् ।**
**भीतिघ्नमभयवरदं ध्यायेत् रुद्रं सुधनुतम् ॥**

**உத்³யத்³பா⁴ஸ்கரகோடிப்ரகாஶமாகாஶக³ம் பீ⁴மம் ।**
**பீ⁴திக்⁴னமப⁴யவரத³ம் த்⁴யாயேத் ருத்³ரம் ஸுத⁴னுதம் ॥**

**(இதன் பொருள்)** உதயகாலத்தில் உள்ள கோடி சூரியன்களுக்குச் சமமாய் பிரகாசிப்பவரும், ஆகாயத்தில் இருப்பவரும், மிகபயங்கரமாக இருப்பவரும், அண்டியவர்களின் பயத்தை அழிக்கின்றவரும், அபயஹஸ்தம், வரதஹஸ்தம் இவற்றுடன் கூடியவரும், தேவக்கூட்டங்களால் வணங்கப்படுகின்றவருமான ஸ்ரீருத்ரனை த்யானம் செய்ய வேண்டும்.

சத்ருநாசம் இந்த மந்த்ரத்திற்கு முக்கிய பயனும். **(8)**

**परिणोरुद्रस्य हेतिर्वृणक्तु परि त्वेषस्य दुर्मतिरघायोः ।**
**अव स्थिरा मघवद्भ्यस्तनुष्व मीढ्वस्तोकाय तनयाय म्रुडय ॥ ९**

**பரிணோருத்³ரஸ்ய ஹேதிர்வ்ருணக்து பரி த்வேஷஸ்ய து³ர்மதிரகா⁴யோ: ।**
**அவ ஸ்தி²ரா மக⁴வத்³ப்⁴யஸ்தனுஷ்வ மீட்⁴வஸ்தோகாய தனயாய ம்ருட³ய ॥ 9**

| | | |
|---|---|---|
| **ருத்³ரஸ்ய** | - | பரமேச்வரனுடைய, |
| **ஹேதி** | - | ஆயுதம், |
| **ந:** | - | எங்களை, |
| **பரிவ்ருணக்து** | - | விட்டுவிலகட்டும் (எங்களை ஒருபொழுதும் அடிக்கவேண்டாம்), |
| **அகா⁴யோ:** | - | (கோபத்திற்கு ஸாதனமாக) பாபத்தை விரும்புகின்றவரும், |
| **பரி** | - | நான்கு பக்கங்களிலும், |
| **த்வேஷஸ்ய** | - | கோபத்தால் ஜ்வலிக்கின்றவருமான ருத்ரனுடைய, |

| | | |
|---|---|---|
| **து³ர்மதி:** | - | (ஹிம்ஸிக்கவேண்டுமென்ற) கெட்ட எண்ணம் (எங்களைவிட்டு விலகட்டும்). |
| **மீட்வ** | - | வணங்குகின்றவர்களுக்கு வேண்டியவற்றை யெல்லாம் வர்ஷிக்கும் ஏ பரமேச்வர! (தங்கள் ஆயுதமும், எண்ணமும்) |
| **ஸ்தி²ரா** | - | பழுதற்றது, (வீணுக ஆகாதது) |
| **மக⁴வத்ப்⁴ய:** | - | துதி, நமஸ்காரம் முதலிய தங்கள் பூஜையைச் செய்கின்ற எங்களிடம், |
| **அவதநுஷ்வ** | - | அந்த ஆயுதத்தை உபஸம்ஹாரம் செய்து கொள் ளுங்கள், (ஹிம்ஸிக்கவேண்டுமென்ற எண்ணத் தை மாற்றிக் கொள்ளுங்கள்.) |
| **தோகாய** | - | (பொதுவாக எங்கள்) குழந்தைகளுக்கு, |
| **தனயாய** | - | (குறிப்பாக எங்கள்) பிள்ளைகளுக்கு, |
| **ம்ருட³ய** | - | ஸுகத்தையளியுங்கள். |

**(கருத்துரை)** பிரஜைகள் செய்யும் பாபத்தால் பரமேச்வரனுக்கு கோபம் ஸம்ப விக்கின்றது. அதனுல் பிரஜைகளை ஹிம்ஸிக்க வேண்டுமென்ற எண்ணம், அதனுல் பல துக்கங்களை அளிக்கக்கூடிய தேசம், காலம், புருஷன் முதலிய பல பொருள்கள் பரமேச்வரனுக்கு ஆயுதங்களாக ஆகின்றன. அவற்றுல் பிரஜைகளுக்கு ஹிம்ஸை, அதனுல் துக்கானுபவம் என்பது கிரமம். இந்த மந்த்ரத்தால் பாபம் முதல் துக்கானுப வம் வரை எதுவும் எங்களுக்கு இருக்கலாகாது என்று பிரார்த்திக்கப்படுகிறது. நாங் கள் முன்பு பாபம் செய்திருந்தபோதிலும் எங்கள் ஸ்தோத்ரம், நமஸ்காரம் முதலிய வற்றால் திருப்தியடைந்து, எங்கள் விஷயத்தில் உங்கள் ஆயுதங்களை உபஸம்ஹா ரம் செய்துகொள்ளவேண்டும். எங்களை ஹிம்ஸிக்கவேண்டுமென்ற எண்ணத்தை யும் மாற்றிக்கொள்ளவேண்டும். மேலும் பொதுவாக எங்கள் குழந்தைகளுக்கும், முக்கியமாக எங்கள் பிள்ளைகளுக்கும் ஸுகத்தை அளிக்க வேண்டும்.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷியும் தேவதையும், பரமேச்வரனே. சந்தஸ் - திருஷ்டுப்.

**த்யானம்:**

**गजचर्मावृततनुं स्फुरत्प्रहरणोज्वलम् ।**
**सर्वपापहरं ध्यायेदेव कुञ्जरभेदिनम् ॥**

**க³ஜசர்மாவ்ருததனும் ஸ்பு²ரத்ப்ரஹரணோஜ்வலம் ।**
**ஸர்வபாபஹரம் த்⁴யாயேதே³வ குஞ்ஜரபே⁴தி³னம் ॥**

**(இதன் பொருள்)** யானைத்தோலை அணிந்தவரும், பிரகாசிக்கும் ஆயுதங்க ளால் விளங்குகின்றவரும், எல்லா பாபங்களையும் அபஹரிக்கின்றவரும், கஜாஸுர னைப் பிளந்து கொன்றவருமான பரமேச்வரனை த்யானம் செய்யவேண்டும்.

இந்த மந்திர ஜபத்திற்கு ஸத்புத்ரலாபம் முதலியவை முக்கிய பயனும். (9)

**मीढुष्टम शिवतम शिवो नः सुमना भव ।**
**परमे वृक्ष आयुधं निधाय कृत्तिं वसान आचर पिनाकं बिभ्रदागहि ॥ १०**

**மீடு⁴ஷ்டம ஶிவதம ஶிவோ ந: ஸுமனா ப⁴வ |**
**பரமே வ்ருக்ஷ ஆயுத⁴ம் நிதா⁴ய க்ருத்திம் வஸான**
**ஆசர பினாகம் பி³ப்⁴ரதா³க³ஹி** || 10

| | | |
|---|---|---|
| **மீடு⁴ஷ்டம** | - | (வணங்குகின்றவர்களுக்கு) வேண்டியவற்றை யெல்லாம் அளிக்கின்றவரே! |
| **ஶிவதம** | - | மங்களங்களை அளிக்கின்றவரே! |
| **ந:** | - | எங்களுக்கு, |
| **ஶிவ:** | - | மங்களங்களை அளிக்கின்றவராயும், |
| **ஸுமனா** | - | நல்ல எண்ணங்களுடன் கூடியவராகவும், |
| **ப⁴வ** | - | இருங்கள், |
| **பரமே** | - | மிகவும் உயர்ந்த, |
| **வ்ருக்ஷ** | - | (கைலாஸத்தில் உள்ள) ஆலமரத்தில், |
| **ஆயுத⁴ம்** | - | (தங்களுடைய பயங்கரமான) ஆயுதத்தை, |
| **நிதா⁴ய** | - | வைத்துவிட்டு, |
| **க்ருத்திம்** | - | புலித்தோலை, |
| **வஸான:** | - | அணிந்து கொண்டு, |
| **ஆசரம்** | - | எங்களை நோக்கி வாருங்கள், |
| **பினாகம்** | - | வில்லைமட்டும், |
| **பி³ப்⁴ரத்** | - | அலங்காரமாக தரித்துக்கொண்டு, (எங்கள் சமீபத்தில் வாருங்கள்.) |

**(கருத்துரை)** வணங்குகின்றவர்களுக்கு இஷ்டங்களை யெல்லாம் அளிக்கும் ஏ பரமேச்வர! தாங்கள் எங்களுக்கு மங்களங்களை அளிப்பவராகவும் எங்களிடம் நல்ல எண்ணங்களுடன் கூடியவராகவும், பிரீதியுள்ளவராகவும் இருக்கவேண்டும். அவ்வாறு தாங்கள் இருப்பதற்கு அடையாளமாகத் தங்களிடமுள்ள பயங்கரமான ஆயுதங்களை யெல்லாம் எங்கள் கண்ணில்படாதபடி கைலாஸத்தில் உள்ள உயர்ந்த ஆலமரத்தில் வைத்துவிட்டு, புலித்தோலை அணிந்து கொண்டு, அலங்காரமாக வில்லை மட்டும் கையில் வைத்துக்கொண்டு எங்கள் முன் காட்சியளிக்க வேண்டும்.

கைலாஸத்தில் நூறுயோஜனை உயரமுள்ளதும் நூற்று எழுபத்தைந்து யோஜனை அகலமுள்ளதுமான ஆலமரத்தில் ஸ்ரீ பரமேச்வரன் வீற்றிருக்கின்றார் என்றும், முமுக்ஷக்களுக்கு அந்த ஆலமரம் தான் சரணமாக இருக்கின்றது என்றும், வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அதில் ஆயுதங்களை வைத்துவிட்டு வரவேண்டுமென்று இங்கு வேண்டிக்கொள்ளப்படுகிறது. **"பிநாகஹஸ்த: க்ருத்திவாஸா:", ப்ராணேச்வர: க்ருத்திவாஸா: பிநாகீ"** முதலிய ச்ருதிகளில் "பிநாகம்" என்ற வில்லுடனும், புலித்

தோலுடனும்கூடிய பரமேச்வரனுடைய உருவமே பல சிரேயஸ்ஸுகளை அளிக்கக் கூடியதாகப் புகழப்பட்டிருக்கின்றபடியால், அவ்வித உருவத்துடன் காக்ஷியளிக்க வேண்டுமென்று இங்கு கோரப்படுகிறது.

பரமேச்வரன் புலித்தோலை அணிவதென்பது வேறு சிறந்த வஸ்திரம் கிடைக்காத காரணத்தால் அல்ல. பிருஹ்மா, இந்திரன் முதலிய அனைவருக்கும் ஸமஸ்த ஐச்வர்யங்களையும் அளிக்கும் பரமேச்வரனுக்கு, அவர் உடுத்திக்கொள்ள வஸ்திரம் கிடைக்கவில்லை என்பது பொருந்துமா? பின் ஏன் புலித்தோலை அணிந்துகொள்கிறுர்? என்றால் பரமேச்வரன் ஆத்மானந்தத்தையே அனுபவித்துக் கொண்டிருக்கிறார். வேறு விஷயஸுகத்தில் சற்றேனும் பற்றற்றவர். ஆதலால் விஷய ஸுகத்தில் பற்றுள்ளவர்கள் அணிந்துக்கொள்ளக்கூடிய சிறந்த வஸ்திரங்களையெல்லாம் தள்ளி விட்டு அதற்கு பதிலாக தோலையணிந்துகொள்ளுகிறுர். ஆதலால் பரமேச்வரனுக்கு புலித்தோலில்தான் பிரியமதிகம். ஆகவே அதை அணிந்துகொண்டு எங்கள்முன் வர வேண்டுமென்று வேண்டிக்கொள்ளப்படுகிறது.

:

இந்த மந்த்ரத்திற்கு ரிஷி - வைராஜர். சந்தஸ் - திருஷ்டுப். தேவதை - சம்பு.

**த்யானம்:**

**मङ्गलायतनं देवं युवानमतिसुन्दरम् ।**
**ध्यायेद्वनचराकारमागच्छन्तं पिनाकिनम् ॥**

**மங்க[3]லாயதனம் தே[3]வம் யுவானமதிஸுந்த[3]ரம் ।**
**த்[4]யாயேத்[3]வனசராகாரமாக[3]ச்ச[2]ந்தம் பிஞகினம் ॥**

**(இதன் பொருள்)** மிக அழகிய உருவத்துடன் கூடியவரும் வேடன் போன்ற உருவமுள்ளவரும், 'பிநாகம்' என்ற வில்லை கையில் தரித்துக்கொண்டிருப்பவரும், மங்களங்களுக்கெல்லாம் இருப்பிடமாயும், வாலிபப் பருவத்தில் உள்ளவருமான ஸ்ரீபரமேச்வரனை த்யானம் செய்யவேண்டும்.

இந்த மந்த்ரஜபத்தால் இராஜபயம், திருடர்களுடைய உபத்ரவம், ப்ராணபயம் முதலியவை யெல்லாம் விலகும். **(10)**

**विकिरिद विलोहित नमस्ते अस्तु भगवः ।**
**यास्ते सहस्र ँहेतयोन्यमस्मन्निवपन्तु ताः ॥ ११**

**விகிரித[3] விலோஹித நமஸ்தே அஸ்து ப[4]க[3]வ: ।**
**யாஸ்தே ஸஹஸ்ரஹும் ஹேதயோன்யமஸ்மன்னிவபந்து தா: ॥ 11**

**விகிரித[3]** - பலவிதமாக ஹிம்ஸிக்கின்ற பாபம், ரோகம், வறுமை முதலியவற்றை அழிக்கின்ற வரே!

| | | |
|---|---|---|
| **விலோஹித** | - | வெளுப்பு நிறமுடையவரே! |
| **ப⁴க³வ:** | - | ஐச்வர்யம் முதலிய ஆறுவித குணங்கள் நிரம்பியவரே! |
| **தே** | - | தங்களுக்கு, |
| **நம: அஸ்து** | - | நமஸ்காரம் இருக்கட்டும், |
| **தே** | - | தங்களுடைய, |
| **யா:** | - | எந்த, |
| **ஸஹஸ்ரம் ஹேதய:** | - | ஆயிரக்கணக்கான ஆயுதங்கள் இருக்கின்றனவோ, |
| **தா:** | - | அவைகள், |
| **அஸ்மத் அன்யம்** | - | எங்களுக்கு விரோதியான பாபத்தை, |
| **நிவ பந்து** | - | அழிக்கட்டும். |

**விலோஹித** என்ற சொல், வெளுப்புநிறமுள்ளவர், சிவப்பு நிறமுள்ளவர் என இருவித பொருள்களையுமுடையது. பரமேச்வரன் சில ஸந்தர்ப்பங்களில் சிவப்பாயும், சில ஸந்தர்ப்பங்களில் வெளுப்பாயும் இருப்பதாக வர்ணிக்கப்படுகின்றபடியால் இங்கு இருவிதபொருள்களும் பொருந்தும். பாபத்தால் ரோகம், வறுமை முதலிய பலவித துன்பங்களும் ஸம்பவிக்கக்கூடுமாதலால் அதை பரமேச்வரன் அவரது ஆயிரக்கணக்கான ஆயுதங்களால் அழித்து விடவேண்டுமென்று வேண்டிக்கொள்ளப் படுகிறது.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷி - புலஸ்த்யர். சந்தஸ் - திருஷ்டுப். தேவதை- சம்பு.

**த்யானம்:**

**प्रसन्नवदनं शान्तं चरितोद्वाह मण्डनम् ।**
**अम्बया सहितं ध्यायेत्सुरसङ्गैरभिष्टतम् ॥**

**ப்ரஸன்னவத³னம் ஶாந்தம் சரிதோத்³வாஹ மண்ட³னம் ।**
**அம்ப³யா ஸஹிதம் த்⁴யாயேத்ஸுரஸங்கை³ரபி⁴ஷ்டதம் ॥**

(**இதன் பொருள்**) மலர்ந்த முகத்துடன் விளங்குகின்றவரும், விவாஹவேஷம் பூண்டவரும், தேவக்கூட்டங்களால் போற்றப்பட்டவரும், சாந்தவடிவம் கொண்டவருமான ஸ்ரீ பரமேச்வரனை த்யானம் செய்ய வேண்டும்.

பொதுஜனங்களுடைய ஒற்றுமை, சத்ருஜயம், பயநிவிருத்தி முதலியவை இந்த மந்த்ரஜபத்தின் பயனாகக் கூறப்பட்டிருக்கின்றன. **(11)**

**सहस्राणि सहस्रधा बाहुवोस्तव हेतयः ।**
**तासामीशानो भगवः पराचीना मुखाकृधि ॥ १२**

**ஸஹஸ்ராணி ஸஹஸ்ரதா⁴ பா³ஹுவோஸ்தவ ஹேதய: ।**
**தாஸாமீஶானோ ப⁴க³வ: பராசீனா முகா²க்ருதி⁴ ॥ 12**

| | | |
|---|---|---|
| **பக³வ:** | - | பகவானே! |
| **தவ** | - | தங்களுடைய, |
| **பா³ஹுவோ:** | - | இரு கைகளிலும், |
| **ஸஹஸ்ராணி** | - | ஆயிரக்கணக்கான, |
| **ஹேதய:** | - | ஆயுதங்கள், |
| **ஸஹஸ்ரதா⁴** | - | பலவிதங்களாக இருக்கின்றன, |
| **ஈஷான:** | - | எல்லாவற்றையும் செய்ய சக்தியுள்ள தாங்கள், |
| **தாஸாம்** | - | அந்த ஆயுதங்களுடைய, |
| **முகா²** | - | நுனிகளை, |
| **பராசீனா** | - | எங்களுக்கு எதிராக இல்லாமல் திரும்பி இருப்பவைகளாக, |
| **க்ருதி⁴** | - | செய்யுங்கள். |

**(கருத்துரை)** பரமேச்வரனுடைய கையில் ஆயிரக்கணக்கான ஆயுதங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு ஆயுதமும் பலவிதமாக இருக்கின்றது. இதைக் குறிப்பி டவே **ஸஹஸ்ராணி**, **ஸஹஸ்ரதா** என இரு பதங்கள் போடப்பட்டிருக்கின்றன. அவ்வளவு ஆயுதங்களும் எங்களை நோக்கி வராமல் இருக்கும்படி செய்ய வேண்டும் என இங்கு வேண்டிக்கொள்ளப்படுகிறது.

இந்த மந்த்ரத்திற்கு ரிஷி - நாரதர். தேவதை - ஸ்ரீருத்ரன். சந்தஸ் - அனுஷ்டுப்.

**த்யானம்:**

**सर्वपापहरं देवं सर्वाभरणभूषितम् ।**
**सर्वायुधधरं ध्यायेत्सर्वलोकमहेश्वरम् ॥**

**ஸர்வபாபஹரம் தே³வம் ஸர்வாப⁴ரணபூ⁴ஷிதம் ।**
**ஸர்வாயுத⁴த⁴ரம் த்⁴யாயேத்ஸர்வலோகமஹேஶ்வரம் ॥**

**(இதன் பொருள்)** எல்லா பாபங்களையும் அழிக்கின்றவரும், எல்லா ஆபரணங் களாலும் அலங்கரிக்கப்பட்டவரும், எல்லா ஆயுதங்களையும் தரித்துக்கொண்டிருப்ப வரும், எல்லா உலகங்களுக்கும் ஈச்வரனுமான தேவனை த்யானம் செய்யவேண்டும்.

தெய்வாதீனமாக ஏற்படும் உபத்ரவங்கள் இந்த மந்த்ரஜபத்தால் நீங்கும். **(12)**

**பத்தாவது அனுவாகம் முற்றிற்று.**

## பதினொன்றுவது அனுவாகம்

**सहस्राणि सहस्रशो ये रुद्रा अधिभूम्याम् ।**
**तेषाँ सहस्रयोजनेऽवधन्वानि तन्मसि ॥ १**

**ஸஹஸ்ராணி ஸஹஸ்ரஶோ யே ருத்³ரா அதி⁴பூ⁴ம்யாம் ।**
**தேஷாம் ஸஹஸ்ரயோஜனே(அ)வத⁴ன்வானி தன்மஸி ॥ 1**

| | | |
|---|---|---|
| **ஸஹஸ்ராணி** | - | ஆயிரக்கணக்கான, |
| **யே ருத்³ரா:** | - | எந்தருத்ரர்கள், |
| **ஸஹஸ்ரஸா:** | - | ஆயிரம் ஆயிரமாக, |
| **பூ⁴ம்யாம் அதி⁴** | - | பூமிக்கு அதிபதிகளாக (இருக்கின்றனரோ), |
| **தேஷாம்** | - | அவர்களுடைய, |
| **த⁴ன்வானி** | - | வில்லுகளை, (ஸ்துதி, நமஸ்காரம் முதலிய வற்றுல்) |
| **ஸஹஸ்ரயோஜனே** | - | ஆயிரம் யோஜனை தூரத்திற்கப்பால் வெகு தூரத்தில், |
| **அவதன்மஸி** | - | அவிழ்க்கப்பட்ட நாண்கயிற்றை யுடையவைகளா கச் செய்கின்றோம். |

**(கருத்துரை)** பத்தாவது அனுவாகத்தில் ஸ்ரீபரமேச்வரன் வேண்டிக்கொள்ளப் பட்டார். இந்த பதினோறுவது அனுவாகத்தில் அவருடைய அம்சங்களான ருத்ர கணங்கள் பிரார்த்திக்கப்படுகின்றனர். ருத்ர கணங்கள், ஆயிரம் ஆயிரம் பேர் அடங்கிய கூட்டங்களாக, உலகத்தில் பலவிடங்களில் ஆங்காங்குள்ள பிராணிகளு டைய கர்மாக்களுக்கேற்றவாறு அவர்களை சிக்ஷிக்கவோ, அல்லது அவர்களுக்கு அருள்புரியவோ பரமேச்வரனுல் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். அவர்கள் மிக மகிமை வாய்ந்தவர்கள் என வேதத்திலும், மஹாபாரதம், சைவ புராணம் முதலிய நூல்களி லும் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. அவர்களை வேண்டிக்கொள்ளுவதற்காகவே இந்த அனுவாகம் ஏற்பட்டுள்ளது.

இதில் மொத்தம் 13 மந்த்ரங்கள். இந்த முதல் மந்த்ரத்தில் பூமிக்கு அதிபதிக ளான ருத்ரகணங்கள் குறிப்பிடப்படுகின்றனர். அவர்களுடைய வில்லுகள் நாங்கள் இருக்கும் இடத்திலிருந்து ஆயிரம் யோஜனை தூரத்திற்கப்பால் இருக்கவேண்டும். அவைகளும் நாண் ஏற்றப்பட்டவைகளாக இருந்தால் எங்களுக்கு பயமுண்டாகக்கூடு மாதலால், அவிழ்க்கப்பபட்ட நாண்களுடன் கூடியவைகளாக இருக்கவேண்டும் என்று இங்கு வேண்டிக்கொள்ளப்படுகிறது. **(1)**

**अस्मिन्महत्यर्णवेन्तरिक्षे भवा अधि । २**

**அஸ்மின்மஹத்யர்ணவேந்தரிக்ஷே ப⁴வா அதி⁴ । 2**

| | | |
|---|---|---|
| **அஸ்மின்** | - | இந்த, |

**மஹதி** - மிக விசாலமான,
**அர்ணவே** - ஸமுத்ரத்திலும்,
**அந்தரிக்ஷே** - ஆகாயத்திலும்,
**அதி⁴** - அதிபதிகளாக அவற்றின் மேல்,
**ப⁴வா:** - எந்த ருத்ரர்கள் இருக்கின்றனரோ,
**தேஷாம் ஸஹஸ்ர யோஜனே வத⁴ன்வானி தன்மஸி** - அவர்களுடைய வில்லுகளையும் ஆயிரம் யோஜன தூரத்திற்கப்பால்பட்டவை களாகச் செய்கின்றோம்.

இந்த மந்த்ரம் முதல் 9-வது மந்த்ரம் முடிய முதல் மந்த்ரத்தில் உள்ள

## तेषाँ सहस्रयोजनेऽवधन्वानि तन्मसि

**தேஷாஹும் ஸஹஸ்ரயோஜனே(அ)வத⁴ன்வானி தன்மஸி**

என்ற பகுதி சேர்த்துக்கொள்ளப்படவேண்டும். இவ்வாறு சேர்த்துக்கொள்ளப்பட வேண்டும் என்பதை சூசனம் செய்வதற்காகவே பத்தாவது மந்த்ரத்தில் இப்பகுதி மறுபடியும் படிக்கப்பட்டு இருக்கிறது. ஸமுத்ரமும் ஆகாயமும் அளவிடமுடியாதது. அதுபோல் அவற்றில் இருக்கும் அவற்றின் அதிபதிகளின் மஹிமைகளும் அளவிட முடியாததாம். **(2)**

## नीलग्रीवा: शितिकण्ठाः शर्वा अधः क्षमाचराः । ३

**நீலக்³ரீவா: ஶிதிகண்டா²: ஶர்வா அத⁴: க்ஷமாசரா: | 3**

**நீலக்³ரீவா:** - (காலகூட விஷத்தை புசித்த பின்) கருப்பான கழுத்தையுடையவர்களும்,
**ஶிதிகண்டா²:** - (அதற்குமுன்) வெளுப்பான கழுத்தை யுடையவர் களுமான,
**ஶர்வா** - எந்த ருத்ரர்கள்,
**அத⁴: க்ஷமாசரா:** - பூமிக்குங் கீழே அதற்கு அதிபதிகளாக சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றனரோ, (அவர்களுடைய வில்லு களை ஆயிரம் யோஜன தூரத்திற்கு தூரத்திற்கு அப்பால்பட்டவைகளாகச் செய்கின்றோம்.) **(3)**

## नीलग्रीवाः शितिकण्ठा दिवँरुद्रा उपश्रिताः । ४

**நீலக்³ரீவா: ஶிதிகண்டா² தி³வஹும் ருத்³ரா உபஶ்ரிதா: | 4**

**தி³வம் உபஸ்ரிதா:** - ஸ்வர்க்கத்திற்கு யஜமானர்களாக, அவ்விடத்தில் இருக்கும்,

| | | |
|---|---|---|
| **நீலக்³ரீவா: ஶிதிகண்டா²** | - | கருப்பாயும் வெளுப்பாயுமுள்ள கழுத்தையுடைய |
| **ருத்³ரா** | | எந்த ருத்ரர்கள் உண்டோ (அவர்களுடைய வில்லுகளை ஆயிரம் யோஜனை தூரத்திற்கு அப்பால்பட்டவைக ளாகச் செய்கின்றோம்.) |

இவ்வாறு பலவிடங்களில் உள்ள ருத்ரகணங்கள் எல்லாம் ருத்ரஸாரூப்யத்தைப் பெற்றவர்களாதலால் ருத்ரனுடைய உருவம் போலவே இவர்களுடைய உருவங்களும் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன.

**सहस्राणि सहस्रशः ஸஹஸ்ராணி ஸஹஸ்ரஶ:** முதல் இதுவரை உள்ள நான்கு ரிக்குகளும் சேர்ந்தது ஒரே மந்த்ரம். இதன் ரிஷி - துர்வாஸர். சந்தஸ் - அனுஷ்டுப். தேவதை - ருத்ரன்.

**த்யானம்:**

**दंष्टाकरालवदनं ज्वलज्ज्वलनमूर्धजम् ।**
**बिभ्राणं त्रिशिखं दीपं ध्यायेत् भुजगभूषणम् ॥**

**த³ம்’ஷ்டாகராலவத³னம் ஜ்வலஜ்ஜ்வலனமூர்த⁴ஜம் ।**
**பி³ப்⁴ராணம் த்ரிஶிக²ம் தீ³பம் த்⁴யாயேத் பு⁴ஜக³பூ⁴ஷணம் ॥**

**(இதன் பொருள்)** கோரமான பற்களுடன் கூடிய முகத்தையுடையவரும், எரியும் நெருப்பு போன்ற சிகையையுடையவரும், மூன்று ஜ்வாலையுள்ள தீபத்தை தரித்துக்கொண்டிருப்பவரும், ஸர்ப்பங்களை ஆபரணமாக அணிந்துகொண்டிருப்ப வருமான பரமேச்வரனை த்யானம் செய்யவேண்டும்.

சத்ருநாசம் இந்த மந்த்ரஜபத்தின் பயனும். **(4)**

**ये वृक्षेषु सस्पिञ्जरा नीलग्रीवा विलोहिताः । ५**

**யே வ்ருக்ஷேஷு ஸஸ்பிஞ்ஜரா நீலக்³ரீவா விலோஹிதா: । 5**

| | | |
|---|---|---|
| **வ்ருக்ஷேஷு** | - | மரங்களில், |
| **ஸஸ்பிஞ்ஜரா:** | - | இளம் புல் போன்ற நிறத்தையுடையவர்களும், |
| **நீலக்³ரீவா:** | - | கருப்பான கழுத்தையுடையவர்களும், |
| **விலோஹிதா:** | - | மிகவும் சிவப்பாயும், |
| **யே** | - | எந்தருத்ரர்கள் இருக்கின்றனரோ, (அவர்களுடைய வில்லுகளை ஆயிரம் யோஜனை தூரத்திற்கு அப்பால்பட்டவைகளாகச் செய்கின்றோம்.) |

பூமியில் இருப்பது போல் மரங்களில் அவைகளுக்கு அதிபதிகளாக பலவித நிறங்களுடன்கூடிய ருத்ரர்கள் வசிக்கின்றனர். அவர்களைப் பற்றியது இந்த மந்த்ரம். **(5)**

## ये भूतानामधिपतयो विशिखासः कपर्दिनः ॥ ६

**யே பூ4தாநாமதி4பதயோ விஶிகா2ஸ: கபர்தி3ன: || 6**

| | | |
|---|---|---|
| **பூ4தாநாம்** | - | பாலக்ரஹம் முதலிய பூத கணங்களுக்கு, |
| **அதி4பதய:** | - | அதிபதிகளாயும், |
| **விஸிகா2ஸ:** | - | தலையில் கேசங்கள் அற்றவர்களாகவும், |
| **கபர்தி3ன:** | - | ஜடையுடன் கூடியவர்களாகவும், |
| **யே** | - | எந்த ருத்ரர்கள் ருக்கின்றனரோ, (அவர்களுடைய வில்லுகளை ஆயிரம் யோஜனை தூரத்திற்கப் பால்பட்டவைகளாகச் செய்கின்றோம்.) பூதங்களுக்கு அதிபதிகளான ருத்ரர்களுள் சிலர், தலையில் கேசங்கள் அற்றவர்களாகவும், சிலர் ஜடைகளுடன் கூடியவர்களாகவும் இருக்கின்றனர். **(6)** |

## ये अन्नेषु विविद्ध्यन्ति पात्रेषु पिवतो जनान् ॥ ७

**யே அன்னேஷு விவித்3த4யந்தி பாத்ரேஷு பிவதோ ஜனான் || 7**

| | | |
|---|---|---|
| **அன்னேஷு** | - | புசிக்கும் உணவுகளில் (மறைவாக) இருக்கும், |
| **யே** | - | எந்த ருத்ரர்கள், |
| **ஜனான்** | - | ஜனங்களை, |
| **விவித்3த்4யந்தி** | - | ஹிம்ஸிக்கின்றனர்களோ (அவ்வாறே), |
| **பாத்ரேஷு** | - | குடிக்கப்படும் பால் முதலியவற்றில் அல்லது குடிப்பதற்கு ஸாதனமான பாத்திரங்க ளில் (மறைவாக இருக்கும் எந்த ருத்ரர்கள்), |
| **பிப3தா:** | - | குடிக்கும், |
| **ஜனான்** | - | ஜனங்களை (ஹிம்ஸிக்கின்றனரோ, அவர்களுடைய வில்லுகளை ஆயிரம் யோஜனை தூரத்திற்கு அப்பால்பட்டவைகளாக இருக்கும்படி செய்கின்றோம்.) |

உணவுகளில் மறைவாக இருக்கும் ருத்ரர்கள் உணவுகள் மூலம் பல வியாதிகளை உற்பத்திசெய்து ஜனங்களை ஹிம்ஸிக்கின்றனர்.

**ये वृक्षेषु** யே **வ்ருக்ஷேஷு** முதல் இதுவரை மூன்று ரிக்குகளும் சேர்ந்து, ஒரு மந்த்ரம். ரிஷி - சந்தஸ், முதலியவை முன் மந்த்ரம் போலவே. **(7)**

## ये पथां पथिरक्षय ऐलबृदा यव्युधः ॥ ८

**யே பதா2ம் பதி2ரக்ஷய ஐலப்3ருதா3 யவ்யுத4: || 8**

| | | |
|---|---|---|
| **பதா²ம்** | - | வைதிகங்களாயும், லௌகிகங்களாயும் உள்ள ஸமஸ்தமார்க்கங்களுக்கும், |
| **பதி²ரக்ஷய** | - | இரக்ஷகர்களாகவும், |
| **ஐலப்³ருதா³** | - | அந்நத்தையளித்து போஷிக்கின்றவர்களாயும், |
| **யவ்யுத⁴꞉** | - | பாபிகளை அழித்து அதன் மூலம் ஸன்மார்க்கங்களை இரக்ஷிக்கின்றவர்களாயு மிருக்கின்ற, |
| **யே** | - | எந்த ருத்ரர்கள் இருக்கின்றனரோ, (அவர்களுடைய வில்லுகளை ஆயிரம் யோஜனை தூரத்திற்கப்பாற் பட்டவைகளாக இருக்கும்படி செய்கின்றோம்.) |

**(கருத்துரை)** ஸத்புருஷர்களை லௌகிக வைதிக மார்க்கங்களில் ஈடுபடும்படி செய்து அவற்றின் பயன்களாகிற அந்நம் முதலியவற்றை அவர்களுக்கு அளிப்பதும், பாபிகளை அவற்றில் செல்லாமல் இருக்கும்படி செய்வதுமே, லௌகிக வைதிக மார்க்கங்களை இரக்ஷித்தல் என்பது. இங்கு **पथिरक्षयः பதி²ரக்ஷய꞉** என்றாலே மார்க்கங்களை இரக்ஷிக்கின்றவர்கள் என்று கிடைக்கும். ஆனால் உலகில் எவ்வளவு மார்க்கங்கள் உண்டோ அவை முழுவதையும் இரக்ஷிக்கின்றவர்கள் என்ற விசேஷார்த்தம் கிடைப்பதன் பொருட்டு **पथां பதா²ம்** என்று தனியாகவும் போடப்பட்டிருக்கிறது.

**“वसूयवो वसुपते वसूनाम्”**
**“गवामसि गोपतिरेक इन्द्र"**
**"निधीनां त्वा निधिपतिँ हवामहे"**

**“வஸூயவோ வஸுபதே வஸூனும்”**
**“க³வாமஸி கோ³பதிரேக இந்த்³ர"**
**"நிதீ⁴னும் த்வா நிதி⁴பதிஹும் ஹவாமஹே"**

முதலிய ஸ்தலங்களில் மேற்கூறியவாறு பொருள்களை உணர்த்துவதற்கென்றே இருதடவை பிரயோகம் செய்யப்பட்டிருப்பதைக் காணலாம்

**ऐलबृदः - इराशब्दः - अन्नवाची.**
**इराणां समूहः - ऐर, ऐरमेव ऐलं, तत् बिभ्रतीति ऐलभृतः,**
**त एव ऐलबृदाः- भकारस्य बकारः, तकारस्य दत्वं,**
**अकारस्य दीर्घश्च. छान्दसः, अन्नदातारः, इत्यथः ऐरभृतः**

**ஐலப்³ருத³꞉ - இராஶப்³த³꞉ - அன்னவாசீ.**
**இராணாம் ஸமூஹ꞉ - ஐர, ஐரமேவ ஐலம், தத் பி³ப்⁴ரதீதி ஐலப்⁴ரு'த꞉,**
**த ஏவ ஐலப்³ருதா³꞉ - ப⁴காரஸ்ய ப³கார꞉, தகாரஸ்ய த³த்வம்,**
**அகாரஸ்ய தீ³ர்க⁴ஶ்ச. சா²ந்த³ஸ꞉, அன்னதா³தார꞉, இத்யத²꞉ ஐரப்⁴ருத꞉**

என்ற சொல் பல மாறுதல்களையடைந்து **ऐलबृदाः ஐலப்³ருதா³:** என்று காணப்படு கிறது. இது வேதத்தில் மாத்திரம் காணப்படும். இதுபோல் **यव्युधः யவ்யுத⁴:** என்பதும் சாந்தஸமான ரூபந்தான். **(8)**

## ये तीर्थानि प्रचरन्ति सृकावन्तो निषङ्गिणः ॥ ९

**யே தீர்தா²னி ப்ரசரந்தி ஸ்ருகாவந்தோ நிஷங்கி³ண: ॥ 9**

| | | |
|---|---|---|
| **ஸ்ருகாவந்த:** | - | "ஸ்ருகா" என்ற கூர்மையான ஆயுதங்களை கையில் தரிப்பவர்களும், |
| **நிஷங்கி³ண:** | - | கத்தியை தரித்துக்கொண்டிருப்பவர்களுமான, |
| **யே** | - | எந்த ருத்ரர்கள், |
| **தீர்தா²னி** | - | கங்கை முதலிய தீர்த்தங்களில், |
| **ப்ரசரந்தி** | - | ஸஞ்சரித்துக்கொண்டிருக்கின்றனரோ (அவர்களுடைய வில்லுகளை ஆயிரம் யோஜனை தூரத்திற்கப்பால் பட்டவைகளாக இருக்கும்படி செய்கின்றோம்) சிலருக்கு தீர்த்த பலத்தை கொடுக்கவும், சிலருக்கு அதைத்தடுக்கவும், ஆயுத பாணிகளாக ருத்ரகணங்கள் தீர்த்தக்கரையில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கின்றனர். இம்மந்த்ரம் அவர்களைக் குறிப்பிடுகின்றது. |

8, 9 இரண்டு ரிக்குகளும் சேர்ந்து ஒரே மந்த்ரம். இதற்கு ரிஷி - தேவலர். சந்தஸ் - அனுஷ்டுப். தேவதை - ருத்ரன்.

**த்யானம்:** நான்காவது மந்த்ரத்தில் கூறப்பட்டது போலவே.

இந்த மந்த்ரஜபத்தால் ஸத்புத்ரலாபம் ஸித்திக்கும். **(9)**

## य एतावन्तश्च भूयाँसश्च दिशो रुद्रा वितस्थिरे ।
## तेषाँ सहस्रयोजनेऽवधन्वानि तन्मसि ॥ १०

**ய ஏதாவந்தஶ்ச பூ⁴யாஹும்ஸஶ்ச தி³ஶோ ருத்³ரா விதஸ்தி²ரே ।**
**தேஷாஹும் ஸஹஸ்ரயோஜனே(அ)வத⁴ன்வானி தன்மஸி ॥ 10**

| | | |
|---|---|---|
| **ஏதாவந்த:** | - | "ஸஹஸ்ராணி ஸஹஸ்ரச:" முதல் இதுவரை, எவ்வளவு ருத்ரர்கள் கூறப்பட்டனரோ, |
| **பூ⁴யாஹும்ஸஶ்ச** | - | இவர்களைவிட மிக அதிகமாக, கணக்கிட முடியாத, |
| **யே ருத்³ரா:** | - | எந்த ருத்ரர்கள், |

| | | |
|---|---|---|
| **தி³ஶோ விதஸ்தி²ரே** | - | எல்லா திக்குகளையும் வியாபித்துக் கொண்டிருக்கின்றனரோ, |
| **தேஷாஹும் ஸஹஸ்ரயோஜனே (அ)வத⁴ன்வானி தன்மஸி** | - | அவர்களுடைய வில்லுகளை ஆயிரம் யோஜனை தூரத்திற்கப்பால்பட்டவைகளாகச் செய்கின்றோம். |

இந்த மந்த்ரத்திற்கு ரிஷி - சந்தஸ் முதலியவையெல்லாம் முன் மந்த்ரம் போலவே.

**नमो रुद्रभ्यो ये पृथिव्यां येन्तरिक्षे ये दिवि येषामन्नं वातो वर्षमिषवस्तेभ्यो दश प्राचीर्दश दक्षिणा दश प्रतीची दशोदीचीर्दशोध्वस्तेभ्यो नमस्तेनो मृडयन्तु ते यं द्विष्मो यश्च नो द्वेष्टि तं वो जम्भे दधामि ॥ ११**

**நமோ ருத்³ரப்⁴யோ யே ப்ருதி²வ்யாம் யேந்தரிக்ஷே யே தி³வி யேஷாமன்னம் வாதோ வர்ஷமிஷவஸ்தேப்⁴யோ த³ஶ ப்ராசீர்த³ஶ த³க்ஷிணா த³ஶ ப்ரதீசீ த³ஶோதீ³சீர்த³ஶோத்⁴வஸ்தேப்⁴யோ நமஸ்தேனோ ம்ருட³யந்து தே யம் த்³விஷ்மோ யஶ்வ நோ த்³வேஷ்டி தம் வோ ஜம்பே⁴ த³தா⁴மி ॥ 11**

இதை மூன்று மந்த்ரங்களாகப் பிரித்துக் கொள்ளவேண்டும்.

**(१) नमो रुद्वेभ्यो ये पृथिव्यां येषामन्नमिषवस्तेभ्यो दशप्राचीर्दश ... दधामि ।**
**(२) नमो रुद्वेभ्यो येऽन्तरिक्ष येषां वात इषवस्तेभ्यो ... ... ... दधामि ।**
**(३) नमो रुद्रेभ्यो ये दिवि येषां वर्ष मषवस्तेभ्यो दश प्राची: .. ... ... दधामि ॥**

(1) **நமோ ருத்³வேப்⁴யோ யே ப்ருதி²வ்யாம் யேஷாமன்னமிஷவஸ்தேப்⁴யோ த³ஶப்ராசீர்த³ஶ ... ... ... த³தா⁴மி ।**
(2) **நமோ ருத்³வேப்⁴யோ யே(அ)ந்தரிக்ஷ யேஷாம் வாத இஷவஸ்தேப்⁴யோ ... ... ... த³தா⁴மி ।**
(3) **நமோ ருத்³ரேப்⁴யோ யே தி³வி யேஷாம் வர்ஷ மஷவஸ்தேப்⁴யோ த³ஶ ப்ராசீ: .. ... ... த³தா⁴மி ॥**

**முதல் மந்த்ரத்தின் பதவுரை:-**

| | | |
|---|---|---|
| **யே** | - | எந்த ருத்ரர்கள், |
| **ப்ருதி²வ்யாம்** | - | பூமியில் (இருக்கின்றனரோ), |
| **யேஷாம்** | - | எவர்களுக்கு, |
| **அன்னம்** | - | (நாம் உண்ணும்) உணவுப் பொருள்கள், |
| **இஷவ:** | - | அம்புகள்போல் ஹிம்ஸைக்கு ஸாதனமாக இருக்கின்றனவோ, |

| | | |
|---|---|---|
| **தேப்⁴ய: ருத்³ரேப்⁴ய:** | - | அந்த ருத்ரர்களின்பொருட்டு, |
| **தஸா** | - | பத்து விரல்களையும், |
| **ப்ராசீ:** | - | கிழக்குமுகமாக உள்ளவைகளாகவும், |
| **த³ஸ த³க்ஷிணா** | - | பத்துவிரல்களையும் தெற்குமுகமாக உள்ளவை களாகவும், |
| **த³ஸ ப்ரதீசீ:** | - | பத்து விரல்களையும் மேற்குமுகமாக உள்ளவை களாகவும், |
| **த³ஸோதீ³சீ:** | - | பத்து விரல்களையும் வடக்குமுகமாக உள்ளவை களாகவும், |
| **தஸோ ஊர்த்⁴வா:** | - | பத்துவிரல்களையும் மேல்முகமாக இருப்பவைக ளாகவும் (செய்கின்றேன்). அந்தந்த திக்குகளை நோக்கிக் கும்பிடுங்காலத்தில் பத்து விரல்களும் அந்தந்த தீக்குகளை நோக்கி நிற்கும். ஆதலால் அந் தந்த திக்குகளை நோக்கி அஞ்சலி செய்கின்றேன் என்பது பொருள். இதனுல் காயிகநமஸ்காரம் கூறப்பட்டது. |
| **தேப்⁴ய: நம:** | - | (அந்தந்த ருத்ரர்களின்பொருட்டு நமஸ்காரம்.) இதனுல் மானஸிக நமஸ்காரம் கூறப்பட்டது. மந்த்ரத்தின் ஆதியில் உள்ள **நமோ ருத்³ரேப்4ய:** என்பதால் வாசிக நமஸ்காரம் கூறப்பட்டது. |
| **தே** | - | அந்த ருத்ரர்கள், |
| **ந:** | - | எங்களை, |
| **ம்ருட³யந்து** | - | ஸுகமுள்ளவர்களாகச் செய்யட்டும், |
| **தே** | - | மூன்று கரணங்களாலும் நமஸ்காரம் செய்த நாங்கள், |
| **யம்** | - | யாரை, |
| **த்³விஷ்ம** | - | வெறுக்கின்றோமோ, |
| **யஷ்வ** | - | யார், |
| **ந:** | - | எங்களை, |
| **த்³வேஷ்** | - | வெறுக்கின்றானோ, |
| **தம்** | - | அந்த இருவித மனிதர்களையும், |
| **வ:** | - | உங்களுடைய, |
| **ஜம்பே⁴** | - | திறந்த வாயில், |
| **த³தா⁴மி** | - | தள்ளிவிடுகின்றோம். (அவர்களை அழித்து எங்களை இரக்ஷிக்க வேண்டும்) என்பது பொருள். |

**(கருத்துரை)** **अन्नमिषव: அன்னமிஷவ:** பாபிகளை ஹிம்ஸிக்க அவரவர்கள் உண்ணும் உணவை ஆயுதமாக ஸ்ரீருத்ர கணங்கள் உபயோகப்படுத்திக்கொள்ளு கின்றனர். அதாவது அபத்யமான உணவையோ அல்லது அதிக உணவையோ உட் கொள்ளும்படி செய்து, அதனுல் வியாதிகளை உண்டுபண்ணி பலரை ஹிம்ஸிக்கின் றனர். சிலருக்கு உணவே இல்லாமல் செய்து மிகுந்த பசியைக்கொடுத்து அதன்

மூலம் ஹிம்ஸிக்கின்றனர். வேறுசிலரை உணவுக்காகத் திருடும்படிசெய்து அதன் மூலம் தண்டனைக்குள்ளாக்கி ஹிம்ஸிக்கின்றனர். இவ்வாறு பாபிகளை ஹிம்ஸிக்கும் விஷயத்தில் உணவே காரணமாக இருக்கின்றபடியால் அதுவே அம்பு எனக் கூறப்பட்டிருக்கிறது.

இம்மாதிரியாகவே 2 வது மந்த்ரத்தில் **वात इषव: வாத இஷவः** என்றும், மூன்றுவது மந்த்ரத்தில் **वर्षमिषव: வர்ஷமிஷவः** என்றும் கூறப்பட்டிருப்பதற்குப் பொருள்களைக்கொள்ள வேண்டும். **वात इषव: வாத இஷவः** காற்றை அம்பாகக் கொண்டவர்கள்.

அதிகமான காற்றை உண்டுபண்ணியோ, அல்லது வாதரோகத்தை உண்டு பண்ணியோ பாபிகளை ஹிம்ஸிக்கின்றபடியால் காற்றே அம்புகள் எனக் குறிப்பிட்டிருக்கிறது.

**वर्षमिषव: வர்ஷமிஷவः** மழையை அம்பாகக் கொண்டவர்கள்.

அதிக மழையை அளித்தோ, அல்லது மழையே இல்லாமல் செய்தோ பாபிகளை ஹிம்ஸிக்கின்றபடியால் மழையே அம்புகள் எனக்குறிப்பிடப்பட்டிருக்கிறது.

**2 - வது மந்த்ரம்: -**

| | | |
|---|---|---|
| **அந்தரிக்ஷே** | - | ஆகாயத்தில், |
| **யே** | - | எந்த ருத்ரர்கள் இருக்கின்றனரோ, |
| **யேஷாம்** | - | எவர்களுக்கு, |
| **வாத:** | - | காற்று, |
| **இஷவ:** | - | அம்புகளோ, (ஹிம்ஸைக்கு ஸாதனமான ஆயுதங்களோ) அவர்களின் பொருட்டு நமஸ்காரம். மற்றவை யெல்லாம் முதல் மந்த்ரம் போலவே. |

**3 - வது மந்த்ரம்: -**

| | | |
|---|---|---|
| **தி³வி** | - | ஸ்வர்கத்தில், |
| **யே** | - | எந்த ருத்ரர்கள் இருக்கின்றனரோ, |
| **யேஷாம்** | - | எவர்களுக்கு, |
| **வர்ஷ** | - | மழை, |
| **இஷவ:** | - | அம்புகளோ, (அவர்களின் பொருட்டு நமஸ்காரம்) மற்றவை யெல்லாம் முதல் மந்த்ரம் போலவே. |

**नमो रुद्रेभ्यः நமோ ருத்³ரேப்⁴ய:** முதல் **दधामि த³தா⁴மி** வரை மூன்று யஜுஸ் ஸுக்களும் சேர்ந்து ஒரே மந்த்ரம், இதற்கு தேவதையும் ரிஷியும் ருத்ரனே. **"ஸஹஸ்ராணி ஸஹஸ்ரச"**; என்றவிடத்தில் கூறப்பட்ட த்யானத்தையே இதற்கும் த்யானமாகக் கொள்ளவேண்டும். **(11), (12), (13)**

**त्र्यंबकं यजामहे सुगन्धिं पुष्टिवर्धनम्।**
**उर्वारुकमिव बन्धनान्मृत्योर्मुक्षीय मामृतात् ॥**

**த்ர்யம்ப³கம் யஜாமஹேஸுக³ந்தி⁴ம் புஷ்டிவர்த⁴னம் ।**
**உர்வாருகமிவ ப³ந்த⁴ஞன்ம்ருத்யோர்முக்ஷீய மாம்ருதாத் ॥**

| | | |
|---|---|---|
| **ஸுக³ந்தி⁴ம்** | - | நல்ல வாஸனையையுடையவரும், |
| **புஷ்டிவர்த⁴னம்** | - | எல்லாவற்றிலும் புஷ்டியை அபிவிருத்தி செய்கின்றவரும், |
| **த்ர்யம்ப³கம்** | - | மூன்று கண்களை யுடையவருமான ஸ்ரீ ருத்ரனை, |
| **யஜாமஹே** | - | போற்றுகின்றோம், |
| **வர்த⁴நாத்** | - | காம்பிலிருந்து, |
| **உர்வாகுகமிவ** | - | வெள்ளிரிப்பழம் (நழுவி விழுவது) போல், |
| **ம்ருத்யோ:** | - | ஸம்ஸார பந்தத்திலிருந்து, |
| **முக்ஷீய** | - | விடுதலையடைய வேண்டும், |
| **அம்ருதாத்** | - | மோக்ஷத்திலிருந்து, |
| **மா(முக்ஷீய)** | - | விடுதலையடையவேண்டாம். |

ருத்ராத்யாயத்துடன் இந்த மந்த்ரத்தையும் அடுத்துள்ள சில ரிக்குகளையும் சேர்த்து பாராயணம் செய்வதென்பது ஸம்ப்ரதாயத்திலிருந்து வருகிறது. இவைகளும் ஸ்ரீருத்ரனையே போற்றும் மஹா மந்த்ரங்களாக இருக்கின்றபடியால் ஸ்ரீருத்ரத்துடன் சேர்த்துப் படிக்கப்படுகின்றனபோலும்.

இந்த மந்த்ரத்தின் கருத்து:

**திவ்யகந்த: திவ்யரஸ:** என்று உபனிஷத் கூறுகின்றபடி ஸ்ரீ பரமேச்வரனது திருமேனியைச் சேர்ந்த வாஸனை, வர்ணம் முதலியவை எல்லாமே மிகச் சிறந்தவைகளாக இருக்கின்றபடியால் **सुगन्धि ஸுக³ந்தி⁴** - எனக் கூறப்படுகிறது. மேலும் ஸ்ரீ பரமேச்வரனை அண்டியவர்களுக்கு எல்லா வஸ்துக்களிலும் புஷ்டியை (குறைவற்றிருத்தலை) ஸ்ரீபரமேச்வரன் அபிவிருத்தி செய்கின்றார். அப்படிப்பட்ட பரமேச்வரனைப் போற்றும் நாங்கள், பழுத்த வெள்ளரிப்பழம் காம்பிலிருந்து அனாயாசமாக நழுவி விழுவது போல், ஸம்ஸார பந்தத்திலிருந்து சிரமமின்றி விடுதலையடைய வேண்டும். மோக்ஷத்திலிருந்து அதாவது மோக்ஷஸாதனமான நிவிருத்தி மார்க்கத்திலிருந்து ஒருபொழுதும் நாங்கள் விலகாமல் இருக்கவேண்டும்.

